# Essays and Lectures.



M. Chinniah Chettiar,
*Mahipalanpatti.*

---

Viveka Bhanu Press, Madura.

உ

கடவுள் துணை.

மகிபாலன்பட்டி

மு. சின்னையாசெட்டியாரின்

# வியாசங்களும் உபந்நியாசங்களும்

---

இவை

கானாடுகோத்தான் மகா-ள-ள-ஸ்ரீ

சா. ராம. மு. சித.

பெத்தாச்சிசெட்டியார் அவர்களால்



மதுரை:

விவேகபாநு அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

---

1913.

விலை அணா 12] [தபாற்கூலி வேறு.

# முகவுரை.



ஸ்ரீமான், எம். சின்னையா செட்டியாரவர்கள் எழுதிய "வியாசங்களும் உபந்நியாசங்களும்" என்ற புத்தகம் வரப்பெற்று முழுதும் படித்துப்பார்த்து அளவில்லாத சந்தோஷமடைந்தேன். விஷயம், சொல்வளம், விவகரிக்குமுறை, நூலின்பயன், இவைகள் நன்குபொருந்த இயற்றப்படும் பிரபந்தங்களே மேம்பாடுடையன வென்பது ஆன்றோர்களின் கொள்கையாயினும் அக்கொள்கையை நன்குமதித்து, நூலியற்றும் நூலாசிரியர்கள் இக்காலத்தில் வெகு பேரிருப்பதாகத்தெரியவில்லை. சில சமயங்களில் இக்காலத்துக்கு அவசியமில்லாத விஷயங்களைப்பற்றி யெழுதுகிறவர்களும் சொற்ப காலத்திற்கு விநோதத்தை பயப்பனவாயினும் பிறகு பயனற்றன வாக முடியும் விஷயங்களைப்பற்றி யெழுதுகிறவர்களும் உண்டு. விஷயங்கள் மேன்மையுடையனவாயினும் படிப்பவர்களின் பழக்கத் திலில்லாத அரும்பதங்களையும் அபூர்வப் பிரயோகமுள்ள கொடுஞ் சொற்களையும் கோத்து பொருளொன்றும் வெளியாகாதிருக்கும்படி மறைத்துப் பாக்களையும் வசனகாவியங்களையும் எழுதி பிறவைதைக் கின்ற புண்ணிய புருஷர்கள் வெகு பேரையும் பார்க்கின்றோம். ஒரு விஷயத்தை விவகரிக்குமுறை ஜனங்களின் பழக்கத்திற்கு ஒத்த வாறில்லாமற் போனாலும் நூலில் உலக அனுபவத்திற்குப் பொருத்த மான நியாயம் அல்லது விவகாரம் அடங்கி யிராவிட்டாலும் அந் நூலை உலகத்தார் அவமதிப்பார்களே தவிர அதனால் யாவர்க்கும் ஒரு பயனும் உண்டாகாது. அந்நூலை இயற்றிய வித்துவானையும் அறிஞர்கள் கொண்டாடமாட்டார்கள், ஆதலாலன்றோ

> புவியினுக் கணியா யான்ற பொருடந்து புலத்திற் றாகி
> அவியகத் துறைகடாங்கி யைந்திணை நெறிய ளாவிச்
> சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச்சான்றோர்
> கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்.

எனக் கவிச்சக்கிரவர்த்தியாகிய கம்பரும் வழுத்தியிருக்கின்றார். அம் முறையை நன்குணர்ந்த நமது செட்டியாரவர்கள் பற்பல

விஷயங்களை சுலபமும் அழகும் வாய்ந்த நடையில் உலக அனுபவத்தை நன்கு விளக்கி முதிர்ந்தோரும் வாலிபர்களும் படித்து அறிய வேண்டிய பல அம்சங்களைப் புகட்டி பல உபந்நியாசங்களான கோவையாகச்சேர்த்து இயற்றியிருப்பதால் இஃதோர் "மறுவற்றமாணிக்கம்" என யாம் வியந்து கொண்டாடத்தக்கதாகும். அப்படிக்கோக்கப்பட்டிருக்கும் பல உபந்நியாசங்களுள் கடவுளும் அன்பும் என்னும் உபந்நியாசத்தை முதலாவதாகவும், ஆங்கிலேய அரசாக்ஷியின் மாண்பைப்பற்றிய உபந்நியாசத்தை இரண்டாவதாகவும் வைத்து மற்ற உபந்நியாசங்களையும் விஷயங்களின் மேன்மை தாழ்மைக்குத் தக்கவாறு ஒன்றன்பின் ஒன்றாக அமைத்திருக்கும் விநயத்தை நான் மகிழ்ந்துகொண்டாடுகிறேன். மானிடர்கள் பெறமுயலவேண்டியவைகளான நான்கு புருஷார்த்தங்களையும் ஒவ்வொரு உபந்நியாசமும் விரித்துக் கூறுவதாக இச்சிறிய புத்தகம் அமைந்திருப்பதால் இது எக்காலத்திலும் சிறப்புவாய்ந்து நடைபெறுமென்பதிலும் இதையியற்றி அச்சிட்டு உலகத்திற்கு அளித்திருக்கும் நமதுசெட்டியாரவர்களுடைய அறிவிற்கும் பெருமைக்கும் இதுவே ஒரு அறிகுறியாக புகழ்பெற்று விளங்குமென்பதிலும் சற்றேனும் ஐயமில்லை. கல்வி நுட்பமும் பரோபகார சிந்தையும் அறத்திலன்பும் பெருகி நிற்கும் நமது செட்டியாரவர்கள் அரோக திடகாத்திரத்துடன் இவ்வுலகத்தின்கண் பல்லாண்டு இருந்து இந்நூலைப்போல் இன்னும் பல நூல்கள் இயற்றி அளித்து மன்னுலகத்தை வாழ்வித்து எல்லா இகபரசாதனங்களையும் அடைந்து விளங்கும்படி எல்லாம் வல்ல சதாசிவம் அருள்புரியுமாக.

பி. எஸ். சுப்பிரமணிய ஐயர்,

அக்கிராஸநாதிபதி, தமிழ்ச்சங்கம், மதுரை.

---

# அபிப்பிராயங்கள்.

**The Honourable Doctor Sir.**

**S. Subramania Iyer Avl.**

**B. L., L. L. D., K. C. I. E.,**

**Retired High Court Judge,**

***and Vice-President Theosophical Society,* MADRAS.**

*Dear Sir !*

Your pamphlet and your letter came to hand duly. I am very gratified to find that one in your position is endeavouring to Educate your community on the right lines as you well observe so influential a Section of the public of this presidency as the Nagarathars can if it exerts itself render great Service to the country.

*Yours Sincerely,*

**S. Subramaniam.**

(தமிழ் மொழிபெயர்ப்பு)

சென்னை பென்ஷன் ஐக்கோர்ட் ஜட்ஜும், பிரஹ்மக்ஞான சபையின் உப அக்கிராசநாதிபதியுமாகிய ஆனரபில் டாக்டர் சர்.

எஸ். சுப்பிரமணிய ஐயர் அவர்கள்.

B. L., L. L. D., K. C. I. E.

அன்புள்ள ஐயா !

*தங்கள் சிறு நூலும், கடிதமும் சரிவரக் கிடைத்தன. நம் இராஜதானியில் நகரத்தார் போன்ற செல்வாக்குள்ள வகுப்பினர் மட்டும் தக்கவாறு முயற்சிப்பார்களானால் தேச நன்மைக்காக மிகவும் உழைக்கக் கூடுமென்று நீங்கள் கண்டறிந்தது முற்றிலும் சரியே. தங்களைப்போன்ற நிலைமையிலுள்ள ஒருவர் தம் வகுப்பினருக்கு நேரிய வழியில் கற்பிக்க முயன்று வருவதைக்கண்டு மிகத் திருப்தி அடைந்து வருகிறேன்.*

இங்ஙனம் தங்கள் விசுவாசமுள்ள,

எஸ். சுப்பிரமணியம்.

## மதுரை பிரஹ்மக்ஞான சங்கத்தலைவரும் 'பூர்ணசந்திரோதயம்' பத்திராதிபருமான ஸ்ரீமான் ப. நாராயணஐயர் அவர்கள், B. A., B. L., F. T. S.

மகா-ள-ள-ஸ்ரீ எம். சின்னையா செட்டியாரவர்கட்கு ஸர்வாபீஷ்டமு முண்டாவதாக அநேக ஆசீர்வாதம். தாங்களனுப்பிய வியாசங்களும், உபந் நியாசங்களும் (Essays and Lectures) என்ற பெயருள்ள புஸ்தகத்தைப் பெற்றேன். முழுவதையும் படித்துப் பார்த்தேன். அவைகளெல்லாம் எளிய செந்தமிழில் அழகாக எழுதப் பட்டிருக்கின்றன. விஷயங்கள் மிகவும் பயனுள்ளவைகள். நம்மவர்கள் முன்னுக்கு வருகிறதற்கு அனுகூலமான நலமமைந்த புத்திமதிகள் அவைகளின்கண் வெளியிடப்பட்டிருக்கின்றன. நாட்டுக்கோட்டையாரின் அபிவிருத்தியை உத்தேசித்துச் சிறப்பாக எழுதப்பெற்றுள்ள வியாசங்களாயினும் ஏனையர்களுக்கும் பிரயோஜனகரமானவைகளே. இக்காலத்தில் நாட்டுக்கோட்டையார்களில் அனேகர் கல்விப் பயிற்சிபெற்று வெளிவந்து ஏனையரும் கல்விப்பயிற்சி அடையவேண்டுமென்று முயன்று வருதல் இனி நம் தேசத்துக்கு வரும் நற்காலத்தின் ஸூசனையாம். நாட்டுக்கோட்டையார்களிடம் இப்போது ஏராளமான பொருட் செல்வமிருக்கிறது. அத்துடன் கல்விச் செல்வமும் உண்டாகும் பக்ஷத்தில் காலத்திற்கு ஏற்ப புதிய முறைகளில் நலந்தரும் விஷயங்களை அவர்கள் செய்விப்பார்கள். தேசத்திற்கு க்ஷேமமுண்டாகும். அவர்களை இம்முறையிற் றூண்டுவதற்கு இப்புத்தகம் நல்ல சாதனமாகும். பொதுப்படையாக நம்முடைய ஒழுக்கங்களில் அனேக சீர்திருத்த முறைகளைப் பலவிடங்களில் தெளிவாகச் சொல்லி யிருக்கிறீர்கள். தவிரவும் ஆங்கிலம் படித்த சிலர் தமிழ் பாஷையை உதாஸீனப்படுத்தி வருகின்றமையை நன்குணர்ந்து அவர்கள் மனங்களிற் பதியும்படியாகத் தமிழ்ப்பாஷையின் உயர்வையும் அதன் அபிவிருத்தியால் ஜனங்களுக்கு உண்டாகக் கூடிய நன்மையையும், அப்பாஷையை அலக்ஷியம் செய்தலால் நேரிடும் தீமையையும் பன்முறை வற்புறுத்திச் சொல்லியிருக்கின்றீர்கள். அவர்களும் இப்புத்தகத்தைப் படிப்பாராகில் தமிழ் பாஷையின் மேலுள்ள அலக்ஷியத்தை விட்டொழிப்பாரென்பதில் சந்தேகமில்லை. தங்களுடைய புத்தகத்தைப் படிக்கிற ஒவ்வொருவரும் ஒரு நலம் பெறுவாரென்பது என்னுடைய அபிப்பிராயம். இதுபோன்ற வியாசங்களும், உபந்நியாசங்களும் தாங்கள் இன்னும் செய்து வரும்படியாகத் தீர்க்காயுஸையும் சக்தியையும் தங்களுக்கு ஈசுவரன் அருள வேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
ப. நாராயண ஐயர்.

தேவகோட்டை ஜமீந்தார் மகா-ா-ா-ஸ்ரீ
அள. அரு. ராம. அருணாசலஞ்செட்டியாரவர்கள்.

ஐயா!

தங்களுடைய 4–12–12ன் கடிதமும் புக்போஸ்டிலனுப்பிய வியாசங்களும் உபந்நியாசங்களும் (Essays and Lectures) என்றபுத்தகமும் வந்து சேர்ந்தன. புத்தகத்தையும் பார்வையிட்டேன். விஷயங்கள் நன்றாய் இருக்கின்றன. நிரம்ப சந்தோஷம்.

தேவகோட்டை.
7—12—12.

அருணாசலஞ் செட்டி.

---

காரைகோத்தான் மகா-ா-ா-ஸ்ரீ
சா. ராம. மு. அ. அண்ணாமலை செட்டியாரவர்கள்

ஐயா!

தங்களால் எழுதப்பட்ட வியாசங்களையும் செய்யப்பட்ட பிரசங்கங்களையும் ஒரு புத்தக ரூபமாக அச்சிட்டு வெளிப்படுத்தி அதில் எனக்கொரு காப்பி அனுப்பினதைப்பற்றி நிரம்பச் சந்தோஷமுள்ளவனாக யிருக்கிறேன். ஷை புத்தகம் உபயோகமுள்ள பல விஷயங்களை அடக்கினதாயும் இனிமையும் எளியதுமான நடையில் எழுதப்பட்டதாயுமிருக்கின்றது.நமது நாட்டுக்கோட்டையார் இங்கிலீஷ், தமிழ் ஆகிய இரண்டு பாஷைகளையும் நன்றாய்க் கற்றுக் கொள்ள வேண்டுமென்றும், ஆசார விஷயங்களை காலதேச வர்த்தமானத்தை அனுசரித்து மாற்றிக்கொள்ள வேண்டுமென்றும், இப்போது அவர்கள் செய்துவரும் கோவில்கட்டுதல் வேதபாடசாலை ஏற்படுத்துதல் சத்திரம்கட்டி பிராமணர்களுக்கு அன்ன மளித்தல் இவைகளோடு தற்காலத்தில் நாகரீகமானதும் உண்மையில் பொது ஜனங்கள் எல்லோருக்கும் உபயோகப்படும்படியானதும் கற்றறிந்தோரால் புகழப்படக்கூடியதுமான தர்மங்களைச் செய்யவேண்டுமென்றும் நீங்கள் எழுதியிருக்கும் விஷயங்கள் மிகவும் மெச்சத் தகுந்ததே. கல்வி ஆசாரம் தர்மம் இந்தவிஷயங்களில் நீங்கள் எழுதியிருப்பதை நமது ஜாதியார் அனுசரிப்பார்களானல் அதிக மேன்மையடைவார்க ளென்பதிற் சந்தேகமில்லை. பிரிட்டிஷ் அரசாக்ஷியில் நமது இந்தியதேசமும் முக்கியமாய் நமது நாட்டுக்கோட்டையாரும் அடைந்திருக்கும் நன்மைகளைப்பற்றி உங்கள் புத்தகத்தில் சொல்லப்படுவது முற்றிலும் உண்மையே.நமது ஜாதியார் மேன்மையடைவதற்கு அவசியமாக வேண்டியவழிகளைப்பற்றி இவ்வளவு உபயோகமுள்ள ஒரு புத்தகத்தை அச்சிட்டு வெளிப்படுத்தினதற்காக நமது ஜாதியார் உங்களிடத்தில் நன்றியறிதலுள்ளவர்களாக இருப்பார்களென்பது எனது அபிப்பிராயம்.

தங்கள்,

சா. ராம. மு. அ அண்ணாமலைசெட்டி.

காரைக்கோத்தான் மகா-ா-ா-ஸ்ரீ

சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியாரவர்கள்.

---

அன்ப !

தங்கள் அருமையான வியாசங்களும் இனிமையான உபந்நியாசங்களும் அடங்கிய (Essays & Lectures) புத்தகம் வரப் பெற்றுப் பேருவகை யெய்தினேன்.

பரோபகாரார்த்தமாய் இத்தகைய புத்தகமொன்றை அச்சிட்டுதவிய தாங்கள் பொதுஜனங்களிடமும் நமது சகோதரர்களிடமும் பாராட்டும் உண்மையன்பு (Real Love) மிகவும் மெச்சத்தகுந்ததே.

கல்வி கேள்விகளிற் சிறந்த தங்கள் அருமையான அறிவினின்றும் வெளிவந்திருக்கும் இவ்வருமைப் புத்தகத்தைப் பற்றிச் சிறியேன் அபிப் பிராயப்படுவது வேறென்னே?

பொதுவாக இப்புத்தகத்தில் எழுதப்பெற்றிருக்கும் ஒவ்வொரு விஷ யமும், மிக அழகாகவும் இனிமையான நடையிலும் இலக்கண முறையோ டும் உண்மை, அறிவு, சாந்தம், உறுதி, தைர்யம் முதலிய பல நன்மைகளை உண்டுபண்ணக் கூடியதாகவும் இருக்கிறது. கால தேச வர்த்தமானங்கட் கேற்ப தங்கள் தங்கள் நடையுடை பாவனைகளை மாற்றி "தேசத்தோ டொத்துவாழ்" என்னும் பழமொழிக்கிணங்க ஆசாரங்களில் தற்காலம் சீர்தி ருந்திவரும் நமது ஜாதியாருக்குத இப்புத்தகம் மிகவும் உபயோகமான தென்பதேயாம்.

தங்கள் நண்பன்,

சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டி.

---

# முன்னுரை.



இப்புத்தகத்தில் கல்வி, ஆசார சீர்திருத்தம், பொதுவான சில நீதிகள், இன்னும் மனித வாழ்வின் பிரயோஜனங்களைப் பற்றியும் என் சிற்றறிவுக்கு எட்டிய விஷயங்களை ஆங்காங்கு சுருக்கமாக எடுத்துக்காட்டி யிருக்கின்றேன்.

இதிலடங்கிய விஷயங்களுள், சில முன்னரே சுதேசமித்திரன், வைசியமித்திரன், வித்தியாபாநு முதலிய பல பத்திரிகைகளில் வெளிவந்துள்ளன. அவற்றைக் கண்ணுற்ற அறிஞர்கள் பலர் இவ்விஷயங்களைத் தொகுத்து ஒரு புத்தகமாக வெளியிட்டால் பலருக்கும் உபயோக மாகுமென்று விரும்பி நேரிலும், கடிதவாயிலாகவும் எனக்கு அறிவித்தார்கள்.

என்னுடைய அபிப்பிராயங்கள், அறிஞர்களால் அங்கீகரிக்கப் பெற்று பொது ஜனங்களுக்குப் பிரயோஜனப்படுமானால் அது எனக்குப் பெரிய மகிழ்வை உண்டாக்குமென்று நான் சொல்லவேண்டியதில்லை. ஆதலின் பத்திரிகைகளில் வெளி வந்த வற்றுள் முக்கியமான விஷயங்களையும் உபயோகமாகு மென்று எனக்குத் தோற்றிய அநேகம் புதிய விஷயங்களையும் சேர்த்து இப்புத்தகம் வெளியிடலாயிற்று.

என்னுடைய ஆண்டும், அறிவும், ஆற்றலும் மிகச் சிறியன வென்று உள்ளபடிக்கு நான் அறிந்திருந்தாலும், பொது நன்மைகள் விருத்தி யடைந்து, எல்லாரும் க்ஷேமமாக வாழவேண்டு மென்னும் உண்மையான விருப்பத்தின் தூண்டுதலால் "ஆசைவெட்கமறியாது" என்றபடி நன்மை பயக்கு மென்று எனக்குத் தோற்றிய விஷய

ங்களை மனச்சாக்ஷிக்கு விரோதமாக மறைக்காமலும், இகழ்ச்சி புக ழ்ச்சியை நோக்காமலும் எழுதியிருக்கின்றேன். ஆதலின் இதிற் காணப்படுகிற குறை குற்றங்களையும் அபிப்பிராய பேதங்களையும் அறிஞர்கள் எனக்கு எடுத்துக் காட்டினால் அவைகளை நன்றி யறித லோடு ஏற்று அடுத்த பதிப்பில் திருத்தமாக பிரசுரிப்பேன்.

தற்காலத்தில் ஒவ்வொரு ஜாதியாரிடத்தும், பழக்க வழக்கங்க ளிற் பற்பல குறைகளேற்பட்டிருக்கின்றன வென்பதில் ஐயமில்லை. அவைகளை காலத்துக் கேற்றபடி அந்தந்த ஜாதியார் முன்வந்து திரு த்தவேண்டுமே யன்றி, பிறரால் எவ்வகையினும் சாத்தியமாவத ன்று. நமது ஜாதியிலும் தற்காலத்துக் கேற்றவாறு அநேக திரு த்தங்கள் செய்யவேண்டியதா யிருக்கின்றன. அவைகளை இப்புத் தகத்தில் கூடியவரையில் பிரயோஜனப் படும் முறையில் எடுத்துக் காட்டி யிருப்பதால் நமது "வணிகமக்கட்கு" இப்புத்தகம் அதிகப் பயன் தருமென்று நம்புகிறேன்.

M. சின்னையா செட்டி,
மகிபாலன்பட்டி.



# விஷய அட்டவணை.



விஷயம். பக்கம்.


1. கடவுளும், அன்பும். 1
2. இங்கிலீஷ் அரசாட்சியும், இந்தியாவும். 5
3. இயற்கையறிவு. 11
4. நாட்டுக்கோட்டையாருக்கு ஒருபொதுச்சங்கம்வேண்டும். 18
5. பத்திரிகை படித்தல் 23
6. நாட்டுக்கோட்டையாரும், ஈஸ்வரபக்தியும். 26
7. நாட்டுக்கோட்டையாரும், கல்வியும். 28
8. நாட்டுக்கோட்டையார் தர்மமும், கல்வியும். 32
9. பரோபகாரம். 37
10. கல்வியறிவில்லாத பெண்களும், குடும்பவாழ்க்கையும். 41
11. பெண்கல்வி 44
12. பால்ய விவாகமும், பெரிய பரிதாபமும். 47
13. வீண் அழுகை, 53
14. உலோபியின் சரித்திரம். 56
15. உலோபிக்கு உபதேசம். 58
16. மாரியம்மனும், உயிர்வதையும். 62
17. நாகரீகமான பழக்கங்கள். 65
18. சாந்தமும், கோபமும். 71
19. கண்ணுள்ள குருடர்கள், 74
20. சங்கங்களாலாகும் நன்மைகள். 77
21. தமிழ்மொழியும் நாகரீகமும். 83

| | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| 22. | தலைமை வகித்தல். | 109 |
| 23. | மனிதவாழ்வு. | 112 |
| 24. | நமக்கு நல்லதுணை யெது? | 121 |
| 25. | மடாதிபதிகளும், பொதுஜ்னங்களும். | 128 |
| 26. | பெரியமனிதரின் இலக்கணம். | 130 |
| 27. | விசேஷகாலங்களும், வீண்செலவும். | 134 |
| 28. | நாட்டுக்கோட்டையாருட் கைதியானவர்கள். | 163 |
| 29. | நாட்டுக்கோட்டையாரும், மூன்றுவருஷக்கணக்கும். | 166 |
| 30. | வட்டித்தொழில். | 169 |
| 31. | நாட்டுக்கோட்டையாரும், தலைமயிர் வளர்த்தலும். | 173 |
| 32. | நீலகிரி, கொடைக்கானல், குற்றாலம். | 175 |
| 33. | சேர்க்கையறிவு. | 180 |
| 34. | உண்மை நூல்கள். | 185 |
| 35. | நாட்டுக்கோட்டையாரென்னும் பெயர் வரலாறு. | 189 |
| 36. | நாட்டுக்கோட்டையாரின் அபிவிருத்தி. | 190 |








# கடவுளும், அன்பும்.

கடவுளைப் பற்றி நாம் பேசுமுன் கடவுள் யார்? அவரெங்கிருக்கிறார்? அவருடைய ரூபமென்ன? அவருடைய நாமமென்ன? அவர் எத்தன்மையுடையவர்? அவருடைய தொழிலென்ன? அவருடைய கொள்கைகளென்ன? அவருடைய விருப்பமென்ன? அவருக்கும் மனிதர்களாகிய நயக்கும் என்ன சம்பந்தம்? அவரை நாமேன் வணங்கவேண்டும்? வணங்குவதாலடையும் பயன்யாது? அவரைப் பார்க்கமுடியுமா? அவரை யடைவதாலாகும் பயன் என்ன? கடவுள் எத்தனை பேருண்டு? ஒவ்வொரு மதங்கட்கும் தனித்தனி கடவுளிருக்கிறாரா? என்ற விஷயங்களை நாமாராய்ந்தறியவேண்டும். இல்லாவிடில் நமக்குக் கடவுளைப்பற்றி உண்மையான நம்பிக்கையும், ஜீவகாருண்யமும், சகோதர உணர்ச்சியும், ஒற்றுமையும், பிற நன்மைகளுமுண்டாகாமல், வீண் வம்பும், கலகமும், பாபமும், பழியு மேற்பட்டு நமது வாணாளை வீணாளாக்கிவிடும். உலகத்திற் கடவுளை யறிவதற்கு எத்தனையோ வழிகளிருக்கின்றன. ஒவ்வொரு வழியும் மார்க்கமென்றும், மதமென்றும், சமயமென்றும் பற்பல பெயர்களைப் பெற்றிருக்கிறது. ஒவ்வொரு மதமும் கடவுளை யறிவதற்குரிய மார்க்கமேயாகும். ஆனால் கடவுளை யடைவதற்கு அன்பு ஒன்றே உதவியாயுள்ளது. உறுதியும் அன்புமில்லாத ஒருவன் எந்த மதத்தில் நின்றாலும், எந்த வேஷத்தைக் கொண்டாலும் ஒரு பிரயோஜனமுமில்லை. கடவுள் எல்லாமதங்கட்கு முரியவர். அவரில்லாத மதங்கள் உண்டாவதே யில்லை. ஆகவே, எல்லாமதங்களும் கடவுளைக் காட்டுகிற மதங்களே. எந்த மதஸ்தனையும் அவர் வெறுக்கமாட்டார். அவர் விரும்புவது மதமன்று. நாம் நல்வழியில் நடக்கவேண்டுமென்றும், தயவும், அன்பும், உண்மையு முடையவர்களாக இருக்கவேண்டுமென்றும், அவர் விரும்புகிறார்.

எந்தமதஸ்தன் நன்மையாக நடந்தாலும் அவர் அங்கீகரித்து ஆதரிக்கிறார். அவர்வாயைத் திறந்து எப்போது மெதையும் சொல்

லாதவர். நம்மை நாமே திருத்தி நடக்கும்படி நமக்கோர் சக்தியை
யுண்டுபண்ணி யிருக்கிறார். அதைத் தவிர வேறே எதையும் அவர்
மனிதர்கட்குத் தரவில்லை. அதிலிருந்து நாம் செய்கிற வினைகளால்
இன்ப துன்பங்களை யனுபவிக்கிறோம். நமது கஷ்ட நஷ்டங்கள்,
சுகதுக்கங்களுக்கு நாமே உத்தரவாதிகள். நாமிட்ட விதைகள்
தாம் முளைத்துப் பலன்றருகின்றன வென்பதை நாம் ஒவ்வொரு
விஷயத்திலு முணரவேண்டும். கடவுளுக்கு எப்பொழுதும் எந்த
ஜீவனும் வருந்துவதிற் சம்மதமில்லை. இந்தகைய கடவுள் யார்?
அவர் நாமரூபமற்றவர். அவரை யின்ன ரூப மின்ன நாமமுடையவ
ரென்று சொல்வதற்கில்லை.

(தேவாரம்.)

“மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான் வார்ச
டையா னென்னி னல்லா, னொப்புடைய னல்ல னொருவ னல்ல
னோரூர னல்லனோ ருவம னில்லி, யப்படியு மவ்வுருவு மவ்வண் ண
மு மவனருளே கண்ணாகக் காணி னல்லா, லிப்படிய னிவ்வுருவ னி
வ்வண் ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே”

எல்லாம் அவருடைய ரூபங்களே. எல்லா மவருடைய நாமங்களே.
அவரெங்கு மிருக்கிறார். அவரில்லாத இடமேயில்லை. அவரில்லாத
பொருள்களேயில்லை. அவரெப்பொழுதும் ஆனந்தமும், காருண்ணி
யமு முடையவர். படைத்தல், காத்தல், அழித்த லென்பவை யவ
ருடைய தொழில்கள். எல்லா ஜீவர்களும் துன்பமற்று இன்பமடை
யவேண்டு மென்பது அவருடைய கொள்கை. அவருடைய விருப்ப
மென்ன? ஜீவர்கள் ஒருவரை யொருவர் துன்புறுத்தாமல் ஹிம்
சிக்காமல் மோசம் செய்யாமல் பரஸ்பரம் நம்பிக்கையும், ஒற்
றுணர்ச்சியும், உதவியும், ஆதரவும், அன்புமுடையவர்களாக இருக்க
வேண்டு மென்பதேயாம். கடவுளுக்கும் மனிதர்கட்கும் நீங்காத
சம்பந்தமுண்டு. கடவுளை யின்றி ஜீவர்களுமில்லை. ஜீவர்களை விட்
டுக்கடவுள் விலகவும் முடியாது. நமக்குத் தீயகுணங்களும் செய
லும் நீங்கி நல்லெண்ணங்களும் செயல்களும் உண்டாதற் பொருட்டு
நாம் அவரை வணங்கவேண்டிய தவசியமாகிறது. நாம் அவரைப்
பார்க்கமுடியுமா? ஒவ்வொரு நிமிஷமும் பார்த்துக்கொண்டே
யிருக்கிறோம். ஆனால் அவர்தாமென்ற உணர்வுமட்டும் நமக்கு

சுலபமாக உண்டாவதில்லை. உண்டான விடத்து ஒன்றும் பேசுவதற்கில்லை. ஒருவருக்கும் சொல்வதற்கில்லை. அதுதான் அதிசயம். அதுதான் ஆச்சரியம். அதுதான் மகிழ்வு. அவரைக்கண்டு அவரையடைவதிற் பயனென்ன? பிறப்பிறப்பற்று நித்தியானந்தத்தையனுபவிப்பதே யாகும். இப்படி கடவுள் எத்தனையுண்டு? ஒரே ஒரு கடவுள்தானுண்டு. இத்தகைய சர்வ வல்லமையுள்ள கடவுளைத்தான் ஒவ்வொரு மதஸ்தரும் நம்புகிறார்கள். ஆலயங்களில் வணங்குகிறார்கள். பலவகையாகப் பாராட்டுகிறார்கள். மனிதர்கட்கு ஆலய தரிசனம் மிக முக்கியமானது. மனிதன் சித்த சுத்தி யடைவதற்கு ஆலயத்தைப்போற் பிரயோஜனமுள்ளது வேறெதுவுமில்லை. ஆனால் ஆலயத்தைக் கடவுள் வசிக்கிற விடமென்று கொள்வதுபோல, ஆத்மாக்கள் வசிக்கிற சரீரங்களையும் கடவுளின் ஆலயங்களென்றே நினைத்து அன்புகொள்ள வேண்டும். அப்படி யில்லாதவரையில் ஜீவகாருண்ணியமும், இரக்க சிந்தையு முண்டாகா. ஜீவர்களிடத் திரக்கமற்ற ஒருவன் கடவுளுக்குப் பிரியமற்றவனாகிறான்.

கடவுள் தனக்காக எதையும் விரும்பாதவரென்றும் அவருடைய விருப்பங்க ளின்னவையென்றும் முன்னரே சொன்னோம். அதைப் பின்பற்றி நடக்காதவர்களைப் பாபம் செய்தவர்களென்றே கருதுகிறார். ஆகவே, கடவுளிடத்து உண்மையான அன்புடையவர்கள், ஜீவர்களிடத்து அன்பற்றவர்களாக இருக்கமுடியாது. எவன் ஜீவர்கள் விஷயத்தில் அன்பில்லாதவனாக இருக்கிறானோ, அவன் கடவுளிடத்துக் காட்டு மன்பு பொய் வேஷமென்று நாம் தெளிவாயுணரவேண்டும். அன்பு மிகுதியுள்ள ஒருவனுக்கு ஜாதியென்றும், மதமென்றும் பேதமேற்பட ஞாயமில்லை. எந்த ஜாதியும், எந்த மதமும் அன்புக்கு வேற்றுமை யுடையவல்ல. ஜாதி மதங்களைப் பிடித்து நிற்கிற மனிதர்க ளல்லாமல் மற்ற ஜீவராசிகளானாலும் அன்புக்கு வேற்றுமையுடையன வல்ல. வருந்துகிற ஒரு புழுவைக் கண்டவிடத்தும் ஐயோவென் றிரக்கமுறுவதே, உண்மையான அன்பாகும். ஜீவர்களிடத் தன்பில்லாமற் சிவபூஜை செய்வதி லொருபயனு மில்லை யென்பதோர் சத்தியவாக்கியமாம். கடவுள் இல்லையென்று எப்பொழுதும் நினைக்கப்படாது. நாம் செய்

கிற ஒவ்வொரு விஷயங்களையும், அவர் நம்மிடமிருந்தே பார்த்துக் கொண்டிருக்கின்றார். கடவுள் எங்கே யென்றால் ஆகாயத்தை யும், பூமியையும், திக்குகளையும் காட்டுவதைப் பார்க்கிலும் இரு தயத்திற் கைவைத்துக் காட்டுவது விசேஷமாகும். நாம் ஒரு செய்கை செய்யும்போது, அது கெட்டதா? நல்லதா? கூடுமா? கூடாதா? வென்று ஆலோசிக்கிறோம். ஆலோசியாமற் செய்தா லும் பின்பு உணருகிறோம். அப்படி உணருகிற வஸ்து வொன்று நம்முள்ளிருக்கிறது. அந்த வஸ்துத்தான் கடவுளின் சாயை மனச்சாக்ஷியென்று சொல்லப்படுகிறது. அந்த மனச்சாக்ஷி நமக் குக் கட்டுப்பட்டதன்று. அது சுவாதீனமுடையது. உண்மை பேசுவது. அதையறியாமல் நாமெதையும் செய்யமுடியாது. அவனன்றி யோரணுவு மசையாது. ஆகவே, பிறவிப் பிணியற்று நித்தியானந்தம், பெரிய இன்பம், மோக்ஷவீடு அடைவதற்கு, ஜீவர்களிடத்து வேற்றுமையில்லாத உண்மை யன்புபூண்டு, துன்பமிபற்றுவதை நீக்கி, நம்மா லியன்ற உதவியையும் உபகா ரத்தையும் செய்து நமது மனச்சாக்ஷிக்கு விரோதமில்லாமல் நடப்பதே கடவுளை யடைவதற்குப் பிரயோஜன முள்ள நல்ல வழியாகும். நிச்சயமாகக் கைகூடும்.

கடவுள் தம்மிடத்துக்கு வருகிற ஜீவர்களை நோக்கி நீ எந்த மார்க்கமாக வந்தாய்? என்று கேட்கப்போவதில்லை யாதலின் எல்லா மதங்களும் உண்மையுடையன வென்றும், எதை யனுட் டித்தாலும் முத்தி சித்திக்குமென்றும் சொன்னோம். ஆனால் நிச்சயமாக ஒன்றைப் பற்றி நிற்கவேண்டுமே? எல்லாம் நல்ல தென்றால் எதைப்பற்றி நிற்பது? என்ற கேள்வி பிறக்கலாம். மனி தன் மதமாறுத லடைவது நிரம்பத் தப்பிதம். எந்த மதத்திற் பிறந்தானோ எந்த மதத்தை யவன் பிதா அனுட்டித்தானோ அதையே பற்றி நிற்கவேண்டும். ஏன் எதுவும் உண்மையற்ற மதமன்று. ஒருவன் சைவசமய அனுட்டானமுள்ள குலத்திற் பிறந்தால் அவன் வைஷ்ணவனாகவும், பௌத்தனாகவும், சைன னாகவும், கிரிஸ்டியனாகவும், மகம்மதியனாகவும் மாறவேண்டிய அவசியமென்னை? தான் பிறந்த மதத்தில் என்ன குற்றத்தைக்

கண்டான்? புகுந்த மதத்தில் என்ன விசேஷத்தைக் கண்டான்? அப்படிச் செய்வது அவனுடைய அறியாமையே யாகும். இப்படியே ஒவ்வொரு மதஸ்தனும் மற்ற மதங்கட்கு மாறவேண்டிய அவசிய மொன்றுமில்லை. எந்த நதி எத்தனை கோணலாக ஓடினாலும் சங்கமமாவது சமுத்திரத்திற்றானே? எந்த ஊருக்காவது ஒரே பாதை மட்டுமிருக்கிறதா? பலபாதைகள் ஒரு ஊருக்குள் வந்து சேருவதை நாம் பார்க்கவில்லையா? பாதை பலவேயன்றி ஊர் வேறன்றே? எந்தப்பாதையானாலும் ஊர் போய்ச் சேரவேண்டியதுதானே நம்முடைய நோக்கம்? ஆகவே, மதமாறுதலடைவதால் விசேஷபல னொன்றுமில்லை. ஆனால், மற்றமதங்களைத் தூஷிக்கவாவது, பரிகசிக்கவாவது, நிந்திக்கவாவது கூடா. அப்படிச் செய்கிற ஒருவன் வீண் கலகக்காரனே யன்றி அறிவுள்ளவனல்லன். புறமத தூஷணை யில்லாமற் றன் மதத்தைத் தான் எவ்வளவு வேண்டுமானாலும் புகழ்ந்துகொள்ளலாம். ஒருஸ்திரீ தன் நாயகனைப் போற்றவேண்டுமென்றால் மற்ற ஊரிலுள்ள புருஷர்களை யெல்லாமிகழவேண்டிய அவசியமில்லை. ஒவ்வொரு ஸ்திரீக்கும் தன் தன் நாயகன் பெருமையுடையவன்தானன்றோ? தன் மதத்தைச் சிலாகித்துக் கொள்ளவென்றால், புறமத தூஷணை யவசியமென்பதில்லை. எல்லா மனிதர்களும் சகோதரர்களே. எல்லா மதங்களும் சகோதர மதங்களே. அறிவுக்கு ஒன்றும் பேதமில்லை. அன்புக்கு ஒன்றும் பேதமில்லை. கடவுளும் ஒன்றே. அன்பும் ஒன்றே. அன்புள்ளவன் எவனும் கடவுளை யடைகிறான். கடவுளே அன்பு. அன்பே கடவுள். முடிவில் எல்லாம் ஆனந்தமே கைவல்யம்.

# இங்கிலீஷ் அரசாட்சியும், இந்தியாவும்.

உலகத்திலுள்ள வல்லரசுகளில் நமது (British) பிரிட்டிஷ் அரசாட்சியைப் போன்ற காருண்யமும், நடுநிலைமையும், நீதியும், பெருந்தன்மையும், சாமர்த்தியமும், வல்லபமும், விசாலமும் பொருந்திய அரசு எதுவுமில்லை. பிரிட்டிஷ் நாடுகளிற் கல்விக்கு இருக்கிற கௌரவமும் மதிப்பும் செல்வாக்கும் ஆதாயமும் வேறெந்த நாடுக

ளிலுமில்லை. கல்விக்கும் அறிவுக்கும் மதிப்பு வைத்திருக்கிற நாடு எதுவும் நாகரீகத்தில் அதிக மேன்மையுடையதென்பது யாவருமறிந்ததேயாம்.

நமது இங்கிலீஷ் அரசுமுறையை நோக்குமிடத்து அஃதொரு அவதார புருஷனாலேற்படுத்தப்பட்டதென்று காணப்படுகிறது. மனித வாழ்விற்குரிய ஒவ்வொரு விஷயமும் அனுபவத்திற் கண்டு அதையளவிட்டு ஆழ்ந்து சிந்தித்து சட்டதிட்டங்கள் செய்து வைக்கப்பட்டிருக்கிறது. மனிதர்களது ஞாபகத்துக்கு வராத செய்கைகட்கெல்லாம் கடவுளின் விதிபோற் சட்டமிருக்கிறது. உலகமெல்லாம் இஃதொரு புதிய விஷயமென்று ஒன்றைக் குறிப்பிட்டு பிர்மிக்கும்படியான காரியமாக இருந்தாலும் அந்த விஷயத்துக்கும் முன்னரே விதிவிலக்குகள் ஏற்பட்டிருக்கின்றன. உத்தியோகமுறையோ படிப்படியாக ஒருவரையொருவர் மேலிருந்து கவனிக்கும்படியும் கண்டிக்கும்படியும் நியமித்து ஒருவன் ஒன்றை அக்கிரமமாக இஷ்டப்படி செய்துவிடாமலும் நியாயத்துக்குப் பங்கமில்லாமலும் நடக்கும்படி நியமிக்கப்பட்டிருக்கிறது.

குற்றவாளியென்று ஒருவன் பிடிக்கப்பட்டால் அவன் குற்றம் செய்தது உண்மைதானா அல்லவாவென்று கண்டுபிடிக்கும்படி படிப்படியாக நியாயாதிபதிகள் ஏற்பட்டிருக்கிறார்கள். போலீஷ் விசாரணை முதல் பிரிவி கௌன்சில் வரையில் ஒருவன் தன்னைக் குற்றமற்றவனென்று காட்டிக்கொள்ள இடமேற்பட்டிருக்கிறது. இப்படி நமது இந்தியாவில் எக்காலத்தும் எந்த அரசாட்சியிலும் இருந்ததில்லையென்று நாம் சொல்லக்கூடும். ஆதியில் தர்ம ராச்சியமாக இருந்த காலத்திலும் பாரபக்ஷமில்லாத நியாயம் கிடைத்ததேயன்றி இவ்வளவுபடிப்பும், கவனமும் இருந்ததில்லையென்றறிகிறோம். ஆதிகாலம் ஒருவாறு நன்னிலையிலிருந்ததென்றாலும் மத்தியகாலத்தை நினைக்கும்போது மனம் நடுங்குகிறது. அதாவது கி. பி. 1000 முதல் 1800 வரையில் இந்தியாவைப்போற் சீர்கெட்டுக் கவலையும் அச்சமும் துக்கமும் ஹிம்சையும் அடைந்த தேசம் வேறெதுவுமில்லை. எங்குபார்த்தாலும் அரசர்கள் ஒருவர்க்கொருவர் சதிசெய்வதும் சண்டையிடுவதும் ஜனங்களைக் கொலை செய்வதும்

கொள்ளையடிப்பதும் சூறையாடுவதும் இன்றைக்கு ஒரு அரசன் நாளைக்கு ஒரு அரசனாக மாறுவதும் நிதானமும் நிச்சயமுமின்றி வரிவசூல் செய்வதும் நீதி முறைகள் கவனிக்கப்படாமலும் வாயுள்ளவனுக்கு வல்லபமிருந்தும் ஏழைகட்கு ஹிம்சை மிருந்தும் கையிலுள்ள பொருள்களைப் பாதுகாக்க முடியாமல் பூமிக்குட் புதைத்து வைத்தும் இன்னும் எட்டிலடங்காத எழுதமுடியாத கஷ்டங்களை யனுபவித்துக்கொண்டும் இந்தியர்கள் பட்டபாடு கொஞ்சமன்று. இவைகட்கெல்லாம் காரணம் திறமையற்ற மூர்க்கர்களான அரசர்களின் ஆளுகையேயாம். இப்படி அல்லோல கல்லோலமாக அலைபட்டு நிலைகெட்டு நல்லரசற்று இந்தியமாதா தவித்துக்கொண்டிருந்த முக்கியமான சமயத்திற்றான் நமது காருண்யமுள்ள பிரிட்டிஷ் ஆளுகை நமக்குக் கிடைத்தது. அவர்கள் இத்தகைய கலக்கங்களைச் சமாதானப்படுத்தி துஷ்டர்களை ஒடுக்கி ராஜநீதிமுறையைச் சீர்ப்படுத்தி ஜனங்களை நிம்மதியாக விருக்கச் செய்து நேரில் அரசியற்ற ஆரம்பித்தார்கள். சட்டதிட்டங்களை ஒழுங்குபடுத்தியது மட்டுமன்று. எக்காலத்திலும் நம்மவரறியாததும் அனுபவிக்காததுமான அனேக சௌக்கியங்களை நமக்குச் செய்து தந்தார்கள். அவற்றுள் முக்கியமானவை:—புகைக்கப்பல், ரயில், தந்தி, தபால் முதலியன. இவைகளின் உபயோகத்தைப்பற்றிப் பேசிப் பேசி வாய் சலித்து விட்டதாலும் சிறு பிள்ளைகளும் இந்த நன்மையை யுணர்ந்திருக்கிறார்களாதலாலும் அதை இங்கு விரித்தல் மிகையாம். வியாபாரத்துக்கும் வியாபாரிகட்கும் இவைகளாலுண்டான நன்மைகட்கு ஒரு எல்லையில்லை. இவைகளைத்தவிர ஜாதிமதங்களின் ஆசிவசங்களை யடக்கினார்கள். ஆலயங்களைக் காப்பாற்றினார்கள். கல்வியை விருத்திசெய்தார்கள், புதிதுபுதிதாக ஆகாய விமானம் கம்பியில்லாத் தந்திவரை கண்டுபிடித்து நம்மை அதிசயிக்கச் செய்தார்கள். கல்வி முறையிற் செய்திருக்கிற ஒழுங்குகளும் அளவுகளும் வியக்கத்தக்கன. இப்படியே ஒவ்வொரு துறைகளிலும் நன்றாகக் கவனஞ் செலுத்திச் சீர்படுத்தி வகைவகையாகவும், படிப்படியாகவும் அமைத்து அரசாட்சிசெய்து வருகிற அழகையும், திறமையையும், வர்ணிக்கவென்றால் ஆதிசேஷனைப்போல் ஆயிரம் நாவிருந்தாலும் முடியாதகாரியமாகும். இத்தகைய பேருபகாரத்துக்கு நமது இந்திய நாடு எப்பொழு

தும் மறக்கமுடியாத நன்றியறிதலும், இராஜவிஸ்வாசமும் பக்தியும் நிரம்பியிருக்கக் கடமைப்பட்டிருக்கிறது. ஆனால், நமது இந்தியா இராஜபக்தியில் ஒரு சிறிதும் குறைந்த தேசமன்று. மற்றத் தேசங்களைப்போல் அரசனை ஒரு தலைவனாக மட்டும் கொள்கிற வழக்கமில்லை. அரசனைத் தெய்வத்தன்மையுடையவனாகக் கொள்கிற தேசமாக இருந்ததென்பதை நமது நூல்களும் கொள்கைகளும் விளக்கமாகக் குறிப்பிடுகின்றன. அரசனுக்குத் துரோகமாவது சதியாவது செய்கிறவனை சமூகத்தில் நின்று முற்றிலும் விலக்கப்படுவதுடன் அவனை யொரு பஞ்சமாபாதகனெனவும் கருதப்படுவது ஆதிமுதல் இந்தியரின் சுபாவமாக விருந்தது. அரசனைக் கொண்டாடுகிற முறையையும் வழிபடுகிற முறையையும் மற்றெந்தத் தேசத்தாரும் இந்தியர்களிடமிருந்துதான் கற்றுக்கொள்ளவேண்டும். இந்த அருமையான சுபாவமும் கொள்கையும் கொடுங்கோலரசர் காலத்திலும் மாறவில்லையென்றால் பெருமை பொருந்திய பிரிட்டிஷ் அரசர் காலத்தில் எவ்வளவு விருத்தியடைந்திருக்குமென்று நாம் சொல்லவேண்டியதில்லையன்றோ? உதாரணமாக, சமீபத்தில் நமது மகாராஜா சக்ரவர்த்தியார் டெல்லிக்கு வந்துபோன பெரிய சம்பவமே போதுமானதாகும். 1858-ல் இந்திய சக்கிரவர்த்தினியாக முதல் முதல் வந்த நமது காருண்ணியமுள்ள விக்டோரியா மகாராணியார் தமது அருமைத் திருமுகத்தில் இந்திய ஜனங்களுடைய க்ஷேமமே நமக்கு வலுவாகும். அவர்களுடைய திருப்தியே நமக்குக் காப்பாகும். அவர்களுடைய நன்றியே நமக்குக் கைம்மாறாகும் என்று குறிப்பிட்ட விலைபெற்ற மாணிக்கங்களான சொற்கள் நமது மனதைக் கவர்ந்து உற்சாகத்தையும் தைர்யத்தையும் மனக்கிளர்ச்சியையும் உண்டுபண்ணின. அந்த முறையையே பின்பற்றி இப்போது நம்மை ஆண்டுவருகிற மாட்சிமை தங்கிய ஐந்தாவது ஜார்ஜு அரசரும், மேரியரசியும் தாங்கள் முடிசூட்டிக்கொண்ட வைபவத்தைத் தங்கட்குள்ள எத்தனையோ தேசங்களிருக்க அங்கெல்லாம் காட்டாது இந்தியர்கட்குமட்டும் காட்டுதற்கு விரும்பி அனேக தூரம யாத்திரை செய்து வந்து இந்தியர்கள் கண்குளிரக் காணும்படி செய்தார்கள். இவ்வளவு பெரிய சக்ரவர்த்தி யொருவரை இந்தியா எக்காலத்தும் தெரிசித்ததில்லை. அரச தம்பதிக

ளின் அருமையும் அன்பும் இன் சொல்லும் நாம் எப்போதும் மறக் கத் தக்கனவல்ல. இது ஒன்றே நமது சக்ரவர்த்தியார் இந்தியாவில் வைத்திருக்கும் ஞாபகத்துக்குப் போதிய சான்றாகும். அரச தம்ப திகளை யென்றுமில்லாத குதூகலத்தோடு வர வேற்று உபசரித்து டெல்லி தர்பாரென்று சிறிய சிறிய கிராமங்களிலும் முடிசூட்டுக் கொண்டாட்டம் கொண்டாடிய சிறப்பொன்றே இந்தியர்களின் உண்மையான ராஜபக்தியை நன்கு வெளிப்படுத்துகிறது. இவ் விரண்டைப்பார்க்கிலும் அரசனுக்கும் குடிகளுக்குமுள்ள பரஸ்பர அன்பை விளக்கத்தக்க சாதனம் வேறெதுவுமில்லை. இப்படியே இன்னும் அனேக காலத்துக்குக் குடிகளிடத்தன்புள்ள அரசரும் அரசரிடத்துப் பக்தியுள்ள குடிகளுமாக இந்தியா சிறப்புறவேண்டு மென்று எல்லாம் வல்ல இறைவன் திருவருளைப் பிரார்த்திப்போ மாக.

இதுவரை நாம் பொதுவாகப் பேசினோம் இனி எமது நாட்டுக்கோட்டையாருக்கு பிரிட்டிஷ் அரசாட்சியாலுண்டான விசேஷ நன்மைகளைப்பற்றியும், சிறிது கூறிவிட்டு இந்தவியா சத்தை முடித்து விடுவோம். ஆதியில் நாக நாட்டிலிருந்து பாண்டிநாட்டுக்கு வந்து பாண்டியனுடைய ஆதரவில் நெடுநாள் கௌரவமாகவேயிருந்து காலம் கழித்து வந்தார்கள். பிறகு நாளடைவில் பாண்டிய வம்சம் பலவீனமடைந்து விட்டது பதினோராவது நூற்றாண்டில் பாண்டியநாட்டைச் சோழராஜர்கள் கைப்பற்றினார்கள். அதற்குப் பிறகு இந்தியாவிற் பற்பல மாறு தல்களும் புரட்சியும் உண்டாயின. மகம்மதிய அரசர்களின் கொள் ளையும் அந்நியாயமும் பொறுக்கக் கூடியதாகவில்லை. அந்தக் காலத் திற்றான் நமது நாட்டுக்கோட்டையாருக்கு முன்னிருந்த பெருமை களும் ராஜமரியாதைகளும் போய் கிராமங்களில் தலைமறைவாகக் குடியிருக்க நேர்ந்தது. பழைய ஆசாரமுறைகளும் மாறுபட்டன. கல்வியும் குறைவுற்றது. சாதாரண ஜீவனம் செய்யுமியல்புடைய வர்களாக நேர்ந்தது. இப்படிப் பலவகையிலும் சிறுமைபடைந்து விட்டதாற் பின்னும் நன்னிலைமைக்குவர இன்னும் பிரயாசை யெடுக்கவேண்டியதாயிற்று கி. பி. 1753 வரை இந்தக்கஷ்டம் நம்

மலையைப் பற்றிக்கொண்டிருந்த பின்பு சிறிது சிறிதாக நீக்க ஆரம்பித்தது. பதினெட்டாவது நூற்றாண்டு முதலாக நம்மவர் கவலையற்று வாழவும் தூரதேசங்களுக்குச் செல்லவும், அங்கு அச்சமில்லாமலிருக்கவும், வியாபாரஞ் செய்யவும், கைப்பொருள்களைப் பயமில்லாமற் காட்டவும் சௌகரியமாயிற்று. அதிலும் நமது கருணாநிதியாகிய விக்டோரியா மகாராணியார் இந்தியாவை நேரிற் கைக்கொண்ட 54 வருஷங்களாகத்தான் நம்மவருக்குப் பூரணமாகக்கவலையற்றிருக்கது. நீராவிக்கப்பல்களும் ரயில்களும் நமக்குப் பெரிய உதவிகளைச் செய்தன. இவைகளின் உதவியால் நாம் அன்னிய தேசங்களான பர்மா, மலேயா, சமுத்திரா, செய்கோன் முதலிய நாடுகளுக்கு தாராளமாகவும், குறித்தகாலத்திலும் போய்வர சௌகரியமாயிற்று. பெரிய பெரிய வியாபாரங்கள் செய்யவும், பொருளீட்டவும் ஏதுவாயிற்று. தந்தி தபால்கள் அளவற்ற அனுகூலங்களை உண்டுபண்ணின. லாக்கோர்ட்டுகளும் போலீஸ்களும் நம்மையும் நமது பொருளையும் காப்பாற்றிற்று. இன்னும் நம்மவர் அடைந்திருக்கிற ஒவ்வொரு நன்மையும், பிரிட்டிஷ் ஆட்சியாற் கிடைத்ததென்பதை நாம் சந்தோஷமாகச் சொல்லுகிறோம். சரீரபலத்தாலும் தைரியத்தாலும் மிகக்குறைந்திருக்கிற நமக்கு இவ்விரண்டையும் தாங்கி நின்று நம்மைக் காப்பாற்றுவது பிரிட்டிஷ் கொடியேயன்றி வேறில்லை. பிரிட்டிஷ் கொடி ஒரு நிமிஷம் மறைந்திருந்தாலும் நமது பொருளும் பெருமையும் நம்பத்தக்கதன்று. ஆகவே, நமக்கு ஜீவாதாரமாக இருப்பது பிரிட்டிஷ் ஆளுகையேயாம். இந்த ஆளுகை எக்காலமுமிருந்து இப்படியே நம்மவருக்கும் நமது தேசத்தாருக்கும் பல நன்மைகளைச் செய்து நீடி வாழவேண்டுமென்று இறைவன் றிருவருளை இன்னொருமுறை பிரார்த்திப்போமாக.

குடிகளை அரசன் காக்கட்டும்
அரசனைக் கடவுள் காக்கட்டும்.

---

# இயற்கையறிவு.

---

## அதிசயமான கதைகள்.

அறிவு இரண்டு வகைப்படும். ஒன்று இயற்கை அறிவு, ஒன்று செயற்கை யறிவு. இயற்கையறிவு என்றால் நல்ல வினையின் பயனாக மனிதன் பிறக்கும் போதே கூடப்பிறக்கிற அறிவு. பிரதி மனிதனும் இவ்வறிவோடுதான் பிறக்கிறானென் றாலும் சிலருக்கு அதிக மாகவும் சிலருக்கு சொற்பமாகவும் இருக்கும். 'விளையும் பயிர் முளையிலேயே தெரியும்' என்றபடி. இவ்வறிவு விசேஷமாக இருப்பதும் இல்லாததும் குழந்தைப்பரு வத்திலேயே யறியலாம். சில குழந்தைகள் ஒருமுறை கண்டதையோ கேட்டதையோ நடிப்பதும் பேசுவதுமாக இருப்பதோடு இன்னது அசங்கிதமானது இன்னது சுத்தமா னது என்று ஒருவர் சொல்லாமலே தெரிந்து கொள்கின்றன. இன்னும் ஆச்சரியப் படத்தக்க விதமாக நடந்து கொள்கின்றன. இவைகள் இயற்கையறிவு நிரம்பிய குழந்தைகள். சில குழந் தைகள் சுறுசுறுப்பில்லாமலும் அழுவதும் பால்குடிப்பதும் தூங் குவதுமன்றி வேறொன்று மறியாதனவாக இருக்கின்றன. இவை இயற்கையறிவு குறைந்த குழந்தைகள். (இன்னுமனேக வித்தி யாசமான குறிகளுண்டெனினும் சிலவற்றை மட்டிலுமிங்கே குறி ப்பிடிற் போதுமென்றெண்ணுகிறேன்.) இக்குழந்தைகளின் பரு வத்துக்குத் தக்கபடி அவ்வறிவும் வளர்ந்து, முடிவில் அதனதன் பயனைத்தருகின்றன. இனிச் செயற்கையறிவாவது படிப்பினால் உண்டாகுமறிவு. மனிதர்களுக்கு இவ்விரண்டறிவுகளும் (இயற் கையறிவும் கல்வியறிவும்) அவசியமேயாகும். இவற்றுள் இய ற்கையறிவு விசேஷமுடையது. இயற்கையறிவு குறைந்த ஒரு வன் நன்றாய்ப் படித்திருந்தாலும் (**Imitation**) போலி வயிரம் போற் பிரயோஜனமில்லை. அவனுக்கு சந்தர்ப்பம், நோக்கம், பின்யோசனை முதலியன தெரியா. ஆழ்ந்த புத்தியு மிராது. சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை போற் கற் றதை உளறிக்கொண்டு திரிவதன்றி வேறு பயனில்லை. எல்லா மனிதர்களையும் எல்லா சந்தற்பத்தையும் எக்காலத்தையும் ஒரே தன்மையாகப்பாவித்து நடப்பான். படிப்பதன்றிப் படிப்பினு

லாரும் பயன் இன்னதென்று அவனறிவான். அவனிடத்து
வீண் கர்வமும், வீண் வம்பும் அதிகமாகக் காணலாம். அவ
னாற் பிறருக்கு ஒரு நலனுமில்லை. அப்படிப்பட்ட இயற்கையறி
வோடு கலந்தாலன்றிப் பிரயோஜனமும் பிரகாசமுமுடையதாகா.
ஆனால் இயற்கையறிவுள்ள மனிதனுக்குப் படிப்பு வேண்டாமோ
வெனின் அவனுக்குத்தான் அதிகம் வேண்டும். இயற்கையறி
வுள்ளவன் படித்திருந்தால் அவன் உலகத்துக்கு அதிக நன்மை
செய்யக் கூடும். எந்த மனிதனைப்பற்றி நாம் அதிமேதாவி
யென்று கேட்கிறோமோ அந்த மனிதன் இயற்கையறிவு நிரம்
பிய பெரும் படிப்பாளியாகவே யிருப்பான். இயற்கையறிவுள்ள
மனிதன் கட்டாயம் படித்தே தீரவேண்டும். இல்லேல் சாணை
யிற் பிடித்துச்செதுக்கிப் பட்டைதீராத வயிரக்கல் போலும்,
பிறந்தும் பிறவாதமனிதன் போலும், பிரகாசமற்று பேர் மழு
ங்கி அருமையான சரீரத்தை வீணாக்கிக் கொள்கிறான். இதி
லொருசந்தேகம், இயற்கையறிவு குன்றிய படிப்பாளியாற் பிர
யோஜனமில்லை யென்பதை யநேகர் ஒப்புக் கொள்ள மாட்டார்
கள். படித்தவனுக்கு எல்லா அறிவு முண்டாகிவிடு மென்பது
அவர்களபிப்பிராயம். ஆனால் நாம் அப்படிச் சொல்லக்கூட
வில்லை. உதாரணமாகச் சில விஷயங்களை யிங்கெழுது வாம்:

இயற்கையறிவில்லாத வித்துவானொருவன் ஒரு பிரபுவைக்
காணும் பொருட்டு அவர் பேரில் கவி பாடிக்கொண்டு போயிரு
ந்தான். வித்துவான் போன சமயம், பிரபுவானவர் தம்பந்துக்
களிலொருவரிறந்துபோன துஷ்டிக்கு அவசரமாகப் புறப்பட்டுக்
கொண்டிருந்தார். வித்துவான் சந்தர்ப்பமொன்றையும் நோக்காமல்
போனவுடன் தான் பாடி வந்த கவியை, ராகதாளத்துடன் படி
க்க ஆரம்பித்தான். பிரபுவோ நல்ல மனிதர். வித்துவானை
நோக்கிச் சாந்தமாக

ஐயா! சமயம் நன்றாயில்லை, பிறகு வாருங்கோ.

வித். பிரபு! நன்றாய் கவனிக்க வேண்டும். இரண்டு
மூன்று விதமாகப் பொருளடக்கிப் பாடியிருக்கிறேன்.

பிரபு. இருக்கட்டும். இப்போதெனக் கவசரமான சமயம்

வித். அருமையான கவி. நான் எப்பொழுதும் யார் பேரி லும் இப்படிக் கவி செய்ததில்லை.

பிரபு. எங்கே போகிறது, இருக்கட்டும். நான் சாவகாச மாகக் கேட்கிறேன்.

வித். என் பாட்டனைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கலாம். அவர் ஸேது சம்ஸ்தானத்தில் ஒரு வெண்பாவுக்கு ஆயிரம் பொன் பெற்றவர். அவருடைய சொந்தப் பேரன் தான் நான்.

பிரபு. நீங்கள் வித்துவானல்லவென்று நான் சொல்ல வில்லை. இப்பொழுது சமயமில்லை யென்று தான் சொல்லுகி றேன்.

வித். இயமலோகத்துத் தலபுராணம் பாடிச் சென்றவர் என் பூட்டன் தான். நான் அதற்கு உரை செய்கிறேன்.

பிரபு. அதெல்லாம் சிரம்பச்சரி. எனக்கு நேரமாகிறது

வித். சற்று தயவு செய்ய வேணும். பாரதயுத்தத்திலே அர்ச்சுனனுடைய பாணங்களால் கர்ணன் சோர்ந்த சமயம், (கதை சொல்ல ஆரம்பிக்கிறார்.)

பிரபு. நில்லுமையா. அப்படிச் சோர்ந்த சமயமாக இருந் தாலும் பாதகமில்லை. இது மனிதர் இறந்த சமயம் ஆதலால் இனி அதிகமாகப் பேசாமலிரும்.

வித். தங்களைப்பற்றி நான் பிரமாதமாகக் கேள்விப்பட்டி ருக்கிறேன்.

பிரபு. என்னையா! செவிடன் காதிற் சங்கூதியது போலிருக் கிறதே. (கடுமையாக)

வித். (கண் சிவந்து) "போற்றினும் போற்றுவர் பொருள் கொடாவிடில், தூற்றினும் தூற்றுவர் சொன்ன சொற்களை, மாற் றினும் மாற்றுவர்" என்றறியீர் போலும்.

பிரபு. ஆனால் வசை பாடப்போறீரோ,

வித். ஆம் ஆக்ஷேபமென்ன,

பிரபு. (தமது வேலைக்காரரை நோக்கி) நான் வரும் வரை இவரிங்குதானே இருக்கட்டும். வித்துவான் திகைத்திட்டு ஓட வழி பார்க்கிறார். பிரபு மனமிரங்கி இயன்றதை யுதவிப் புத்திமதியுஞ் சொல்லி யனுப்பிவைத்தார்.

இயற்கையறிவில்லார்க்குக் கல்வி யறிவு பிரயோஜனப்படா தென்பதற்கு மற்றொரு கதை:—ஒரு அரசனிடத்தில் வெகுமதி பெறுவதற்கு ஐந்து வித்துவான்கள் ஒன்று சேர்ந்து சென்றார்கள். ஐந்து பேர்களில் ஒருவன் சங்கீதவித்துவான், ஒருவன் இலக்கண வித்துவான், ஒருவன் ஜோதிடன், ஒருவன் வைத்தியன், ஒருவன் தர்க்க வித்துவான். இவ்வைந்துபேரும் தனித்தனி ஒவ்வொரு வித்தையிலும் வல்லவர்கள். அரசனுடைய ஊரை யடைந்ததும் அகாலமாயிற்று. தாங்கள் வந்திருப்பதாக மந்திரிக்கு அறிவித்தார்கள். மந்திரி யோசனைக்குப் பிறகு அரச சமுகத்துக்கு வரும்படி அனுமதி கொடுத்தார். சமையல் செய்வதின் பொருட்டு ஐந்து பேரும் தனித்தனி ஐந்து வேலைகளை ஒப்புக்கொண்டார்கள். சங்கீத வித்துவான் சமையல் செய்யவும், இலக்கண வித்துவான் தயிர் கடைச்சரக்கு முதலியன வாங்கி வரவும், ஜோதிடன் இலைபறித்து வரவும், வைத்தியன் காய் கறி வாங்கி வரவும், தர்க்க வித்துவான் நெய் முதலியன வாங்கி வரவும் ஒப்புக்கொண்டார்கள். அரிசி கொண்டுவந்திருந்தார்கள். சங்கீத வித்துவான் சமையல் செய்ய ஆரம்பித்தார். உலையில் அரிசியையிட்டு நெருப்பை யதிகமாக மூட்டினார். அது கொதிக்க வாரம்பித்தது. கொதிப்பின் தொனியைக் கேட்டவுடன் சப்தசுரங்களும் ஞாபகத்துக்கு வந்துவிட்டன. உடனே இரண்டு விறகுக்கட்டைகளைக் கையிலெடுத்துத் தாளம் போட வாரம்பித்தார். நான்கு காலத்துக்கும் அதிகமாகக் கொதிப்பின் வேகம் போய்விட்டது. தாளத்துக்கு ஒத்துவரவில்லை. வித்துவான் கண் சிவந்து உனக்காக ஒரு கணக்கு ஏற்பட்டிருக்கிறதா என்ன? என்று சினந்து கையிலிருந்த விறகுக்கட்டையால் பானையை ஓங்கி அடித்தார். அதனால் அடுப்பு நெருப்பு அரிசி முட்டு

எல்லாம் தூளாகிவிட்டன. போனது போகென்று வித்துவான்
கோபமாகக் குந்தியிருக்கிறார். இனி, இலக்கண வித்துவான் கடைச்
சரக்குகளை வாங்கிவிட்டு தயிருக்கு எதிர்பார்த்திருந்தார். அங்கொரு
இடையன் மோரோ——மோரு என்று கூறிவந்தான். வித்துவான்
இடையனை நோக்கி; 'ஏ கோபால! ததி அல்லது தயிர் என்றுகூறுக.
மோரோ—மோரு என்பது உயர்ந்தோர் வழக்கமன்று' என்றார்.
இடையன் எங்கு இலக்கணத்தைக் கண்டான்? 'ஐயா! வேணுண்ணா
வாங்கிக்கோ, வேண்டாட்டிபோ' என்று சொல்லிவிட்டுப் பின்னும்
அப்படியே கூறிக்கொண்டு நடந்தான். வித்துவான் கோபித்து 'ஏ
ஆயனே! உனக்குமட்டிலும் தனியே இலக்கண முளதோ' வென்று
அவன் கையைப் பிடித்தார். தயிர்க்குடம் தவறி வீழ்ந்துடைந்து
போயிற்று. இடையனும் வித்துவானும் இழுத்துக்கொண்டு நிற்கி
ருர்கள். மூன்றுவது ஜோதிடன் இலை பறித்தற் பொருட்டு ஒரு
ஆலமரத்தி லேறினன். அப்போது ஒருபல்லி சொல்லிற்று. அதை
யாராய்ந்து பார்த்தான். அது ஏறினல் அபாயம் வருமென் றிருந்
தது. சீ! என்று இறங்கினன். மற்றொரு பல்லி சொல்லிற்று. அதை
ஆராய்ந்தான். அது இறங்கினல் பெருமோசம் வருமென்றிருந்தது.
என்ன செய்வான்? பாவம்! அப்படியே ஏறாமலும் இறங்காமலும் நடு
மரத்திற் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறன். நான்காவது வைத்தியன்
பஜாருக்குப் போய்ப் பார்க்கக் காய்கறிகளொன்றும் பிடிக்கவில்லை.
ஒவ்வொன்றும் வாத பித்த சிலேட்டுமத்தை யதிகப்படுத்துவதாகவே
யிருந்தன. எல்லாவற்றுக்கும் பொருந்தியதாக ஒரு கறியுமகப்
படவில்லை. ஆலோசித்துக்கொண்டு ஒரு புறமாகப் பஜாரிற்றனே
யிருந்துவிட்டான். ஐந்தாவது தர்க்க வித்துவான் ஒரு தொன்னை
யில் நெய்யை வாங்கிக்கொண்டு வரும் வழியில் தர்க்கிக்க வாரம்பித்
தான். நெய்க்குத் தொன்னை ஆதாரமா, தொன்னைக்கு நெய் ஆதாரமா
வென்று தர்க்கித்தான். தொன்னையில்லாவிட்டால் நெய் நிற்காது.
நெய்யில்லாவிட்டால் தொன்னையைக் காற்று கொண்டுபோய்விடும்.
தெளியவில்லை. தொன்னையைத் திருப்பினன். நெய் கொட்டிப்
போயிற்று. ஐயோ! மோசம் போயிற்றே என்று வருத்தமாக
அங்கோரிடத்தி லிருந்துவிட்டான். முடிவில் சமையலாகவுமில்லை.
சாப்பிடவுமில்லை. அஸ்தமிக்கும் வரையில் இராஜ சமூகத்திற்கு

வரவில்லையேயென்று மந்திரி விசாரித்தபோது விரையங்களை யமைத்து சேவகர்களால் எல்லோரையும் கூட்டிவந்து சாப்பிடச் செய்து பின்னும் வேடிக்கை பார்க்கும்பொருட்டு தலையணைகளை வைத்துச் சுருட்டிய பாய்க் கட்டொன்றை ஒரு சேவகனிடம் கொடுத்து வித்துவான்களிடம் கொண்டுபோய் பாயும் தலையணையும் இருக்கிறது என்று சொல்லிப் போட்டுவிட்டு வரும்படி செய்தார். அப்படியே சொல்லி சேவகன் போடவும் அதை யெடுக்கச்சென்ற மற்றவர்களை நோக்கி இலக்கண வித்துவான் ஏ மதியிலிகாள்! பாயும் தலையணை யென்றுசொன்ன சாமானியமோ? குடம் கும்பிகளெல்லாம் வெளியில் வந்துவிட்டா லென்செய்வது? என்னே! நம்மதியிருந்தவாறு என்று பதட்டமாக உளறினர். ஆமாம். யார்கண்டார். கொம்பு முளைத்த தலையணைகள் இராஜா வீட்டிலிருக்கலாம், நமக்கேன் பொல்லாப்பு என்று ஒருவரும் தொடாமலும் தூங்காமலும் அதிக ஜாக்கிரதையாக இரவைக் கழித்தார்கள். மறுநாட் காலையில் ராஜ சமூகத்துக்கு வரவழைத்து மந்திரி புத்திசொல்லி வெகுமதியும் தந்தனுப்பினு ரென்பது ஒரு பழங் கதை. ஆகவே இயற்கையறிவில்லாமல் எவ்வளவு படித்திருந்தாலும் அவன் விவேகியாக மாட்டான். ஆனால் படிப்பில்லாமல் இயற்கையறிவும் பயன்படாது. எப்படி உயிருக்கு உடலும் உடலுக்கு உயிரும் அவசியமோ, அதுபோலவே கல்விக்கு இயற்கையறிவும் இயற்கை யறிவுக்குக் கல்வியும் அவசியமாகும்.

இனிக் கல்வி ஒன்றிருந்தால் இயற்கையறிவு விசாலமடையுமோ என்னின் அப்படியன்று. மற்ற வழிகளுமுண்டு. கல்வியைப் பார்க்கினும் கேள்வி விசேஷமுடையது. 'கற்றலிற் கேட்டலே நன்று' என்றார் பெரியோர்கள். கேள்வியால், படித்தறிய முடியாத பெரிய பெரிய விஷயங்களை யெல்லாம் சுலபமாக அறிந்துகொள்ளக் கூடும். சீக்கிரமாக இயற்கையறிவு விசாலமடைதற்கு கேள்வியே விசேஷமுடையது. இரண்டாவது தேச சஞ்சாரம் செய்வதாலும், இயற்கையறிவு விசாலமடையும். பல தேசங்களைச் சுற்றி பல நடை யுடை பாவனைகளைப் பார்த்து பல தேசங்களின் வழக்கங்களையும் இயற்கைகளையுங்கண்டு சீதோஷ்ணங்களை யனுப

வித்தாலும் அறிவு விசாலமடையக்கூடும். இயற்கையற்புதங்களை யாராய்வதாலும் ஜனங்களோடு சௌஜன்னியமாகப் பழகுவதா லும் அறிவு விசாலமாகும். இன்னும் பல வழிகளுமுண்டு. ஆனால், கல்வி முதன்மையானது. இயற்கையறிவில்லாத ஒருவனுக்கு இவ் வளவும் பிரயோஜனமில்லை. அவன் சாதாரணமாக ஐந்தறி வுயிர்க ளோடு சேர்க்கப்படுவனே யன்றி மனித வர்க்கத்திற் சேரத் தகுதி யுடையவனல்லன்.

இத்தகைய பெருமையுடைய இயற்கையறிவு நம்மவருக்கு (நாட்டுக்கோட்டையாருக்கு) நிரம்பியிருக்கிறது. ஆனால் கல்வியறிவு குறைந்திருக்கிறது. கல்வியின் குறைவால் இயற்கையறிவு பிரகா சிக்கவில்லை. கல்வியின் பலமிருக்குமாகில் இந்தியாவில் பிராமணர் கட்கு அடுத்த படியாக நம்மவர் விவேகத்திற் பிரசித்தி யடையவும் உயர்ந்த பதவிகளைப் பெறவும் உலகமெல்லாம் கீர்த்தி பெறவும் சுலப மாக இடமுண்டாகும். ஆகலின் இது சம்பந்தமாக நம்மவரை நோக்கி நாம் கூறுவ தென்னவென்றால், நமது இயற்கையறிவு விசாலமடையும் பொருட்டு முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். நமது தமிழ்ப் பாஷையில் வைதிக லௌகிக நூல்கள் இன்னவென்ப தைப் பகுத்தறிந்து படித்தாவது அல்லது கேட்டாவது விஷயங் களைத் தெரிந்துகொள்ளவேண்டும். பிள்ளைகட்கு ஆங்கில பாஷை யையும் 16 வயது வரையாவது நன்றாய்ப்படிக்கும்படி கவனிக்க வேண்டும். சமாசாரப் பத்திரிகைகளையும் மாதாந்த சஞ்சிகைகளையும் வாங்கி எல்லோரும் படிக்கவேண்டும். தேசங்களைச் சுற்றி ஒரு முறை அவசியம் பார்க்கவேண்டும். பல ஜாதி ஜனங்களைப் பார்க்க வேண்டும். கூடியவரையில் அந்நிய பாஷைகளைப் பேசக் கற்றுக் கொள்ளவேண்டும். சிறிய பெரிய எல்லா விஷயங்களையும் காதில் கேட்கவேண்டும். இயற்கை யற்புதங்களைப்பற்றி ஆராயவேண்டும், இவைகளிலெல்லாம் விசேஷமாகப் பிரசங்கங்களைச் சலிப்பில்லா மற் கேட்கவேண்டும். பிரசங்கங்களைக் கேட்பதாலும் பத்திரிகை களை விடாமற் படிப்பதாலும் ஒருவன் பெரிய அறிவாளியாகக் கூடும். மேல்நாடுகளில் எவ்வளவு பெரிய மனிதர்களும் (Lords) பிரபுக்களும் பத்திரிகை படிப்பதையும் பிரசங்கங் கேட்பதையும்

அலக்ஷியம் செய்யமாட்டார்கள். அதனாலன்றோ அவர்கள் உல கத்தை யாளும் திறமை பெற்றார்கள். நமது நாட்டில் அற்பமான சிறு பொருளுள்ளவர்களும் தங்களைத் தாங்களே மதித்து அகம்பாவ முடையவர்களாக ஒரு இடத்துக்கும் போவதில்லை. ஒருவர் பேச் சையும் கேட்பதில்லை. ஒன்றையும் படிப்பதில்லை யென்று இரு மாந்து மதிகெட்டுப் போகிறார்கள். இத்தகையோர் ஒரு முறை மேல் நாடு சென்று அங்கு பெரிய கனவான்களும் கோமான்களும் ஜனங்களிடத்தில் நடந்துகொள்ளுகிற மரியாதையைக் காணுவார்க ளானால் தங்கள் பெருமையையும் தங்கள் பொருளையும் நினைத்து வெட்கமடைவார்கள் என்பதில் ஐயமில்லை. ஆகவே நாம் மேற் கூறிய பல வழிகளுளொன்றைப் பற்றி தங்களறிவை விசாலப்படுத் திக்கொள்வார்களாக.

---

## நாட்டுக்கோட்டையாருக்கு ஒரு பொதுச் சங்கம் வேண்டும்.

---

நமது நாட்டுக் கோட்டையாருள் இப்போதிருக்கிற விவாக முதலிய பல பழக்கவழக்கங்கள் மிகுந்த சீர்கேட்டையும் கஷ்ட நஷ்டங்களையும் தருவனவாயும் அளவில்லாத பொருள் தேவையுடையனவாயும் தற்காலத்துக் கொவ்வாதனவாயு மிருக் கின்றன. நம்மவருள் ஒருவருக்கு இயற்கையாகப் பொருட் பெருக்க மில்லாவிட்டால் அவர் ஆயுள் பரியந்தம் பாபபுண்ணியம் பாராது பொருளீட்ட லொன்றையே கருதி அன்னிய தேசங்களிற் சென்று ஒரு சுகமுமின்றிக் கவலையோடும் துக்கத்தோடும் அரும் பாடுபட்டுப் பெரும் பொருள் தேடவிரும்பிக் காலத்தை விடுக்க நேருகிறது.

நம்மவருட் பொருளீட்டலிற் பெயர் பெற்ற 60 வயது கிழவர் ஒருவர் அடியில் வருமாறு சொல்லுகிறார்:—தாம் தமது 14-வயது முதற் கொண்டு 56 வயது வரை 11 கணக்கு அதா வது 33 வருஷம் அன்னிய தேசத்திலிருந்து பொருளீட்டினதாக வும் ஈட்டியபொருள் சற்றேறக் குறைய ஒரு லட்சமிருக்கு

மென்றும், ஆனால் தமக்குக் குறைகளை இல்லை யென்றும், இப்பெரும் பொருள் ஒரு வீடு கட்டவும் ஒரு புத்திரனைச் சுவீகாரஞ் செய்து கொள்ளவும் அவனுக்கு விவாக முடிக்கவும் சரியாய் விட்டதென்றும், சுவீகார புத்திரன் பாகத்தையும் சூதாடியும் வியபிசாரஞ் செய்தும் பலவாறுகத் தம்மைக் கடனுக்கு ஆளாக்கி விட்டானென்றும், அக்கவலையே தம்மை நோய்க்குட் படுத்திய தென்றும் சொல்லி, கண்களினின்றும் தாரைதாரையாக ஜல மொழுகத் துக்கப் படுகிறார். பாருங்கள்! என்ன பரிதாபம்! அப்பா அந்நியநாடு சென்று அரும் பாடு பட்டுப் பிள்ளையுமின்றிப் பெரும் பொருளீட்டிப் போகமுமின்றிப் புண்ணியமுமின்றி வீணாய்க் கெடுத்து விடப்படுவதிற் பிரயோசன மென்ன? நாம் அரும் பாடுபட்டுத் தேடிய பொருள் நமது ஊண் உடை முதலிய சுக சௌகரியத்திற்கும் ஏழைகளை இரட்சிக்கவென்றும் பரம புண்ணியத்துக்கும் இன்னும் பரோபகாரமான தருமங்கட்கும் உதவக் கூடாதா? இவைகட்குதவாமல், வீண் டம்பச் செலவுக்கும் பெரிய பெரிய வீடுகளாகக் கட்டவும் நகை செய்யவென்றும் கம்மாளர் கடனுக்கும் உதவ வேண்டுமா? நம்முடைய பொருள் இப்படிப் போவதற்குக் காரணமென்னவெனின், நம்முள் வரம்பின்றி யேற்பட்டிருக்கும் பெருஞ் செலவுகளும் விவாக சம்பந்த மாகப் பெண்களுக்கு அளவில்லாமல் வாங்குவது கொடுப்பதும், பணக்காரர் சம்பந்தம் வர வேண்டு மென்னும் பேராசையுமே யன்றி வேறல்ல.

இத்தகைய விஷயங்களைத் திருத்துவதற்கும் இன்னும் காலத்துக்கேற்றபடி புதிய ஏற்பாடுகள் செய்வதற்கும் நம்முள் ஒரு பொதுச்சங்கம் ஏற்படுத்தி அதில் எல்லோரும் ஒன்றுகூடி யோசித்துச் செலவுகளைக் குறைத்து ஒரு அளவுகட்டி, அதுபோற் செல்வர் சாமானியர் எல்லோரும் நடந்துகொண்டால், நம்மவர்க்கு நிரம்ப சௌகரியமும் சாவகாசமும் சந்தோஷமும் செல்வப் பெருக்கும் கௌரவமு முண்டாகும். இப்படியே நம்மவருள் அநேக புத்திமான்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

ஆனால் அப்படியொரு சங்கமெங்கே ஏற்படுத்துவது? அதி லெல்லோரும் ஒன்று கூடுவதெப்படி? அதற்கேற்படுஞ் செலவை

யெப்படி வசூலிப்பது? அதிற் கவனிக்கப்பட வேண்டிய முக்கிய விஷயங்களெவை யென்பது முதலில் ஆலோசிக்கத் தக்கது.

தற்காலம் நம்மவரின் குடும்பங்கள் சற்றேறக்குறைய 15,000 இருக்கும். இவற்றுட் பெரும்பாலும் இராமநாதபுரம் ஜில்லாவி லும், சிறுபாகம் புதுக்கோட்டை ஸ்டேட்டிலு மிருக்கின்றன. நம் மவர் வசிக்கிற எல்லா ஊர்கட்கும் பொதுவாகவும் சமீபமாகவும் மையமாகவும் குன்றுக்குடி என்னும் சுப்பிரமணிய ஸ்தலமிருக்கி றது. இந்தக் குன்றுக்குடியில் நமது ஜாதியாரெல்லோருக்கும் பொதுவாக ஒரு சங்கமேற்படுத்த வேண்டும். இச்சங்கத்துக்கு நூறு குடும்பங்கட்கு இரண்டு மெம்பர்களாகச் சற்றேறக்குறைய முந்நூறு மெம்பர்கள் ஏற்படவேண்டும். இந்த மெம்பர்களை ஒவ் வோரூரிலும் அந்தந்தவூர் நகரத்தார்கூடித் தெரிந்தெடுக்கவேண்டும். அந்த மெம்பர்கள் ஒவ்வொரு முறையும் கூட்டத்துக்கு வந்து அங்கு வந்திருப்பவர்களில் ஒருவரை அவ்வப்போது தலைவராக நியமித்துக்கொண்டு, அவர் அக்கிராசனத்தின்கீழ் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைப் பகிரங்கமாகத் தெரிவிக்கவேண்டும். அதை யெல்லா மெம்பர்களின் ஆலோசனைக்கும் விட்டு மெஜாரிடியாக ஏற் படுகிற அபிப்பிராயத்தைத் தீர்மானிக்கவேண்டும். தீர்மானங்களை உடனே அச்சிட்டு எல்லோரு மறியும்படியும் அநுட்டிக்கும் படியும் செய்யவேண்டும். ஒரு வருஷத்தி லிரண்டுமுறை இச்சங்கம் கூட வேண்டும். மெம்பர்கள் தெரிந்தெடுக்கும் விஷயத்திலாவது பிரசி டெண்ட் ஏற்படுத்தும் விஷயத்திலாவது தங்கள் அபிப்பிராயம் நிறைவேறவில்லை யென்றுவது, மற்றெந்த விஷயங்களை முன்னிட் டாவது பொறாமைகொண்டு வீண்வம்புவாதஞ் செய்வதை, பொது நன்மையின் பொருட்டு, அடியோடு ஒவ்வொருவரும் விட்டுவிட வேண்டும். இப்படியொரு சங்கம் நடத்துவதற்குக் குன்றுக்குடி யில் ஒரு தனிமையான கட்டிடமும், ஒரு அச்சியந்திரமும், பட்ட தாரியான ஒரு மானேஜரும், சிற்பந்திகளும் வேண்டும். மீட்டிங் குக்கு வரும் மெம்பர்களுக்கு சங்கச் செலவிலிருந்தே உணவு முத லியன சப்ளை செய்ய வேண்டும். இதற்கு வேண்டிய செலவுகட் குக் குடும்பம் ஒன்றுக்கு ரூபா 10 வரிவைத்து வாங்கவேண்டும்.

அப்படி வாங்கினால், சற்றேறக்குறைய 1,50,000 ரூபாவாகும். இதைத் தவிர, மெம்பர்கள் வருஷ மொன்றுக்கு ரூபா 10 அல்லது 5 செலுத்திவர வேண்டும். புதிதாக விவாகமானால் ஒவ்வொரு விவாகத்திலும் ரூபா 10 வசூலித்து வரவேண்டும். இச் சங்க வாயிலாக ஒரு பத்திரிகை நடத்தி, அதில் சங்கத்தாரின் தீர்மானங்களையும், ஆசாரம், ஒழுக்கம், தொழில், வியாபாரம் முதலிய விஷயங்களையும் மாதந்தோறும் வெளிவரச் செய்து அப் பத்திரிகையைக் குறைந்த சந்தாவுக்கு நம்மவருள் ஒவ்வொரு குடும்பத்தாரும் வாங்கும்படி செய்யவேண்டும். இப்படிச் செய்தால் யாதொரு குறைவும் முடையுமின்றி நமது சங்கம் நீண்ட ஆயுளோடு வாழ்ந்து வரும்.

இனி, அச்சங்கத்திற் கவனிக்கப்படவேண்டிய விஷயங்களாவன:—தற்காலமுள்ளபடி தாறுமாறுகக் கண்டகண்டவாறு பாலிய விவாகமும், பாலியர் பருவப்பெண்களை மணத்தலும் இவை முதலிய சீர்கெட்ட விவாகங்களை நிறுத்தி, ஆண்களுக்கு 18 வயதுக்கும் பெண்களுக்கு 15 வயதுக்கும் மேற்பட்டே விவாகம் செய்யும்படி ஏற்பாடு செய்யவேண்டும், விவாகங்கட்கு இப்போதுள்ளதுபோல் அளவுகடந்தனவும் தேவையில்லாதனவுமான சீர் வரிசைகள் கொடுக்கும் வழக்கத்தை நிறுத்தி, ஏதாவது ஒரு அளவு கட்டி அதன்படி செல்வர் சாமானியர் எல்லோரும் செய்யவேண்டும். இதைத்தவிரப் பின் வருகிற வேவு புதுமை முதலிய ஒவ்வொரு சடங்குக்கும் வரம்பின்றிக் கொடுப்பதை நிறுத்தி ஒரு அளவு செய்யவேண்டும். இன்னும் மற்ற டம்பச் செலவுகளையும் கூடியவரை சிக்கனமாகச் செய்யவேண்டும். இப்படிச் செலவைக் குறைத்தால் பெண்களுக்குப் பொருள் வாங்குவதும் கொடுப்பதுமான அநியாயமும் குறையும். அது குறையவே, நம்மவருளனேகர் ஆயுள் முழுதும் பொருளீட்டுவ தொன்றையே கருதிப் பிரமச்சாரிகளாய் அந்நிய தேசங்களை வாசஸ்தானமாகக்கொள்வதும் குறையும். அனேகமாக எல்லோருக்கும் கல்யாணமு முடியும்.

இரண்டாவது, கல்வியை விருத்தி செய்யவேண்டும். ஆண்பிள்ளைகள் தமிழை நன்ருய் முறையாகக் கற்பதோடு சிறிதாவது ஆங்கி

லபாஷையையும் கற்கவேண்டும். பெண்கள் கட்டாயமாகச் சுய பாஷையை யெழுதவும் படிக்கவுமாகிலும் கற்கவேண்டும்.

மூன்றாவது, நம்மவருட் கைதியானவர்களை யேதாவது பிராயச் சித்தஞ் செய்துகொண்டு பகிரங்கமாக ஜாதியிற் சேரும்படி ஏற்பாடு செய்யவேண்டும்.

நான்காவது, நம்மவருட் சிலர் விவாக முதலிய விசேஷ காலங் களில் உயிர்வதை செய்வதையும் மாம்சங்களை யுபயோகிப்பதையும் தடுக்கவேண்டும். அதுபோன்ற மற்ற ஆசார முறைகளையும் சுகா தாரங்களையும் பிரசங்க மூலமாக நம்மவர்க்குப் போதிக்கவேண்டும்.

ஐந்தாவது, நம்மவருள் ஏற்படும் சிவில் சம்பந்தமான சகல விவகாரங்களையும் லாக்கோர்ட்டுகளுக்குப் போகாமல் அந்தந்த ஊரி லேயே பஞ்சாயத்து மூலமாகத் தீர்த்துக்கொள்ளும்படி செய்ய வேண்டும்.

ஆறாவது, நம்மவர் பொருளீட்டுதற்பொருட்டு அன்னியதேசங் கட்குச் சென்று (ஒரு கணக்கு) மூன்று வருஷமிருக்கும் வழக்கத் தை மாற்றி இரண்டு வருஷமாக்கவேண்டும். இதனால் அனேக நன்மைகளுண்டாகும்.

இனிப் பெண்களின் ஆடையாபரணங்கள் முதலியவை தற்கா லத்துக்கேற்றபடி மாற்றப்படுதல் முதலிய பல சிறு விஷயங்களை யும் அவ்வப்போது பல ரபிப்பிராயப்படி திருத்தப்பாடுசெய்ய வேண்டும்.

இப்படி, ஏற்பாடு செய்து நமது பழக்க வழக்கங்களை மாற்றிக் கொள்ளாவிட்டால் நம்மவர்களிடமிருக்கும் பெருமையும் கீர்த்தி யும் மங்கிவிட ஏதுவாகும். ஏனெனில், முன்போல அன்னிய தேசங்களிற் பொருளீட்டுதல் இப்போது வரவரக் குன்றிவருகிறது. ஆனால் செலவோ அதிகமாகிக்கொண்டே போகிறது. வருவாய் குன்றிச் செலவுமிகுந்தால் எங்ஙனம் நன்மையுண்டாகும்? ஆனால் நம்மவர் ஒவ்வொருவரும் திருத்தப்பாடு வேண்டுமென்றேதான் அபிப்பிராயப்படுகிறார்கள். முயற்சி செய்வாரின்றியே சூழ்மையா

யிருக்கிறது. இவைகளைக் கவனிக்கவேண்டியது முக்கியமாக நம்மவருள் பெருந்திரவியமும் செல்வாக்குமுடையவர்களைப் பொறுத்தது. அத்தகையோர் மௌனஞ் சாதிப்பது சரியன்று. தமக்கு எல்லா நலனும் அமைந்திருக்கும்பொழுது ஏன் பொது நன்மையான விஷயங்களைக் கவனிக்கக் கூடாது? பொது நன்மைக்குப் பாடுபடுவதைப் பார்க்கிலும் வேறு புண்ணியம் ஒன்றுமில்லை யென்பது ஆக்ஷேபமற்ற உண்மையன்றோ? இனியாவது அத்தகையோர் கவனிப்பார்களாக. மற்றவர்களும் தம்மாற்கூடுமான வரை பிரயாசைப்பட்டு இத்தகைய சங்கமொன்றை யேற்பாடு செய்துவிட்டால், அத்தினமே நம்மவருக்கு அதிர்ஷ்ட முண்டான நற்றினமாகும். நம்மவருள் எவ்வளவோ படித்தவர்களும் புத்திமான்களு மிருக்கிறார்கள். ஆனால் தங்கள் புத்திகளை வீணாக்கி மௌனஞ் சாதிக்கிறார்கள். முயற்சியின்றி ஒன்றுமுடியாது. இவ்வளவு நாகரீகமான காலத்திலும் நாம் திருத்திக் கொள்ளாவிட்டால் இனி எப்பொழுதுதான் நாம் திருத்தமடைந்து சிறப்புப் பெறுவது? சகோதரர்களே! கவனிப்பீர்களாக. நமது சோமசுந்தரப் பெருமான் திருவருள் புரிவாராக.

---

## * பத்திரிகை படித்தல்.

என தன்புள்ள சகோதரர்களே! பத்திரிகை யென்பது உயர்ந்த கல்விமான்களால் சாஸ்திர விஷயங்களையும், உலக விவகாரங்களையும், தொழில் முறைகளையும், அவ்வப்போது நடக்கிற வர்த்தமானங்களையும், தூர தேசங்களில் நடக்கிற விஷயங்களையும் தந்தி வாயிலாக அறிந்து எழுதியும், பொது ஜனங்களின் நன்மைக்குற்ற விஷயங்களை இராஜாங்கத்தா ரறியவும், இராஜாங்கத்தாரின் சட்டதிட்டங்களைப் பொது ஜனங்களறிய எழுதியும் இப்படிப் பரோபகாரமாக நடத்தப்படுவதென்பது நீங்கள் அறிந்த விஷயமே. இப்படி நடக்கிற பத்திரிகைகளைக், கௌரவத்தோடு ஜீவிக்க விரும்புகிற ஒவ்வொரு மனிதனும், வாங்கிப் படிக்கவேண்டியது மிக அவ

---

* வலையபட்டியிற் செய்த பிரசங்கம்.

சியமாக விருக்கிறது. நாகரீகமான மேல் நாடுகளில் சகல விவகாரங்களும் பத்திரிகை வாயிலாக வந்துவிடும். அங்கு சாமானியமான கூலி ஜனங்களும் பத்திரிகை படிக்கிற வழக்கமுண்டு. அங்கு எண்ணமுடியாத அவ்வளவு பத்திரிகைகள் நடைபெறுகின்றன. ஒவ்வொரு பத்திரிகைக்கும் ஆயிரக்கணக்கான சந்தாதார்களுண்டு. இன்னும் பிரபலமான பத்திரிகைகளுக்குப் பதினாயிரக்கணக்கான சந்தாதார்களுண்டு. நம் சென்னை ராஜதானியில் தேச பாஷைகளில் மிகச் சொற்பமான பத்திரிகைகளே நடைபெறுகின்றன. அப்படியிருந்தும், அவைகளை வாங்கிப் படிப்போரும் மிகச் சிலரே யிருக்கிறார்கள். அதிலும் நம்மவர்களில் நூற்றுக்கு ஒருவர் கூடப் பத்திரிகை வாங்கிப் படிப்பது அருமையாக விருக்கிறது. நம்மவருள் எழுதப் படிக்கத் தெரியாதவர்களும் பத்திரிகை வாங்கச் சக்தியில்லாதவர்களும் மிகச்சிலரே யொழியப் பலரல்லர். மேலும், நமது வியாபாரம் தொழில் நாகரீகம் முதலியன விருத்தியடைவதற்குப் பத்திரிகை படிப்பது மிக அவசியமாகவிருக்கிறது. சில காலத்துக்கு முன் பத்திரிகைகளில் எழுதப்படுகிற விஷயங்களைப் பொய்யென்றும், பொருளுக்காக வென்றும், பழங்கதை யென்றும் நம் நாட்டார் அனேகர் நினைத்து வந்தார்கள். இப்போது அது மாறிவிட்டது. இப்போது, ஒவ்வொரு வகுப்பாரும் தத்தமது முன்னேற்றத்துக்குற்ற வழிகளைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். நாமும் நமது முன்னேற்றத்துக்குற்ற வழிகளைத் தேடவேண்டியது அவசியம். அவற்றுள் முக்கியமானவைகளில் ஒன்று பத்திரிகை படித்தல் என்பதை நீங்கள் மறக்கக்கூடாது. மேலும், தேசபாஷைப் பத்திரிகைகளை ஆதரிப்பதும் செல்வவான்களான நம்மவரின் முதற்கடமையாக விருக்கிறது. பத்திரிகைகளில் உலக விவகாரங்கள் பலவும் எழுதப்படுகின்றன. உலக விவகாரத்தைப்பற்றி ஒருவன் சொல்லிக்கொண்டிருந்தால், நாம் எவ்வளவு ஆவலாக அதை யறிந்துகொள்ள விரும்புகிறோம். ஓர் ஊரில் நடந்த விஷயத்தை ஒருவன் கண்டு சொன்னால் நாம் எவ்வளவு ஆவலாகக் கவனிக்கிறோம். பத்திரிகைகளைப் படிப்பதினால் அப்படி மனிதர்கள் எத்தனை பேரைக் கண்டு பேசிய விஷயங்களை நாமறிந்துகொள்ளக் கூடுமென்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள்! புத்திமான்க

ளும், தேசாபிமானிகளுமான எத்தனையோ பேர்கள் பத்திரிகைகளுக்கு நிருப மெழுதுகிறார்கள். அவ்வறிஞர்களின் அபிப்பிராயங்களை நாமறிந்து கொள்ளவேண்டியது மிக அவசியமன்றோ? பத்திரிகை படிப்பது, கேவலம் பொழுது போக்குவதற்கே யெனச் சிலர் நினைக்கிறார்கள். அப்படி நினைப்பது தவறு. எவ்வளவு ஊக்கத்தோடு நாம் படிக்கிறோமோ அவ்வளவு நமதறிவு விசாலமாகி நமக்கு நன்மை உண்டாகும்.

இது விஷயத்தில் என் னனுபவத்தைப்பற்றிச் சிறிது சொல்லுகிறேன்: எனக்குப்பதினைந்து வயதுமுதல் சுமார் பத்து வருஷமாக நான் பத்திரிகை படித்துவருகிறேன். இதனால் எனது வைதிக லௌகிக விஷயங்களில் அனேக சாதனங்கள் எனக்குக் கிடைத்திருக்கின்றன. மேலும், உலோகோபகாரமாகப் பல விஷயங்களைப் பற்றி ஏதோ சில வார்த்தைகளை உங்கள்முன் முறையாகப் பேசவும் பத்திரிகைகளில் எழுதவும் நான் தெரிந்துகொண்டிருப்பதும் அதன் பிரயோஜன மென்றே நான் சந்தோஷமாகச் சொல்லுவேன். என்னினும் விசேஷ புத்திமான்களான நீங்கள்,படித்துவந்தால் உங்களால் நமது நாட்டுக்கு எத்துணையோ உபகாரங்களை யெதிர்பார்க்கலாம். ஆதலின், நம்மவர் ஒவ்வொருவரும் பத்திரிகை படிக்கவேண்டியது மிகவும் அவசியமாக விருக்கிறது. தற்காலம் நடக்கிற தமிழ்ப் பாஷைப் பத்திரிகைகளில் சென்னப்பட்டணத்தில் நமது தென்னிந்தியாவின் ஜனத்தலைவரும் பழுத்த தேசாபிமானியும் மகா மேதாவியுமான ஸ்ரீமான் ஜி. சுப்பிரமணிய ஐயரவர்களால் சுமார் முப்பது வருஷகாலமாக நடத்தப்படுகிற சுதேசமித்திரன் என்னும் பத்திரிகை மிகச் சிறந்தது. இது ஒன்றே தமிழ்ப்பாஷையில் தினப் பதிப்பாக வெளி வருவது. வாரப் பத்திரிகைகளாகப் பிரபஞ்சமித்திரன், லோகோபகாரி, நாகை நீலலோசனி முதலிய பல பத்திரிகைகள் வெளி வருகின்றன. மாதந்தோறும் வெளிவருகிற சஞ்சிகைகளும் பலவுள. அவற்றுள் செந்தமிழ், வித்தியாபாநு, விவேகபோதினி, பிழைக்கும் வழி இவைகள் முக்கியமானவை. அன்பர்களே! இவற்றுள் எதையாவது ஒன்றை முதலில் வாங்கிப் படிப்பீர்களாயின் பிறகு நீங்கள் எல்லாப் பத்திரிகைகளையும் படிக்க

விரும்புவீர்கள். பத்திரிகைகளைப் படித்ததின் பிரயோஜனமாகவே மேலைச்சிவப்பட்டியில் ஸ்ரீமான் வ. பழ. சா. பழனியப்ப செட்டியாரவர்கள் ஆதரவில் சன்மார்க்கசபை யென ஒரு சபை ஸ்தாபித்தும், அதன் மூலமாக ஆசாரம், ஒழுக்கம், ஈசுவரபக்தி முதலிய சன்மார்க்கங்களை ஜனங்களுக்குப் போதித்தும், இப்போது பல ஊர்களில் வித்தியா சாலைகளும் ஆசார சீர்திருத்தங்களும் விர்த்தியாகி வருவது நீங்கள் அறிந்த விஷயமே. அறிஞர்களாகிய உங்களுக்கு இன்னும் விசேஷமாக நான் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை யாதலின் இம்மட்டோடு முடிக்கிறேன்.

---

## நாட்டுக்கோட்டையாரும், ஈசுவர பக்தியும்.

---

இந்தப் பெரிய உலகத்தில், நம்மைப்போல ஒரு ஜாதியார் முழுதும் ஒரே வழியாகக் கடவுளை வழிபடுகிறவர்க ளில்லை. மற்ற ஜாதியாருள் ஒரு குலத்திற் பிறந்த நான்கு சகோதரர்களில், ஒருவன் சைவனாகவும், ஒருவன் வைஷ்ணவனாகவும், ஒருவன் கிறிஸ்தவனாகவும், இன்னொருவன் நாஸ்திகனாகவும் இருக்கக் காண்பது இக்காலத்தி லரிதன்று. கிறிஸ்து மதமோ, தனது பெரிய வாயைத் திறந்துகொண்டு, நமது தேசத்தை விழுங்கி வருகிறது. அதன் வாயுள் பிராமணன் முதல் பறையன் வரையுள்ள சர்வ ஜாதியாரும் புகுந்தனர். ஆனால் நமது அருமைச் சகோதரர்களில், ஒரு ஏழைச் சிறுவன் கூடப் புகுந்திருக்கிறானென்று சொல்ல முடியாது. கிறிஸ்து மதப் பிரசாரகர்கள், அம்மதத்திற் புகுவோருக்கு எத்தனைச் சகாயங்களோ செய்கின்றனர். பெண்டிரும் மணக்கத் தருகின்றனர். உத்தியோகம் தருகின்றனர். மனிதன் மயங்கத்தக்க உபாயங்களெல்லாம் செய்து மதத்தை யபிவிர்த்தி செய்ய முயலுகின்றனர். எப்படி முயன்றாலும் நம்மவர் மட்டும் அந்த வலையிலகப்படுவதில்லை. அவர்கள் காட்டுகிற அநித்தியப்பொருள்களை மதிப்பதுமில்லை. ஒரு சிறிதேனும் மனம் தளராது விபூதி, உருத்திராக்கதாரணம், பஞ்சாக்ஷரஜபம், ஆலயதரிசனம், க்ஷேத்திரயாத்திரை முதலிய அங்கங்களையுடைய சைவ சமயத்தை ஒரு சிறு பொழுதாவது விட்டுப் பிரிவதில்லை.

கனவிலும் நனவிலும் ஈசுவர நாமத்தை மறப்பதில்லை. நம்மவ
ருள் பிறந்த குழந்தை முதல், மரணத்தறுவாயிலிருக்கும் விருத்
தர் வரை, எவர் நெற்றியைப் பார்த்தாலும், திருநீறு ஜ்வலித்
துக்கொண்டிருக்கும். பேய்க்குணமுள்ள பெண்மராயினும், நெற்
றியில் நீறில்லா திருக்கமாட்டார்கள். நம்மவர் விசேஷ காலங்களில்
முதல் உபயோகம் திருநீறுதான். இத்தகைய ஒரே மதப்பற்றும்
நம்பிக்கையுமுள்ள ஒரு ஜாதி நம்மைத்தவிர இந்த உலகத்தில்
வேறே இருக்கமாட்டாதென்று யாவரும் ஒப்புக்கொள்வார்கள்
இவ்வளவு உன்னத நிலையில் நாமிருந்தும், அது சம்பந்தமாகச
செய்யவேண்டிய சிலகடமைகளைச் செய்யாமலிருப்பது விசனிக்க
த்தக்கது. நம்மவருள் அநேகருக்கு மத சம்பந்தமான விசாரமே
யிருப்பதில்லை. சைவ சமய மென்பதென்ன? அதனுட்சமயங்
களெவை? அவைகளின் நோக்கங்களெவை? புறச்சமயங்களெ
வை? அவைகளின் றன்மையென்ன? அவைகட்கும் நமது சம
யத்துக்குமுள்ள பேதங்களெவை யென்று நம்மவருள் அநே
கருக்குத் தெரியாது. இதனால், ஒவ்வொருவரும் மதசம்பந்த
மாகப் படித்துத் தேற வேண்டுமென்பது என்னபிப்பிராயமன்று.
மேலெழுந்தவாரியாகச்சிறிது சிறிது தெரிந்துகொண்டாலும் போது
மானது. பிறகு, அநுபவஞான முண்டாகிவிடும். ஒரு சிறிது
மறியாமல், ஒரு மதத்தை வழக்கமாக அனுட்டிப்பதில பெரும்
பிரயோசனமில்லை. ஏனெனின், ஆலயத்துக்குப் போகிறோம்.
அங்கே எதை நினைத்துத் தோத்திரம பண்ணுகிறது? ஒரு
பொருளை நினைக்கவென்றால், அதின் குணங் குறிகள் மனத்துள்
தங்கவேண்டுமன்றோ? ஒரு மனிதனை நினைக்கும்போது, அவன்
ரூபம், குணம், செய்கை முதலியன நமக்குத் தோற்றுகின்றனவே
அவைகளை நினையாமல், அம்மனிதனை யெப்படி நினைக்கிறது?
அதுபோல ஈஸ்வர தியானம் பண்ணும் போது, அவரது ஆற்
றலும் திவ்ய குணாதிசயங்களும் பெருமைகளும் நம்மனத்துட்
டோற்றாவிட்டால் சச்சிதானந்த ரூபியான அவரை நாம் எப்படி
நினைக்க முடியும்? அவை தோற்றுவதற்கு அவரைப்பற்றி நூல்
வாயிலாக நாமறிந்திருக்கவேண்டும். அவையொன்றையு மறியாது
மனத்தில் எவை தங்கத்தக்கன? அவை மனிதர்களும் வியாபாரமு

மன்றோ? அவைகளை நினைந்துகொண்டு ஆலயத்திற் கும்பிடு போடுவதிற் பிரயோஜனமுண்டா? நம்மவர் ஆலய தரிசனஞ் செய்யும்போது சற்று கவனித்தால் இதனுண்மை தெரியும். நம்மவர் கோயிலுக்குப் போனவுடன் பாட்டுப்படிக்கிற வழக்கமுண்டு சிலர் "அல்லல் போம் வல்வினை போம்" என்ற விநாயகர் காப்புச் சொல்லி அடுத்த படியாக "ஆபத்துக்குதவாப் பிள்ளை" முதலிய பாட்டுகளையும் வரிசைக் கிரமமாகப் படிக்கிறார்கள். சிலர் இன்னது படிக்கிறோமென்று ஞாபகமில்லாமலே வாய்ப்பழக்கமாகப் பல பாட்டுகளைத் தடபுடலாகவும் உரத்த சப்தத்தோடும் மளமளவென்று கொட்டுகிறார்கள். சிலர், காளி கறுப்பன் மு[illegible] தேவதைகளின் தோத்திரத்தைச் சிவாலயங்களிற் படிக்கிறா[illegible]. இன்னும் சிலர் கோயிலுக்கு வந்தவுடன், எல்லா வியவகாரத்தையும் பேசி முடித்து விடுகிறார்கள். சிலர், சுற்று முற்றும் பார்த்து மனதை யெங்கெங்கேயோ செல்ல விடுகிறார்கள். இதையெல்லாம் கவனிக்கும்போது, கடனுக்குச் சுவாமி தெரிசனஞ் செய்கிறார்களென்று சொல்ல இடமுண்டு. ஆனால் அது அவர்கள் குற்றமன்று. ஏனெனில், போதுமான கல்வி இல்லாமையே இதற்குக்காரணம். கற்றறியாமலும் கேட்டறியாமலு மிருக்கும் மனம் எதைப்பற்றி நிற்குமென்பதை விவகரிக்க வேண்டியதில்லை. நம்மவருக்கு எழுத்துப்படிப்பு மிகக்குறைவாகவிருக்கிறது. அதனால் நூல்களைக் கற்கவும் கேட்கவும் ஆற்றலில்லை. அதனால் மத சம்பந்தமாக ஒன்றும் தெரிந்துகொள்ளக்கூடவில்லை. அதனால் கும்பிடுவதெல்லாம் வீண் குட்பிடாகிறது. ஆகவே, கல்வியை யபிவிர்த்தி செய்யவேண்டியது நம்மவரின் முதற் கடமையாகிறது. இன்னு மிக்கல்வியால் நாமடையும் பிரயோஜனங்கள் பலவுள. அவைகளை விளக்கமாக அடுத்த முறையில் எழுதுவேன்.

---

## நாட்டுக்கோட்டையாரும், கல்வியும்.

"கல்வி" யென்ற ஒரு சிறந்த பொருள் யாவரும் விரும்பத் தக்கது. அது எல்லாவகையிலும் மனிதனுக்கு அநுகூலமானது. ஒவ்வொரு மனிதனும் தன் ஜீவனந்தனக்குப் பிறரை பார்த்து நிற்

காமல் கல்வி கற்றே ஏதாவது ஒரு தொழில் செய்து அதன் மூலமாக ஜீவிக்கவேண்டிய தவசியமானதால் பொதுவாக எல்லோருக்கும் அது அவசியமே யாகும்.

ஆனால் இப்போது சிறப்பாக நம்மவருக்குக் கல்வி யெவ்வளவு அவசிய மென்பதைப் பற்றி மட்டும் ஆராய்வோம். நம்மவருக்கு எல்லா நலன்களும் பெருமையும் நிரம்பியிருந்தும் இந்தக் கல்வியில்லாத குறை பெருங்குறையாக விருக்கிறது. அதாவது அழகியதும் அபூர்வமானதுமான பொருள்கள் நிரம்பிய ஒரு அற்புத மாளிகையில் தீபமில்லாத குறைபோ லிருக்கிறது. இந்தக் குறைமட்டும் நம்மை விட்டு நீங்கி விட்டால் நமது பெருமை அளவுகடந்து பிரகாசிக்கும். தற்காலத்தில் நம்மவர் கற்கிற கல்வி நிரம்பப் பிரயோஜனமற்றது. நமது திண்ணைப்பள்ளிக்கூடத்து உபாத்தியாயர் சிலர்க்குப் பெரும்பாலும் உயிர்மெய்யெழுத்துக்கள் தெரியாது. "ள, ழ—ர,ற—ண, ன, ந" முதலிய வெழுத்துக்களின் பேதங்கள் தெரியாது. இன்னும் பல குற்றங்களோடு நம் பிள்ளைகள் கற்கிறார்கள். அப்படிக் கற்ற பிள்ளைகளைப்பற்றி நாமெப்படிக் குறைகூறுகிறது? பிள்ளைகள் பெரியவர்களான பொழுதும் இந்தக்குறை பெருங்குறையாகவே யிருக்கிறது. இது பிறர் நகைத்தற்கு இடமாகிறதென்று நான் சொல்லவேண்டியதில்லை. தாய்ப்பாஷை கற்பதில் இவ்வளவு அஜாக்கிரதையாக விருப்பது எவ்வளவு குறைவென்று நீங்கள் யோசித்துப் பாருங்கள். கல்வியில்லாத செல்வம் என்ன பிரயோசனமுடையது? சந்திரனில்லாத வானத்துக்கும் கல்வியில்லாத செல்வத்துக்கும் பேதமுண்டா? நன்மை, தீமை, பாப புண்ணியங்களைப் பகுத்தறியும் சக்தி கல்விக்குரியதன்றோ? பகுத்தறிவில்லாத மனிதனை விலங்கோடொப்ப நோக்குவர். "தக்க இன்ன, தகாதன இன்னவென், றொக்க வுன்னல ராகி லுயர்ந்துள, மக்களும் விலங்கே."

இந்தக் கல்வியானது, இம்மையில் கௌரவமான வாழ்க்கையை ஈந்து மறுமையில் வீடடைதற்கு வழிகாட்டியாக உதவுகிறது. இதைப் பார்க்கிலும் மனிதனுக்கு அவசியமான பொருள் வேறே யொன்றுமில்லை. இவ்வளவு அருமையான கல்வி விஷயத்தில்

நம்மவர் கவனஞ் செலுத்தாதிருப்பது எவ்வளவு விசனகரமான விஷயம்! நமது "சன்மார்க்க சபை"யின் பிரயோஜனமாக சமீபத்தில் சிறிது கிளர்ச்சியுண்டாகி சில ஊர்களில் வித்தியாசாலைகளேற்பட்டிருக்கின்றனவெனினும், அப்படியே நம்மவர் வசிக்கிற ஒவ்வொரு ஊரிலும் ஏற்படவேண்டும். அதோடு பிள்ளைகளை நன்றாய்ப் படிப்பிக்க வேண்டுமென்ற எண்ணம் ஒவ்வொரு பிதா மாதவுக்கும் உண்டாகவேண்டும். பிள்ளைகளை நிரம்பச் சிறுவயதில் வியாபாரத் துறையில் விடுவதைச் சற்று நிறுத்தி நன்றாய்ப் படித்தபிறகு வியாபாரத்துக் காரம்பிக்கச் செய்கிற வழக்கம் அனுட்டிக்கப்படவேண்டும். நமது சிறுவர்கள் ஒவ்வொருவரும், எழுத்துப்பிழை முதலிய இலக்கணக் குற்றமின்றியும் கொண்ட கருத்தைச் "சுருங்க எழுதி விளங்கவைத்த" லென்ற அழகோடு கடிதம் எழுதவும், பேசவும், ஏதாவது செய்யுட்களைப் படித்துத் தாங்களே விளக்கமான பொருள்களை யறிந்து கொள்ளக் கூடியதாகவும், கற்றுவிட்டால் அதுவே போதுமானது. அதற்குமேல் சௌகரியம்போற் செய்யலாம். இது விஷயத்தில் இனியொரு நிமிஷமேனும் நாம் தாமதிப்பதிற்கில்லை.

இதோடு நம்மவர் ஆங்கிலபாஷை கற்கவேண்டியதும் அவசியமாகிறது. அது இராஜபாஷையாக விருப்பதோடு தற்காலத்துக்கு அதிக பிரயோஜனமுடைய பாஷையாகவு மிருக்கிறது. நாம் ஆங்கில மட்டும் கற்றிருந்தால் எந்தத் தேசத்திற்குச் சென்று வியாபாரஞ்செய்ய விரும்பினாலும் அல்லது, சுற்றுப்பிரயாணஞ் செய்ய விரும்பினாலும் அத்தேச பாஷையைப்பற்றி நமக்குக் கவலையே இராது. ஆங்கிலங் கற்பதால் புதுக்கிளர்ச்சியும் பொது நோக்கமும் அநாவசியமான பழைய வழக்கங்களை மாற்றுதற்குத் தைரியமும், புதுமுறைகளை யனுட்டிக்க யுக்தியும், புதியதொழில் வியாபாரங்களைச் செய்யும் சக்தியும், இன்னும் அநேக நன்மைகளு முண்டாகும். இப்போது நம்மவர் பற்பல தூரதேசங்கட்கும் சென்று பெரிய பெரிய வியாபாரங்கள் செய்வதால் அங்கு ஆங்கிலபாஷையின் உதவி யில்லாமல் நிரம்பக் கஷ்டமாயிருப்பது நீங்களறிந்ததே. ஒவ்வொரு நாளும் நமக்கு ஆங்கிலபாஷை முன்வந்து நிற்கின்றதும் அதை நாம் தெரிந்துகொள்ளக்கூடாமல் பிறர் வாய்பார்த்து நிற்பதுமெவ்

வளவு குறைவும் காரியக்கேடு மென்பதை நீங்கள் யோசித்துப் பாருங்கள்! ஆங்கிலம் அதிக பிரபலமடைந்த இக்காலத்திலும் நம்மவர் ஒருவர், இங்கிலீஷ் பேசுவதென்றால் வெகு ஆச்சரியமாக விருக்கிறது. நமக்குத் தாய்ப் பாஷையான தமிழ் எவ்வளவு அவசியமோ அதற்கு ஒரு படி விசேஷமாகவே இக்காலம் ஆங்கிலபாஷை அவசியமாகும். தற்காலம் நமது தொழில் அல்லது வியாபாரத்துக்கு இத்தகைய கல்வி நிரம்ப முக்கியமானதென்று அனேக புத்திமான்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். கல்வியில்லாக் குறையால், நம்முள் ஒற்றுமையில்லாமல் சிறிய பெரிய எல்லா விஷயங்களிலும் விவகாரமுண்டாகி, கஷ்ட நஷ்டங்களேற்படுகின்றன. ஆதலால் கல்வியை விருத்திபண்ண வேண்டியது நம்மவரின் முதற்கடமையும் முக்கிய கடமையுமாக இருக்கிறது.

ஆங்கிலங் கற்றற்கு நமது பிள்ளைகள் கொழும்பு, மதுரை, சென்னை, புதுக்கோட்டை முதலிய விடங்கட்குப் போய் அசௌகரியத்தோடு படிப்பதைப் பார்க்கிலும் நம்மவர் வசிக்கிற பெரிய ஊர்களான தேவிகோட்டை, காரைக்குடி, கானாடுகாத்தான் முதலிய விடங்களில் உயர்தர வித்தியாசாலை (High School)களும் அதை யொட்டி மாணவர் விடுதிவீடு (Boarding house) களும், ஏற்பட்டு விட்டால் நிரம்ப சௌகரியமாக விருப்பதோடு ஜாஸ்தியான பிள்ளைகள் படிக்கவும் ஏதுவாகும். இந்த முக்கியமான தர்மத்தை நகரத்தார் கவனித்துக் கூடிய விரைவிற் செய்வார்களென்று நம்புகிறேன்.

இனி இதோடு நமது ஆண்பிள்ளைகளைப் போலவே, பெண்பிள்ளைகளையும் படிப்பிக்கவேண்டியது நிரம்ப அவசியமாகிறது. நமது பெண்கள் படிக்காததினால் நமது சரீரத்திற் பாதிப்பலம் குறைந்திருக்கிறது. நமக்குப் பல அசௌகரியங்க ளுண்டாகின்றன. அதனால் இல்வாழ்வின் சுகங்களை நாம் பெரும்பாலு மிழக்கவேண்டியதாகிறது. பெண்கள் படித்திருப்பார்களானால் அது நமக்கோர் புதையலெடுத்த தனம்போலாகும். அனேக விஷயங்களில் நமக்கு உபகாரமாக அவர்கள் இருப்பார்கள். நமது வாழ்க்கை யிப்போதிருப்பதைப்பார்க்கிலும் விசேஷ கௌரவ முள்ளதாகும். இதை விரித்துப் பேசுதற்குக் காலம் போதாமையால் பெண்கல்வி அவசிய மென்பதைப் பலமுறையாக வற்புறுத்திமட்டும் அதை நிறுத்துகிறேன்.

இனி, தர்மம் செய்கிற விஷயத்தில் நமக்கு நிகராக ஒரு ஜாதி இந்தத் தென்னிந்தியாவி லிருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் நாம் செல்லுகிற வழியை (Line) மட்டும் சிறிது மாற்ற வேண்டிய தாயிருக்கிறது. தற்காலம் பெரும்பாலும் சிவாலயம் பாடசாலை சத்திரம் முதலிய தர்மங்கள் மட்டும் கவனிக்கப்படுகின்றன. அவை கள் உத்தம புண்ணிய மென்பதி லையமில்லை. ஆனால் மற்றப் புண் ணியங்களை மறந்திருப்பதும் ஞாயமில்லை. பொதுஜனங்கட்கு உப காரமாக பாதை வசதி (Road), வைத்தியசாலை (Hospital), ஏழை கட்குக் கஞ்சிவார்த்தல், வித்தியாசாலை முதலிய விஷயங்களிலும், நாம் கவனஞ் செலுத்தவேண்டும். அவைகளும் நமது ஈசனுக்கு அதிகப் பிரீதியை யுண்டுபண்ணு மென்பதை மறக்கக் கூடாது.

> இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
> தம்மை விளக்குமால் தாம்உளராக் கேடின்றால்
> எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
> மம்மர் அறுக்கும் மருந்து."
> "பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல கால வகையி னானே."

---

# நாட்டுக்கோட்டை நகரத்தார் தர்மமும், கல்வியும்.

தர்மம் செய்யவேண்டியது அவசியந்தான் என்று நம்மவர் (நாட்டுக்கோட்டையார்கள்)முன் பேசுவது கொல்லர் தெருவில் ஊசி விற்பது போலாகும். ஏனெனில் அதுவிஷயத்தில் நம்மவர் நிரம்ப நம்பிக்கையும் கடைப்பிடியுமுள்ளவர்கள். ஆனால், அது எப்படிச் செய்யப்படுகிறது? எப்படிச் செய்யவேண்டு மென்பதுதான் நம்ம வர் முன் ஒருமுறையல்ல, இருமுறையல்ல, பலமுறையும் பேசக் கூடியதா யிருக்கிறது.

எந்த நிமிஷம் வருவாயதிகமாயிருக்கிறதோ அந்த நிமிஷமே ஏதாவது தர்மம் செய்யவேண்டுமென்னும் அருமையான எண்ண முதிப்பது வணிகமக்களான நம்மவருக்கேயன்றி வேறெந்தவருக்

ரும் அமைந்திருக்கவில்லை. மற்ற ஜாதியாருள் இவ்வெண்ணம் ஏக தேசமாகத்தா னிருக்கிறது. அதிலும் பெரும்பொருள் படைத்தா லன்றி கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது செய்யப்புகுவதில்லை. நம் மவரோ, தங்கள் சுக சௌகரியங்களைக் குறைத்தாவது சிறிது சிறிது தர்மம் செய்யவேண்டுமென்னும் முழு நம்பிக்கையுடையவர்கள். தற்காலத்தில் பெரிய பெரிய ஆலயங்களும், கோபுரங்களும், சத்தி ரங்களும், சாவடிகளும், பசுமடங்களும், பாடசாலைகளும் சிறப்புற் றிருப்பது நம்மவர்களாலேயேயென்று நாம்சொல்லிக்கொள்ளவேண் டியதில்லை. அது உலகமறிந்த விஷயம். ஆனால் இப்படிப் பெரிய பெரிய தர்மங்களை நம்மவர் செய்தாலும் பிறர் நம்மைக் குறைகூற இடமில்லாம லிருக்கவில்லையே யென்றுதான் நாம் வருத்தமுற வேண்டியதாயிருக்கிறது. குறைகூறுவதும் நியாயமில்லாமற் கூறி னால் நாம்கவனிக்கவேண்டியதில்லை. நியாயமாகவிருக்கும்போது நாம் கவனிக்கவேண்டிய தவசியமாகிறது. தற்காலம் நம்மவர் கவனஞ் செலுததிவருகிற சிவாலயத் திருப்பணி விசேஷபுண்ணியந்தான். ஆனால் அதைத்தவிர வேறு புண்ணிய மொன்றுமில்லை யென்று நினைப்பது தவறாகும். திருப்பணி விஷயத்தில் அளவில்லாமற் செலவு செய்வதிலும் பொது ஜனங்களை யாதரித்தற் பொருட்டுச் செய்யப்படுகிற தர்மங்கள் ஈசுவரனுக்கு அதிகப் பிரீதியை யுண்டா க்கும். ஏனெனின், பரமகருணாநிதியாகிய சிவபெருமான் தமது ஏழைமக்கள் நோயுற்றும் கஷ்டப்பட்டும் துக்கப்பட்டும் அறிவில் லாமலும் கஞ்சிக்கலைந்தும் வருந்தியும் திரியும்போது அவர்களை யாத ரிக்காமல் தமது செல்வமுள்ள மக்கள் தமக்குக் கட்டிவைககிற பெரிய ஆலயத்தாலும் செய்துவைக்கிற சுகசௌகரியத்தாலும் திருப்தி யடைய மாட்டார். அத்தகைய வெண்ணம் சர்வஜீவர்களுக்கும் பிதாவான ஈசனுக்கு ஒருபோதேனும உண்டாகுமா? பிதா மாதாக்கள் தங்கள் சுக சௌகரியங்களைக் குறைத்தாவது மக்களை நன்று யாதரிக்கப் பார்ப்பார்களன்றோ? ஆதலின் கனவான்களே! நமது பிதா மாதாக்களுக்கு நம்மிடத்தே கிருபையுண்டாக வேண்டு மென்றால் நாம் நமது ஏழைச் சகோதரர்களை யாதரித்தலும் பொது நன்மைக்குரிய தர்மங்களைச் செய்தலும் அவசியமும் விசேஷ பலன்றரக்கூடிய புண்ணியமுமாகும். இனி, புண்ணியத்தோடு

புகழையும் விரும்புவோமானால் ஆலயத்திருப்பணி சம்பந்தமான புகழைப் பார்க்கிலும் பொது நன்மையான தர்மங்களைச் செய்வதில் அதிகமான புகழுண்டு. இதனால் ஆலயதர்மம் பிரயோஜனமற்றதென்றும் கூடாதென்றும் நான் சொல்லவரவில்லை. ஆனால் சற்று அளவோடுசெய்து இதர தர்மங்களைப்பற்றியும் கவனிக்கவேண்டியதென்பது தான் என்னுடைய விருப்பம். நமது நாட்டுக்கோட்டையார் வசிக்கிற எந்தஊரிலும் ஏழைகட்குத் தர்மவைத்தியம் செய்யத்தக்க ஒரு வைத்தியசாலை கிடையாது. ஏழைகள் செலவில்லாமற் படிக்கத்தக்க வித்தியாசாலைகள் கிடையா. ஜனங்களுக்கு நல்லொழுக்கம் ஆசாரம் தெய்வபக்திமுதலிய விஷயங்களைப் போதிக்கத்தக்க சபைகள் கிடையா.பஞ்சகாலங்களில் ஏழைகளுக்குக் கஞ்சித்தொட்டி வைத்துக் கஞ்சிவார்க்கும் வழக்கம் கிடையாது. ஒரு ஊரிலிருந்து மற்ற ஊருக்குப் போகவரப் பாதை வசதியைப் பற்றி ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. அது பெரிய கஷ்டம். குன்றுக்குடியிலிருந்து இங்கு வருவதினும் கொல்லத்திலிருந்து பட்டணம் போவது சுலபம். இன்னுமெத்துணையோ குறைகளிருக்கின்றன. இவ்விஷயங்களிலெல்லாம் நம்மவர் கவனம் செலுத்துவதில்லை. திருப்பணிசம்பந்தமாக இதுவரை நம்மவர் செலவு செய்திருக்கிற பெரும்பொருளில் நூற்றில் ஒருபங்கு இப்படி விஷயங்களிற் செய்திருந்தால் எவ்வளவு நன்மைகளுண்டாகியிருக்குமென்று நீங்களே யோஜித்துப் பாருங்கள்.

இனி நம்மவர் நடத்துகிற சத்திரங்களிலே பிராமணர்கள் மட்டும் சாப்பிடலாமென்றிருப்பது சரியல்ல. பசி நோய் எல்லாருக்கும் பொதுவானது. பசித்து வந்தவர் யாவராயினும் அன்னமிடவேண்டியதும், வறுமையாளன் எவன் வந்தாலும் ஏதாவது பொருளுதவ வேண்டியதும் அவசியமும் தர்மமுமாகுமேயன்றி அவைகளைப் பெறுவதற்கு ஒரு ஜாதியார் மட்டும் உரிமையுடையவர்களாகமாட்டார்கள். நாம் செய்கிற எந்தத் தர்மமும் பொது நோக்கத்தோடு செய்வோமாயின் நமக்குப் புண்ணியமும் புகழும்,ஏழைகட்கு ஆதரவும், மற்றவர்கட்கு முயற்சியு முண்டாகும்.

இனி, பாடசாலைகளிற் படிக்கிற பிள்ளைகள் பின்னால் பிழைப்புக்கும் வழியின்றித் தவிக்கிறார்கள். அவர்களுக்குப் போதிக்கிற

பாடமும் கிளிப்பிள்ளைப் பாடமே ஆவதன்றிப் பொருள்கண்டு பயன் அடையத்தக்கதாயில்லை. இதைப்பார்க்கிலும் இப்பாடசாலைகளில் விளக்கமான பாடங்களைக் கற்பித்து பிழைப்புக்கு முட்டுப்படாமலும் தெய்வபக்தி ஆசாரம் ஒழுக்கம் விருத்தியடையும்படிக்கும் செய்தால் இப்பாடசாலைத் தருமம் மிகுந்த பயன்றரக்கூடும்.

இனி முடிவாக நம்மவர் கல்வியைப்பற்றிச் சிறிது சொல்லி விட்டு நிறுத்துகிறேன். பிறர் நம்மை மற்ற விஷயங்களி லெல்லாம் கௌரவமாகவே மதித்திருந்தாலும் கல்வி விஷயத்தில் மட்டும் மிகக் குறைவான எண்ணமுடையவர்களாகவே யிருக்கிறார்கள். உண்மையு மப்படியே. நம்மவர் கல்விகற்பதின் அவசியத்தை முற்றிலும் மறந் திருந்தார்களென்றே சொல்லலாம். பதினாயிரம்ரூபா சம்பளம்வாங்கு கிற ஒரு ஏஜண்டு கூடியவரையிலாவது, இலக்கணக் குற்றமில்லா மற் கடித மெழுதக்கூடாதிருத்தல் அது எவ்வளவு விசனகரமான விஷயம்! ஆனால் அவ்வளவு சம்பளம் கொடுக்கிற முதலாளியு மப்படியே யென்றால் நம்முடைய கல்வியைப்பற்றி யென்ன சொல்வது? இப்போது வர வர நம்மவர்க்குச் சிறிது நல்ல காலம் பிறந்திருக்கிறதென்றே சொல்லத்தக்க அறிகுறிக ளுண்டாயிருக் கின்றன. சிறிது காலத்துக்குமுன் நம்முள் படித்தவர்களைப் பண்டா ரங்களென்று நினைத்தார்கள். இப்போது கற்றவர்களை மதிக்கவும் தாங்களும் கல்வியில் ஆசைகொள்ளவும் ஆரம்பித்திருக்கிறார்கள். செல்வப்பெருக்குள்ளவர்களெல்லாம் கற்க ஆரம்பித்திருக்கிறார்கள். கூடியவரையில் நம்முள் உயர்ந்த கல்விமான்கள் அனேகர் தோன்றக் கூடுமென்று நாம் எதிர்பார்க்கலாம்.

நம்மவர் சுயபாஷையை முறையாகக் கற்பதோடு ஆங்கில பாஷையை யெழுதப் படிக்கக்கூடிய அளவாவது தெரிந்துகொள்ள வேண்டியது. ஏனெனின் தற்காலத்தில் இராஜாங்க சம்பந்தமான வியவகாரமுழுதும் ஆங்கிலபாஷையில் நடைபெறுகின்றன. நாம் அடிக்கடி அவ்விஷயங்களிற் சம்பந்தப்படவேண்டிய வியாபாரிகளாக விருக்கிறோம். ஒவ்வொருநாளும் நமக்கு ஆங்கிலபாஷை முன்வந்து நிற்கின்றது. அதை நாம் நேரிலறியக்கூடாமல் பிறர் கைபார்த்து நிற் பது நிரம்பக்கஷ்டமும் கௌரவக் குறைவுமன்றோ? இன்னொன்று

ஞாபகத்துக்கு வருகிறது. அதாவது நான் ஸ்ட்ரெயிட்ஸ் ஸெட்டில்மெண்ட் (Straits Settlements) டில் வசிக்கும்போது ஒரு கிளப்பிலிருந்த என் நண்பரான ஒரு ஆங்கிலேயரோடு சில வார்த்தைகள் ஆங்கில பாஷையிற் பேசினேன். உடனே அடுத்திருந்த மற்றொரு ஆங்கிலேயர் "செட்டிகளுக்குக்கூட இங்கிலீஸ் தெரிகிறது!" (Chetties too can speak English) என்று வெகு ஆச்சரியப்பட்டார். பாருங்கள், உலகமெல்லாம் இங்கிலீஷ் டவுன்களிலுள்ள வீடு, வாசல், தோட்டம், ரோட்டு, கோர்ட்டு, கச்சேரி, காப்பிகிளப் எல்லாம் இங்கிலீஷ். கடையில் சீனிகட்டும் கடுதாசிகூட இங்கிலீஷ். இப்படி வாய், கை, மேல், காலெல்லாம் இங்கிலீஷாகவிருக்கும் இக்காலத்திலும் நம்மவர் ஒருவர் இவ்வளவு பேசுவது வெகு ஆச்சரியமாம்! இதனால் நம்மவரை யெந்தமட்டில் மதித்திருக்கிறார்களென்பது நன்றாய் வெளியாகவில்லையா? இதுவிஷயத்தை இன்னும் நீட்டிப்பேசுவதற்கு அவமானமாக விருக்கிறது.

நமக்கு இப்போது முதலில் வேண்டியது கல்விதான். அக்கல்வியும் சுயபாஷையோடு ஆங்கிலமும் கற்கவேண்டியது அவசியமாகிறது. அதனாலேயே நமக்கு வேண்டிய முக்கிய திருத்தப்பாடுகளெல்லாம் தானே வந்துவிடக்கூடும். ஆதலின் நம்மவர் வசிக்கிற ஊர்கள்தோறும் வித்தியாசாலைகளும் தேவிகோட்டை, காரைக்குடி, கானாடுகாத்தான் முதலிய பெரிய ஊர்களில் வித்தியாசாலைகளோடு இங்கிலீஷைக் கற்கத்தக்க ஹைஸ்கூல் (High School) களும் ஆசார ஒழுக்கங்களைக் கற்பிக்கத்தக்க சபைகளு மேற்படவேண்டும். நம்மவர் தர்மஞ் செய்யப் புகும்போது அது பொது ஜனங்களுக் குபயோகமானதாவென்று முதலில் யோசித்துச் செய்யவேண்டும். ஒரு நாளைக்கு ஒருமணிநேரமாவது பொதுவிஷயங்களைப்பற்றிச்சிந்திக்கவேண்டும். சமாசாரப் பத்திரிகைகளை ஒவ்வொருவரும் அவசியம் படிக்கவேண்டும். தேச சரித்திரங்களை நன்றாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். எல்லாரோடும் சௌஜன்னியமாகப் பேசிப்பழகவேண்டும். இவைகளெல்லாம் மனிதவாழ்வுக்கு மிக அவசியமான விஷயங்களாகும். உலகத்திலே எவன் தன்னைப்போலப் பிற ஜீவர்களையும் நினைந்து பிற ஜீவர்களுக் கிதம்புரிவதே தனது கடமையெனக்கொண்டு பிறர்

வருந்த மனம்பொறுக்க பெருமையாளனே அவனே மனித தெய்வமெனப்படுவன். அவனே மோக்ஷத்துக்குருகன். அவ்விஷயங்கட்குள்ளேயே சரியை, கிரியை, யோகம், ஞானம் எல்லாமடங்கியுள்ளன. அவனே நமதீசனுக்கு முதற் புதல்வனாகிறான். இதை நம்மவர் ஒவ்வொருவர் மனதிலும் நிலைக்கச்செய்ய வேண்டுமென்று திருவருளைப் பிரார்த்திக்கிறேன்.

---

[நாட்டுக்கோட்டையாருள் பல பிரபுக்களும் கனவான்களுமாக 2500 ஜனங்கள் கூடிய பெருங்கூட்டத்தில் சொல்வன்மை, மனக்கிளர்ச்சி, ஆராய்ச்சித்திறனுடன் செய்யப்பெற்ற இவ்வுபந்யாசத்தை வியந்து "இராமன் பின்பு பிறந்தாரு முளரென்னைப் பிரியாதான்" என்று இளையபெருமாளைப் பற்றிப் பரதன் கூறியதுபோல இச்சபையின் தோற்றத்திற்குக் காரணபுருஷராகிய வித்வான் ஸ்ரீ மு. கதிரேசச்செட்டியாரவர்களின் கல்வியாற்றலுக்கு ஏற்ற துணைவர் இச்சிறுவயச் செட்டியாரவர்களேயென்பது இப்போது விளக்கமாயிற்று" என்று மிகவும் பாராட்டி மதுரை வித்யாபானுப் பத்திராதிபர் ஸ்ரீ மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்கள் பேசினார்கள்.]

# பரோபகாரம்.

செல்வமும், செல்வாக்கும் கல்வியுமுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் பொதுநலத்தில் விருப்பமிருக்கவேண்டும். அத்தகைய ஒவ்வொரு மனிதனும் பரோபகாரியாக இருக்கவேண்டும். சுயநலமொன்றையே கருதுகிறவன் உயர்ந்த மனிதனல்லன். சாதாரண விலங்குகளும், பக்ஷிகளும், பிற ஜந்துக்களும் தங்கள் தங்கள் மட்டில் ஜீவிக்கும்போது ஒரு மனிதன் தன்மட்டில் ஜீவிப்பது ஒரு பெரிய காரியமன்று. அதற்காக அதிகமான முயற்சியும், திரவியமும், கவலையும் வேண்டியதில்லை. அவைகளை அதிகமாக விரும்புகிற நமது உண்மை நோக்கம் என்னவென்று சற்று உற்றுப் பார்ப்போமானால் அது பரோபகார நிமித்தமே யென்பது வெளியாகும். பொது ஜனங்கட்கு நன்மைசெய்து அவர்களின் நன்குமதிப்பைப் பெறுவதிலும் பெரிய புகழும் புண்ணியமும் வேறில்லை. தனவந்தன் ஆனால் பரோபகாரமில்லாதவன் என்று பெறுகிற பெயரைப் பார்க்கிலும், சிறியதும் வேறில்லை. "பரோபகாரார்த்தம் இதம் சரீரம்" என்றபடி இந்த மானுட சரீரம்

எடுத்ததே பரோபகாரத்தின் பொருட்டென்பதை யுணரவேண்டும். எத்துணைப் பிறவியிலோ செய்த கடுந்தவத்தின் பயனாக இந்த அருமையான மனித சரீரமும், பகுத்தறிவும் நமக்குக் கிடைத்தனவென்பதை யுணரவேண்டும். இந்தச்சரீரத்தால் நாம் பெறவேண்டிய பேறு என்னவென்பதைக் கவனமாக ஆராயவேண்டும். அநித்தியப்பொருள்களில் ஆசைவைத்து மயங்கிவிடக்கூடாது. "களிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து, மிக்க நல்லறம் விரும்பாது வாழும், மக்களிற் சிறந்த மடவா ருண்டோ" என்றபடி இதை நம்பி நாம் மோசம் போவோமானால் நம்மிலும் பேதைகள் யாவர்? இந்த வாழ்வோ ஒரு நிமிஷமேனும் நம்பத்தக்கதாயில்லை. கண்மூடித் திறப்பதற்குமுன் எத்தனையோ மாறுதல்கள் உண்டாகி விடுகின்றன. இவைகளை ஆராய்ந்து பார்க்கப் புகின் பொதுவிஷயங்களிற் றலையிட்டுத் தத்தம்மாலியன்ற உபகாரத்தைச் செய்தற்கு ஒரு நிமிஷமேனும் தாமதிப்பதற்கில்லை. "நாளைச்சேய்வம் அறமெனிலின்றே கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்" ஆதலால் எப்போது பரோபகாரமே பெரும் புண்ணியமென்ற உண்மையை உணருகிறோமோ அந்த நிமிஷமே நம்மாலியன்றதைச் செய்து தீரவேண்டும். சிலர் தங்களுக்கு ஏராளமான செல்வமும் பிறவும் நன்கு அமைந்திருந்தும் ஒரு பிரயோஜனமுமின்றி தானுமுண்ணாமற் பிறருக்கு ஈயாமல் தனங்காத்த பேய்கள்போல் ஏட்டில் எழுதிப்பார்த்துவிட்டு மரணத்தறுவாயில் தன் மகனையழைத்துப் பொருளைச் செலவு செய்யாதே. என்னைப்போல் காத்திருந்து வைத்துவிட்டுவாவென்று புத்திமதி சொல்லி மடிகிறார்கள். இத்தகைய அறிவிலிகளைப்பற்றி நாம் என்ன சொல்வது? அறிவுள்ள சிலரும் பொது விஷயங்களிற் றலையிடாமல் விலகிநிற்பது விசனிக்கத்தக்கது. அவர்களுக்குப் புகழ் பெறுவதில் ஆசையிருக்கிறது. ஆனால் எத்தகைய புகழ் உயர்ந்ததென்று அவர்கள் ஆராயவேண்டும்.

சிலர் அற்ப விஷயங்கட்கெல்லாம் நியாயஸ்தலங்களில் அனாவசியமாக வழக்கிட்டு நினைத்தபடி முடிக்கவேண்டுமென்று பொருளைக் கண்டபடி செலவிட்டு எதிரியை ஹிம்சைசெய்து விடுவதிற் புகழுண்டென்று நினைக்கிறார்கள். சிலர் கைகட்டி வாய் புதைத்து

எதிரில் நின்று ஏமாற்றுகிற வேஷதாரிகட்கு வேண்டியதை யுதவி அவர்கள் பாடுகிற கட்டியத்திற் புகழுண்டென்று நினைக்கிறார்கள். சிலர் கானில் மழை பெய்தது போல அனாவசியமான தர்மங்களில் ஏராளமான பொருளைக் கொட்டுகிறார்கள். இவைகளாலுண்டாகும் புகழெல்லாம் ஜீவியகால மட்டுமே இருந்து அழியத்தக்க போலிப் புகழ்கள். புண்ணியமே நோக்கமாக பொது ஜனங்கட்கு நன்மை செய்து எதிர்பாராது தானே வருகிற புகழ்தான் நித்தியமான புகழ். இந்தப்புகழ்தான் அறிஞர் விரும்பத்தக்கது. இம்மையில் அளவற்ற கௌரவத்தையும் மறுமையில் மோக்ஷத்தையும் தரத்தக்கது. காலத்தை நோக்கி எதைச் செய்தால் பொதுஜனங்கட்கு நன்மையுண்டாகுமென்பதை ஆராய்ந்து அதைச் செய்யவேண்டும். நம்மவர் எத்தனையோ பெரிய பெரிய தர்மங்களைச் செய்கிறார்கள். ஆனால் ஒரு ஏழைக்கு தர்ம வைத்தியஞ் செய்யக்கூடியதாக நம்மவர் வசிக்கிற எந்த ஊரிலாவது ஒரு வைத்தியசாலை கிடையாது. நமக்கே நல்ல வைத்தியஞ் செய்துகொள்ள அயலூர் போகவேண்டியதாகிறது. ஏழைகள் இனாமாகப் படிக்கவாவது தொழில் கற்கவாவது கல்விச்சாலைகள் கிடையா. நமது பிள்ளைகள் படிப்பதற்கே அயலூர் போகவேண்டியதாகிறது. நம்மவர் வசிக்கிற ஒரு ஊரிலிருந்து மற்றவூருக்குப் போய்வருகிற பாதை வசதியைப்பற்றி நினைக்கும் போது இந்தத் தேசத்தை விட்டு எங்கேயாவது குடி போய்விடலாமென்று தோற்றுகிறது. இத்தகைய விஷயங்களில் ஏன் செலவு செய்யக்கூடாது? நாம் வசிக்கிற நமது சொந்த ஊர்களிலேயே சுகாதார விஷயங்களை நாம் கவனிப்பதில்லை யென்றால் பிறருக்கு நன்மை யெப்படிச்செய்வோம்? நமது தேசமே சுயநலங்கருதி க்ஷேமத்தை யிழந்த தேசமாகிவிட்டது. பரோபகாரமென்பதை நம் நாட்டிற் காண்ப தருமையாகிவிட்டது. தகப்பன் ஏதாவது மந்திரம் தந்திரம் கற்றிருந்தால் அதை மரணத்தறுவாயிலும் பிள்ளைக்குச் சொல்வதில்லை. எல்லாம் ரகசியம். எல்லாம் மந்திரம். அவைகளைப் பிறர் கற்றுக்கொள்வதி லிஷ்டமில்லை. இத்தகைய ஒருதேசமே நமது தென் இந்தியாவைத் தவிர வேறே யிருப்பதாகத் தெரியவில்லை. நாகரீகமான மேல்நாடுகளில் எந்த அருமையான விஷயங்களும் புத்தகமாக வெளிவந்துவிடும். எந்தப்பிரபு தர்மஞ்செய்தாலும் அது

தர்ம சலாசாலை அல்லது வைத்தியசாலையாகவே யிருக்கும். தங்கள் மட்டில் தாங்கள் வசிக்கிற ஊரும் தங்கள் சுகாதார நிலைமைகளும் நிரம்ப திருப்திகரமாயிருக்கும். செல்வாக்குள்ளவர்கள் எப்பொழுதும் பொது விஷயங்களிற் கவலையுடையோராகவே யிருப்பார்கள். இத்தகைய தேசமன்றோ முன்னுக்கு வரும்? இவர்களன்றோ புண்ணியஞ் செய்தவர்களாவார்கள்? கனவான்களே! சற்றேறக்குறைய 100வருஷகாலமாக இந்த மேனாட்டாரோடு நமது தேசத்தார் நன்றாய்ப் பழகியும் நடையுடை பாவனைகளைக் கற்றுக்கொண்டார்களேயன்றி அவர்களது குண வகைகளைக் கற்றுக்கொள்ளவில்லை. நம்மவருள் ஒருவருக்கு அதிகமான செல்வாக்குண்டாகி விட்டால், அவர்கள் சாமானிய ஜனங்களோடு பேசுவதும் தன் கௌரவத்துக்குக் குறைவென்று நினைக்கிறார்கள். அவர்கள் பார்வையும் பேச்சும் பிறரைப் பயமுறுத்துவனவாக விருக்கின்றன. குணமோ முன் சாந்தமாயிருந்தாலும் பிறகு கொதிப்புடையதாகிறது. இத்தகையோர் பொது நன்மையை எப்படி கவனிப்பார்கள்? பொது ஜனங்கட்குள்ள குறைகளை யெப்படி யறிவார்கள்? இதைவிட்டுத் தங்களைப்பொது ஜனங்கள் நன்கு மதித்திருக்கும் போது அவர்களது நன்மையை நாடி தன்னலத்தை யொரு பொருட்படுத்தாது எல்லாரோடும் சௌஜன்யமாகப் பழகி தமக்கேற்படுகிற சரீரப் பிரயாசை முதலியவற்றைக் கவனியாது பொது நலங்களை விருத்திபண்ணுவார்களாயின் அவர்கட்கேற்படுகிற புகழுக்கும் புண்ணியத்துக்கும் ஒரு எல்லையுண்டா? இத்தகைய பரோபகாரிகள் நம்மவருள் ஒருவரேனுமிதுவரை யில்லாதிருப்பது நிரம்ப விசனிக்கத்தக்கது. தற்காலத்தில் நம்மவர்க்குக் கல்வியும் செல்வமும் செல்வாக்கும் பெருகி வருகிறது. இவைகளை வீணான வழிகளில் உபயோகிக்காமல் சற்கருமங்களிலுபயோகித்துப் பரோபகாரமென்னும் பெரும் புண்ணியத்தைக் கைக்கொண்டு இம்மையில் கௌரவத்தையும் மறுமையில் நித்தியானந்த இன்பமயமான மோக்ஷத்தையும் பெறவேண்டுமென்பதே என் உபந்நியாசத்தின் கருத்தாகும்.

## கல்வியறிவில்லாத பெண்களும், குடும்ப வாழ்க்கையும்.

பெண்கள் அவசியம் படிக்கவேண்டுமென்று வற்புறுத்துவதைப் பார்க்கிலும் படிக்காமையால் வருந் தீங்கைப்பற்றி யெழுதுவது பிரயோஜனப்படுமென்பது எமது துணிபு. நமது நாட்டிற் பெரும்பாலும் குடும்பங்களிற் பெண்கள், புருஷர்கள் மனம் போல நடவாமல் சிறு விஷயமுதற் பெரிய விஷயம் வரை ஒவ்வொரு விஷயத்திலும் அபிப்பிராய பேதப்பட்டு எறுமாறாக நடந்து குடும்பத்துக்குச் சீர்கேடும் கௌரவக்குறைவு முண்டுபண்ணிப் புருஷர்களைச் சஞ்சல சித்தர்களாக்கி விடுகிறார்கள். ஒருவனுக்கு எவ்வளவு செல்வமிருந்தாலும் செல்வாக்கிருந்தாலும் கௌரவமிருந்தாலும் விவேகமிருந்தாலும் அவனுக்கு மனைவி சரியாக நடந்து கொள்ளாவிட்டால் அவன் சந்தோஷமாக இருக்கமுடியாது. மேற் சொல்லிய நன்மைகளுள் ஒன்றுமில்லாது வறுமையே குடிகொண்ட வாழ்வுடையோனாயினும் அவனுக்குப் பொறுமையுள்ள மனைவி மட்டும் வாய்த்தால் அவ்வருத்தங்கள் ஒன்றும் தோன்றாமல் ஜீவிக்க ஹேதுவாகிறது. கூலிவேலை செய்து பிழைக்கிறவனானாலும் அவனுக்குக் கிடைக்கிற கூலியின் அளவுக்குத் தக்கபடி செலவுசெய்து வீணாக ஆடை யாபரணங்கட் காசை வைக்காமல் அயலாரைப் பார்த்துப் பொறாமையும் ஆத்திரமும் கொள்ளாமல், புருஷனைக் கண்டு புலிபோற் சீறாமல், நாம் செய்த புண்ணியமிவ்வளவுதானென்று தேறுதலடைந்து தானும் தன்னாலியன்ற வேலையைச்செய்து புருஷனுக்குக் காலாகாலங்களி லுணவிட்டும் மற்றும் அவனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தும் ஒவ்வோர் சமயம் கூலியகப்படாவிடில் அதற்காகப் புருஷனை ஹிம்சிக்காமல் அன்றைக்கு அரைவயிறோ அல்லது உபவாசமோ இருந்து புருஷனோடு நன்மை தீமைகளைத் தானும் சலிப்பில்லாமல் அனுபவித்து, சாந்தமாகவும் பொறுமையாகவும் பேசி, இல்லறம் நடத்துகிற ஓர் உத்தம மனைவி வாய்த்தால் கூலிக்காரனானாலும் அவன் வாழ்வுக்கு நிகராக எதைச் சொல்லமுடியும்? அவனுக்குத் துன்பமேது? கூலியகப்படவில்லையே யென்றால் “அதற்கென்ன. நாளைப் பார்த்துக்கொள்ளுவோம், இன்று இருப்பதைப் புசிப்போம் கவலைப்படாதீர்கள்” என்று சமாதானஞ்

சொல்லுகிற மனைவியைப் பார்க்கிலும் இவ்வுலகில் மனிதனுடைய பாக்கியம் வேறுண்டோ?

ஐயோ! இவ்வுத்தம குணங்களுள் ஒரு சிறிதுமின்றி மகா துஷ்டைகளாகவும் மூர்க்க சிகாமணிகளாகவும் அறிவிருந்த வூரிற் குடியிருந்து மறியாதவர்களாகவும் உள்ள பெண்களே நமது நாட்டில் (S. India) பெரும்பாலும் காணப்படுகிறார்கள். பெண்ணுருவும் பேய்க்குணமுமுள்ள இந்தக் காளியாயிகட்கு முதலாவது, தன்னோடு உடனிருந்து அநேக காலம் பழகிவருகிற புருஷனது குணமிப்படி, மனமிப்படி, ஒழுக்கமிப்படி, என்று அறிந்துகொள்ளும் சக்தியிருப்பதில்லை. இரண்டாவது, தங்கள் குடும்பம் இன்ன நிலைமையிலிருக்கிறது, இவ்வளவுதான் வருவாயுள்ளது, இவ்வளவு தான் செலவு செய்யலாம் என்று அறிந்துகொள்ளுவதுமில்லை. இனி புருஷனது கௌரவம், செல்வாக்கு, அவனைப்பற்றிப் பிறர் மதித்திருப்பது முதலிய ஒன்றும் தெரிவதுமில்லை. புருஷன் புத்திமானாகவிருக்கும்போது அவன் கருத்துக்கு இணங்கி நடப்பதும் இல்லை. சமயத்துக்குத் தக்கபடி நடந்து கணவனைப் பிறர் மதிக்கும்படி செய்வது தங்கள் கடமையென்று உணர்வதுமில்லை. ஒன்றுமறியாமல் ஏதோ புருஷனென்பவன் தங்கள் சுக சௌரியங்கட்கு ஏற்பட்டவனாகவே மதித்துத் தங்கள் மனம்போல் ஆடையாபரணங்கள் வாங்கச் செய்வதும் பாத்திர பண்டங்கள் வாங்கச்செய்வதும் அதற்கிணங்காவிட்டாற் பிணங்குவதும் வம்பு விளைப்பதும், புருஷன் மானத்துக்குப் பயந்து பேசாதிருந்தால், தங்கள் வாய்க்குப் பயந்து பேசாதிருப்பதாக நினைத்து இன்னும் விசேஷமாக வம்பு பேசுவதுமே நமது நாட்டில் அனேகம் பெண்கட்குச் சுபாவ குணமாக இருக்கிறது. இப்பெண்களின் அறியாமையை நினைக்கும்போது, யாருக்குத்தான் வருத்தமுண்டாகாது? புருஷர்கள் தங்களிஷ்டப்படியெல்லாம் நடத்தினாலும் சரிக்குச் சரியாகவாவது தாங்களும் நடக்கவேண்டுமேயென்ற எண்ணமிருப்பதில்லை. காலந்தப்பாமல் புருஷனுக்கு உணவிடுவது பிரதானமன்றோ? அதிலும் சரியாக நடக்காத பெண்கள் எத்தனை பேரிருக்கிறார்கள். சமையல் செய்கிற நேரங்களிற் சண்டைபிடித்து அடுப்பில் நெருப்பிடாமலே அஸ்தமிக்கும் வரை போர்புரிகிற உத்தமிகள் எத்தனை பேரிருக்கி றார்

கள்? தங்களுக்கு ஒரு குறைவு மில்லாதிருப்பினும் பிறரிடத்துப் பொருமை கொண்டு சதா கடுகடுப்பும் கவலையுமடைகிற பெண்கள் எத்துணை பேரிருக்கிறார்கள்? அந்தோ! இதற்கெல்லாம் காரணம் என்ன? பெண்களைப் படிக்கவைத்து அறிவு விருத்திசெய்யாத குறையன்றோ? இத்தகைய மனைவிகளையடைந்த புருஷர்கள் மனம் எப்படிக் கவலையற்றிருக்கும்? அவர்கட்குப் பரோபகாரமாகவோ, பொது நன்மையாகவோ, தங்கள் காலத்தைச் செலவிட எப்படிச் சாவகாசங் கிடைக்கும்? அதனாலன்றோ நம் நாட்டாருட் பெரும்பாலார் பொதுநன்மைக்குற்ற விஷயங்களின்னவென்றும் அவைகளைக் கவனிப்பது ஒவ்வொருவருக்கும் கடமையென்றும் உணராமல் கேவலம் சுயநயமொன்றையே வாழ்நாள் முழுதும் கருதுகிறவர்களாகவே இருக்கிறார்கள். சுயநயமொன்றையே கருதி வாழ்கிற ஜனங்களின் நாடு எப்படி முன்னுக்கு வரும்? ஒருவரோடொருவர் பழகி, ஒருவரை யொருவர் நம்பி, ஒருவர்க்கொருவர் உதவி, ஒருவரை யொருவர் வஞ்சியாமல், மோசஞ் செய்யாமல், ஒருமனப்பட்டு வாழுகிற நாடன்றோ முன்னுக்குவரும்? அத்தகைய விஷயங்களைக் கவனிப்பதற்கு பிரதி மனிதனுக்கும் ஒவ்வோர் நாளிலும் சிறிது சிறிது சாவகாசம் வேண்டும். மதிகெட்ட பெண்களை மனைவியாகப் பெற்றவனுக்கு இச்சாவகாசங் கிடைப்பதருமை.

ஏராளமான திரவியமும் செல்வாக்குமுள்ள குடும்பத்துப் பெண்களும் சாமானிய ஜனங்களோடு அற்ப விஷயத்துக்காகச் சண்டை பிடித்துக்கொள்ள நாம் எத்துணை முறையோ பார்த்திருப்போம். அறிவிருந்தாலிப்படிச் செய்வார்களா? அற்ப விஷயத்துக்காக கௌரவத்தைக் கெடுத்துக்கொள்வார்களா? இவர்கள் நிலைமையிப்படியிருந்தால் புருஷர்கள் கௌரவமாகவிருந்து பிரயோஜனமென்ன? அவர்களுக்கு எவ்வளவு அவமானமாக விருக்கும்? இத்தகைய பெண்கட்கு கல்வியறிவுமின்றி இயற்கையறிவு மின்றி மிருக சுபாவமிருப்பதால் புத்தி சொல்லித் திருத்தவுமுடியாது. சுருங்கக் கூறுமிடத்து நமது நாட்டுப் பெண்களின் நிலைமை மிகுந்த கவலைக்கிடமாகவும் தேசநன்மைக்கு முதல் விரோதமாகவும் இருக்கிறது. ஒரு தேசம் நாகரீகமும் செல்வமு மடையவேண்டுமானால்

முதலிற் பெண்கள் திருந்தவேண்டும். பெண்கள் திருந்துவதற்கு அவர்களைப் படிக்கவைத்தாலன்றி முடியாது. படிக்காத பெண்கள் புருஷர்கள் நோக்கம்போ லிணங்கமாட்டார்கள். புருஷர்கள் புது வழக்கம் பேசுவார்கள். பெண்கள் பழைய வழக்கம் பேசுவார்கள். இரண்டிற்கும் நிரம்ப வித்தியாசமேற்படும். வித்தியாசமுண்டானால் மனஸ்தாபமுண்டாகி ஒற்றுமை கெடும். பெண்கள் விவேகிகளானால் சமயம்போல் நடந்து குடும்பத்துக்குக் கௌரவத்தை யுண்டுபண்ணுவார்கள். வீண் டம்பத்துக்கு ஆசைப்படார்கள். தங்கள் நிலைமைக்குத் தக்கபடி செலவு செய்வார்கள். பிள்ளைகளை நன்றாய் வளர்ப்பார்கள். நடையுடை பாவனைகள் நாகரீகமாக இருக்கும். பேய்க்குணம் போய் பெண்குண முண்டாகும். ஆதலின் நமது நாட்டார் ஒவ்வொரு ஜாதியாரும் தங்கள் ஆண்மக்களைப் போலவே பெண்மக்களையும் நன்றாய்ப் படிக்கவைத்து அறிவு விருத்தி செய்யவேண்டும். அப்போது நமது தேசம் அளவில்லாத பிரகாசத்தோடு ஜ்வலிக்கும். நம்மைப்போல நமது பின் சந்ததியாரும் கஷ்டப்படாமல் அவர்களாவது சந்தோஷமாக நல் வாழ்வு வாழும்படி நாம் உபகாரஞ் செய்யவேண்டுமன்றோ? அவ்வுபகாரம் இதைத்தவிர வேறில்லை. ஆதலின் நமது சகோதரர்கள் இதைக் கவனிப்பார்களாக.

---

## பெண்கல்வி.

---

நம்மிந்தியாவில் பெண்கள் படிக்கக்கூடாதென்றும், படித்தால் கற்புக்குக்கேடுண்டாகுமென்றும் சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். அது நியாயமானதும் நடுநிலைமையானதுமான அபிப்பிராயமாகாது. படிப்பினால் அறிவு உண்டாகிறது. அறிவு, ஆண் பெண் இருபாலார்க்கும் இன்றியமையாத விஷயம். "ஆண்கட்குத்தான் அறிவு வேண்டும். பெண்கட்கு அறிவு வேண்டா" மென்று யாரும் சொல்லமாட்டார்கள். கல்வி அறிவு உண்டாக்குமென்பதையும் ஆக்ஷேபிக்க முடியாது. வேறெந்தக் காரணம் பற்றிப் பெண்கட்குக் கல்வி கூடாதென்று சொல்லலாம்? படிப்பினாற் கற்புக்குக்கேடுண்டாகு

மென்றால், படியாத பெண்களெல்லாம் கற்புடையவர்கள்தானா? படித்த புருஷர்களெல்லாம் கெட்ட ஒழுக்கமுடையவர்களா? படிப்பு கெட்ட ஒழுக்கத்தையுண்டுபண்ணு மென்பதற்கும் விளக்கு இருளையுண்டுபண்ணுமென்பதற்கும் வித்தியாசமில்லை. ஆழ்ந்த புத்தியோடு ஆராயுமிடத்துப் படிப்பு வேறு, கற்பு வேறு என்பது புலப்படும். கற்பு இயற்கையான ஒரு உயர்குணம். ஒருவாறு படிப்பினால் மனஉறுதியும் நிராசையுமுண்டாகிக் கற்பைப் பாது காக்கக் கூடுமேயன்றி யிருப்பது கெடமாட்டாது. படியாத பெண்கள் எவ்வளவோ இழிவான வழிகளிற் சென்று நாய் களினும் கேடு கெட்டலைகிறார்கள். உயர்குலத்திற் பிறந்தும் கீழ்க் குல மக்களோடு கூடி வாழுகிற பெண்கள் எத்தனை பேருண்டு! இத்தகையோர் படித்திருந்தால் இப்படிச் செய்வார்களா? படி யாத பெண்களோடு கூடி வாழும் அறிவுள்ள புருஷர்கட்கு அதன் தீமை யின்னதென்று தெரியும். உதாரணமாக ஒரு கதை சொல்வோம்:

நன்றாகப்படித்தவரும் நல்லொழுக்க முடையவரு மான ஒருவருக்கு நமது நாட்டு வழக்கம்போல் படியாத பெண்ணொருத் தியை மணமுடித்தார்கள். புருஷர் புலாலுணவை யடியோடு நீக்கிப் பரிசுத்தமான பதார்த்தங்களைப் புசிக்கு மியல்புடையவர். மனைவியாரோ புலால்நாற்றமின்றி உணவு உட்கொள்ளமாட்டார். இதைப் பார்த்து மனம் புழுங்கிப் பலநாள் பொறுத்திருந்தும் சகிக்கக் கூடாமல் ஒருநாள் மனைவியை நோக்கி அடியில் வரு மாறு சொல்லுவாரானார்.

"பெண்ணே! புலாலுணவைநீக்கிவிடலாகாதா?

பெண்:—"எட்டு நாளைக்கு ஒரு வீசை கறி வாங்குவதிலா உங்கள் வீட்டு முதல் போய்விடும்.? (மரியாதைச் சொல்)

புரு:—"பணத்தைப்பற்றிச் சொல்லவில்லை. பாபமென்று சொல்லுகிறேன்".

பெண்:—"உங்கள் சிற்றப்பன், பெரியப்பன், அண்ணன் தம்பி வீட்டாரெல்லாம் தின்னலாம். நான் தின்றால் மட்டும் பாபமா"?

புரு:—"பாப புண்ணியத்துக்குப் பங்காளிகள் தோது பார்க்கவேண்டியதில்லை. நமக்கு நாமே பார்த்துக்கொள்ளவேண்டும்."

பெண்:—"அது எனக்குத் தெரியாது. எல்லாரும் சும்மாயிருந்தாலன்றி நான்மட்டும் சும்மாயிரேன். அவர்கட்கு நான் இளப்பமில்லை. நானும் பத்து மாதம் சென்றுதான் பிறந்தேன்."

புரு:—"பெண்ணே! கோபிக்காதே. நன்மையைத்தான் சொல்லுகிறேன். உயிரைக்கொல்வதுபாபமில்லையா?"

பெண்:—"உங்கள் ஆய் அப்பனையா கொன்றேன்.?"

புரு:—"அப்படியில்லை.ஆடு கோழிகள் உயிர்களில்லையா? பெரியோர்களெல்லாம் புலாலுணவை நீக்கவேண்டுமென்று சொல்லுகின்றனர்" என்று சொல்லி உதாரணமாக "அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின்—" என்று. குறை முடியு முன்னமே மனைவி கோவென்று கூச்சலிட்டழுதாள். ஒப்பாரியோவென்று ஊர்ப்பெண்டுகளெல்லாம் வந்துவிட்டார்கள். என்னவென்று விசாரிக்க அப்பெண்மணி அடியில் வருமாறு சொல்கிறாள்:—

பெண்:—"கேளுங்களிந்த அநியாயத்தை. என்னைக் கறி தின்னவேண்டாமென்றார். நான் தின்னாமலிருக்க முடியாதென்றேன். இதற்காக என்னை அவிசாரி என்றும் ஆயிரம் வீட்டிலென்றும் சொல்லுகிறார். ஆதலால் நான் பிராணனை விடப்போகிறேன் என்றாள்.

புரு:—"சிவசிவா" நான் சொன்னதென்ன? இவள் சொல்வதென்ன? "ஞானமும் கல்வியும் நவின்ற நூல்களும், ஈனருக் குரைத்திடி லிடர தாகுமே." என்றபடியாயிற்று. நான் மகா நீதிநூலாகிய திருக்குறளை யெடுத்து உதாரணமாகக்கூறினேனன்றி வேறே யொன்றும் சொல்லவில்லையே யென்றார். அதைக்கேட்டு ஊர்ப் பெண்டுகள் நன்றாயாராய்ந்து அடியில் வருமாறு தீர்ப்புக்கொடுத்தார்கள்:—

"எப்படியிருந்தாலும் ஐயா! நீரப்படிச்சொல்லக்கூடாது. கோபம் பாவமாக இருந்தாலும் அந்தச்சேதி சொல்வது சரியில்லை."

யென்றார்கள். இதைக்கேட்டு பதிற்பேச இடமின்றிப் படித்தவர் மௌனம் சாதிக்கவேண்டியதாயிற்று.

இத்தகைய பெண்களை மணந்து வாணளை வீணாளாக்குவதிற் பயனுண்டா? படித்திருந்தால் இவ்விஷயம் எவ்வளவு சுலபமாக முடிந்திருக்கும்.! இதனாலன்றோ பெண்கள் படிக்கவேண்டியது நிரம்ப அவசியமென்ற விஷயம், மேதாவிகளாலும், நாகரீகமான தேசங்களிலும் அங்கிகரிக்கப்பட்டிருக்கிறது. கிணற்றுத் தவளைகள் போன்ற சிலர், பெண்கல்வி கூடாதென்று பிதற்றுவதற்கு இதற்குமேற் சமாதானம் வேண்டியதில்லையென நிறுத்துவோம். சமயம் வாய்த்தபோது இன்னுமெழுதுவோம்.

---

## பால்ய விவாகமும், பெரிய பரிதாபமும்.

---

ஜீவகாருண்யமும் இரக்கச் சிந்தையுமுள்ள நமக்கு, குடிக்கக் கஞ்சியும், உடுத்த ஆடையும், போர்த்தத் துணியும் இல்லாத பரம ஏழைகளையும், வயிற்றுவலி, காசம், குஷ்டரோகம், நீர்க்கடுப்பு முதலிய கொடிய நோய்களின் வாய்ப்பட்டு வருந்தும் ஜீவர்களையும், விடிந்து அஸ்தமிக்கும் வரையிற் பளுவான வேலைகளைச் செய்து போதுமான உணவின்றி மெலிந்து வருந்தும் கழுதை, மாடு முதலிய ஜந்துக்களையும, தாயில்லாப் பிள்ளைகளையும், கொலைக்குத் தயாராகக் கட்டப்பட்டிருக்கும் ஆடு கோழிகளையும் இன்னும் இத்தகைய நிலையிலுள்ள பிற விஷயங்களையும் பார்க்கும்போது மிகுந்த பரிதாபமாக இருக்கிறது. இதைச் சகிக்க முடியாமல் நம்மாற் கூடுமான உதவியைச் செய்து நிவிர்த்திக்க முயலுகிறோம். ஏழைகட்கு உணவும் உடையும் கொடுக்கிறோம். அநாதைகட்குத் தர்ம வைத்தியம் செய்விக்கிறோம். கால்நடைகளை ஆதரிக்கிறோம். இரக்கமற்ற துஷ்டர்களைக் கண்டிக்கிறோம். தாயில்லாச் சேய்களை ரக்ஷிக்கிறோம். புலாலுணவை நீக்குகிறோம். இன்னும் பற்பல முயற்சிகளால் உதவி செய்கிறோம். இந்த உதவிகள் நிலையாக இருக்கவேண்டுமென்று அன்ன சத்திரங்கள், வைத்தியசாலைகள், பசுமடங்கள் முதலிய தர்

மஸ்தாபனங்களை நாட்டுகிறோம், "புலாலுணவை நீக்கவேண்டும். ஜீவகாருண்ணிய மிருக்கவேண்டும். பரோபகாரம் செய்யவேண்டும்" என்று ஆதிமுதல் அந்தம் வரை போதிக்கப்படுகிறோம். சாஸ்திரங்களாலும் அறிகிறோம். இப்படியிருக்க இவைகளெல்லாவற்றிலும் பெரியதும், பார்ப்பவர்க்கும் கேட்பவர்கட்கும் துக்கத்தையுண்டுபண்ணத் தக்கதும், நேர்ந்தபிறகு 'கடவுள் செயல், தலைவிதி, என்று சமாதானஞ்செய்து கொள்ளப்படுவதும், யாதொரு விமோசனமுமில்லை யென்று தீர்ந்திருப்பதும், மணிமந்திர அவுடதங்களாலு மாற்றமுடியாததும், வாழ்வைக்கெடுத்து மனித சமூகத்துக்குப் பெரிய கஷ்டத்தையும், நஷ்டத்தையு முண்டுபண்ணத் தக்கதும், ஏழைகளென்றும், செல்வர்களென்றும், வித்தியாசமில்லாமல் எல்லோருக்கும் நேரத்தக்கதும், பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிவதும், உண்ணாமல் தின்னாமல் ஊரம்பல மேறி நிற்பதும், ஊரிலுள்ளவர்கள் கூடி மாறுவேஷ மிடுவதும், மண்டையுள்ள வரையில் மாறாததுமான பெரிய துக்க சம்பவமொன்று நம்மாற் கவனிக்கப்படாமலிருக்கிறது. அதுபிரதிதினமும்விருத்தியடைந்து வருகிறது. இதை நிவிர்த்திப்பதற்கு நாம் ஒரு முயற்சியும் செய்கிறோமில்லை. ஒவ்வொருநாளும் பார்க்கிறோம். ஒவ்வொரு நாளும் கேட்கிறோம். துக்கப்படுகிறோம், கண்ணீர் சிந்துகிறோம். ஆனால் மாற்றும் வழி தேடவில்லை. ஒருவகையில் இது ஆச்சரியமாகவுமிருக்கிறது. அநியாயமாகவு மிருக்கிறது. இதென்னவென்று நீங்கள் நினைக்கிறீர்கள்? எல்லோருமறிந்த விஷயந்தான். பால்ய விவாகத்தின் பரிதாப நிலைமைதான். ஐயோ! நாம் பெற்று வளர்த்துச் சீராட்டிப் பாராட்டிக் கண்ணை மூடிக்கொண்டு பால் மணம் அறுமுன் கல்யாணம் செய்து கடனைத் தீர்த்துவிடுகிற பெரிய அறியாமைதான். கல்யாணமென்றால் என்ன? லேசான காரியமா? அது மனித வாழ்வென்னும் கட்டிடத்திற்கு அஸ்திவாரமில்லையா? அஸ்திவார பலமின்றிக் கட்டப்படுகிற வீடு எப்பொழுதும் அபாயகரமானதென்பது நீங்களறியாத விஷயமா? ஐயோ! நமது ஜனங்கள் தங்கள் மக்களுக்கு ஏழு வயதிலும், பத்துவயதிலும், கல்யாணம் செய்கிறார்களே? இந்த விவாகம் பெற்றோர்களின் சந்தோஷத்துக்கா? பிள்ளைகளின் நன்மைக்கா? பிள்ளைகளின் நன்மைக்கென்று யாராவது சொல்லமுடி

யுமா? பெற்றோர்கள் சந்தோஷப்படப் பிள்ளைகள் தீராத துக்கத்தை யனுபவிக்கலாமோ? இத்தகைய பொம்மைக் கல்யாணத்தால் நன்மையிருக்கிறதா தீமையிருக்கிறதா வென்று ஏன் ஆலோசிக்கக் கூடாது? இதனாலுண்டாகும் துக்கத்துக்கு உதாரணமாக சமீபத்தில் நாம் கண்ட ஒரு விஷயத்தை யிங்கு குறித்துவிட்டு மேலே பேசுவோம். சகோதரர்களே! சில வாரங்கட்கு முன் நாம் போயிருந்த ஒரு வீட்டில் சுமார் 10. 11. வயதுள்ள சொர்ண விக்கிரகம் போன்ற ஒரு பெண்குழந்தை பட்டாடைகளைப் பறிகொடுத்து அணிகளையெல்லாம் கழற்றிவிட்டு மதிபோன்ற முகத்தில் மஞ்சளின்றி சிந்திய மூக்கும், சிவந்த கண்ணுமாய் ஒரு ரூபாவுக்குப் பதினைந்துமுழம் விற்கிற வெள்ளைத் துணியொன்றைச் சரீரத்தில் மூடி யணிந்துகொண்டு தனித்த வோரிடத்திற் றலையைக் கவிழ்ந்து மழை வருஷம்போற் கண்ணீரொழுக விம்மி விம்மி யழுதுகொண்டிருந்த பெரிய பரிதாபம் நமக்கு ஆராத்துயரத்தை யுண்டுபண்ணியதுடன் அடியில் வருகிற செய்யுளையும் ஞாபகப்படுத்திற்று. அதாவது:—

“மயிரோடும் சிறையிழந்த போகில்போல் வேலியொடு வரம்பிழந்த—பயிரேபோற் கரமிழந்த கரியேபோற் பொற்பியிழந்த பாவையேபோல்—உயிரேபோய்ப் பரதவிக்கும் உடலேபோல் மத்தாலுள்ளுடைந் தலம்பும்—தயிரேபோற் றளர்ந்தலைந்து தத்தமக்கு நேர்ந்தவெல்லாம் சாற்ற லுற்றார்.” என்பதேயாம்.

அதைப்பற்றி விசாரித்தபோது அப்பெண்ணுக்கு 7 வயதில் கல்யாணம் செய்யப்பட்டதென்றும், மாப்பிள்ளையும் சிறுபிள்ளைதானென்றும், சென்ற சித்திரைமாதம் அந்தச்சிறுவன் கொடிய நோயுற்று இறந்துபோய்விட்டதாகவும் சொல்லி கல்யாணம் செய்த சிறப்பு ஒருமணிநேரம் வர்ணிக்கப்பட்டது. அதைக்கேட்டபோது நமக்குண்டான ஆத்திரத்துக்கு ஒரு எல்லையில்லை. இதோடு பெற்றோருக்கு இது ஒரே பெண் குழைந்தைதானென்றும் மிக அருமையாக வளர்க்கப்பட்டதென்றும் சொல்லப்பட்டது. ஐயோ! என்ன முழுகிப்போகிறதென்று ஏழு வயதிற் கல்யாணம் செய்தார்கள்? பெண், புருஷன் வரவில்லையென்று பெருமூச்சு விட்டாளா? இல்லையென்றால், ஏழுவயதுக்குமேல் வைத்திருக்கப்படாதென்று சாஸ்திர

முண்டா? அல்லது பெண்ணுக்கு வயது வந்தபிறகு மாப்பிள்ளை யகப் படாமல் அஸ்தமித்துப் போகுமா? என்ன அவசரத்தைக் குறித்து இந்தச் சிசுக்கட்குக் கல்யாணம் செய்வது? இது பெண்ணின் தலைவிதியாம்! பெற்றோர்களின் புலைமதி யென்று ஏன் சொல்லக்கூடாதோ? மதிகெட்ட மாதா பிதாக்கள் செய்கிற அக்கிரமங்கட்கு பிள்ளைகளின் தலைவிதி என்னல் சமாதானமாகுமா? இது ஒன்றுதானா! இப்படிச் சம்பவங்கள் எத்தனை எத்தனை வேண்டுமானாலும், நாம் உதாரணம் சொல்லக் கூடும்! என்ன அநியாயம்! இந்தப் பால்ய விவாகம் எப்பொழுது குறையுமோ! எப்பொழுது நம் நாட்டுக்கு க்ஷேமமுண்டாகுமோ! ஆனால் பாலகர் இறந்தாற்றான் துக்கம்; வயது வந்த பெண்கள் விதவைகளாகமாட்டார்களா? வென்றால் அதுவும் நேரக்கூடும். "இதுவென வரைந்திங் கிருக்குநா ளுணர்ந்தோர், முதுநீருலகின் முழுவது மில்லை" என்றாலும் ஒரு நன்மையிருக்கிறது. இருந்த நாள் வரையிலாவது சதிபதிகள் சந்தோஷத்தையும் உலக வியவகாரத்தையு மின்னதென் றுணர்வார்கள். ஈசுவர கிருபையால், ஒரு குழந்தை கிடைத்தால் அதைப்பார்த்தாவது தேறுதலடைய இடமுண்டு. குடிவிளங்கவும் இடமுண்டு. ஆதலால் பால்ய விவாகத்தைப்பார்க்கிலும், வயது வந்த பிறகு செய்கிறவிவாகத்தை எத்தனையோ பங்கு சிலாக்கிய மென்று சொல்லலாம். மேலே நாம் குறிப்பிட்டுக் காட்டிய பெண் வயது வந்த பெண்ணாக இருந்தால், நாலு வருஷ வாழ்வில் ஒரு பெரிய குடும்பமாகவும் இருக்கக் கூடும். வயது வந்தபிறகு விவாகம் செய்து இப்படி நேர்ந்தால் அது பெற்றோரின் குற்றமாகாது. பெண்ணின் தலைவிதியென்று சொல்லிவிடலாம். அப்படியில்லாததால் இது பெற்றோரின் குற்றமேயாகும்.

இந்த வழக்கம் எங்கிருந்து வந்ததென்று நாம் ஆலோசித்தால் இது மேல்ஜாதியாரான பிராமணர்களிடமிருந்து மற்றவர்களும் கற்றுக்கொண்டதென்று தோற்றுகிறது. ஆனால் அவர்கள் பாலகர்கட்குப் பருவப் பெண்ணைச் செய்கிறதில்லை. மற்றவர்கள் இவ்வாபாச வழக்கமும் வைத்திருக்கிறார்கள். அது பெரிய அறியாமையும் உபயோகமற்ற விவாகமுமாம். பிராமணர்களைப் பின்பற்றிய வழக்கங்களில் விதவைகட்கு முண்டனம் செய்கிற கொடிய

வழக்கம் மற்றவர்கட்கும் பற்றுதது ஒரு பெரிய நன்மை. நமது இந்திய தேசத்தில் ஆதிமுதற்கொண்டே விவாக விஷயத்தில் ஸ்திரீ புருஷர்கட்கு சுதந்தர மில்லாதிருந்ததென்று நாம் நம்பவில்லை. பிரபல புராணங்கள் இதிகாசங்களில் பெரும்பாலும் காந்தர்வ விவாகமும் சுதந்தர விவாகமும் நடந்ததாகவே யறிகிறோம். சரித்திரத்துக்கு வராத விவாகங்கள் எப்படி நடந்திருக்குமென்று நாம் பேச வேண்டியதில்லை. தாய் தந்தையர் சம்மதத்தால் மட்டும் விவாகங்கள் நிறைவேறியதென்ற சரித்திரம் மிகச் சொற்பம். ஆனால் எந்த நாளிலும் பால்ய விவாகம் நடந்ததென்று நாமறிய முடியாதென்பது ஒருதலை. ஆகவே பால்ய விவாக வழக்கம் இடைக்காலத்தில் ஏதோ ஒரு காரணத்தால் ஏற்பட்டிருக்கவேண்டும். அந்த காலத்திற்றான் ஸ்திரீ புருஷர்கட்கு விவாகவிஷயத்திற் சுதந்தரமு மற்றிருக்கவேண்டும். இது எந்தக்காலமாக இருக்கலாமென்று யோஜித்தல் மகம்மதியர் அரசாட்சி செய்த காலமென்று ஒருவாறு நிச்சயிக்கலாம். அவர்கள் ஜாதிமத வித்தியாச மில்லாமற் கன்னிப்பெண்களைச் சிறைபிடித்துக் கொள்கிறதுண்டாம். கன்னிப் பெண்கள் விஷயத்தில் அப்படிச்செய்ய அரசநீதி ஒருவாறு இடந்தந்திருந்ததாம். ஆனால் விவாகமாகி மங்கல்யதாரணமிருக்கக் கண்டால் அந்தப் பெண்கள் விஷயத்திற் பிரவேசிக்க அரசநீதி இடந்தராதாம். ஆகவே பெண்கட்கு மங்கைப்பருவ மாகுமுன்னரே விவாகம் செய்கிற வழக்க மேற்பட்டதென்று நிச்சயிப்பது தவறாகமாட்டாது. மகம்மதிய அரசாட்சியின் முக்கியகாலம் சற்றேறக்குறைய 600 வருஷங்கட்கு முன்னாகவிருந்தது. அந்தக்காலத்திற்றான் பால்ய விவாகமேற்பட்டதும், சுதந்தரமிழந்ததும், விவாக விஷயங்கள் சீர்கெட்டதும் என்று நம்புகிறோம், மகம்மதிய அரசாட்சியால் பால்ய விவாகம் தான் அவசியமாயிற்று. சுதந்தர மிழக்க ஞாய மென்னவென்றால், பால்யர்களிடத்தில் அபிப்பிராயம் கேட்பதெப்படி? கேட்டாலும், அச்சிசுக்கள் என்ன சொல்லப்போகிறார்கள்? அவர்கட்கென்ன தெரியும்? ஆகவே அப்பொறுப்பு தாய்தந்தையரைப் பொறுத்தது மாப்பிள்ளை பெண்கட்கு சுதந்தரம் போய்விட்டதென்பது அதிசயமாக மாட்டாது. இதுதானோ அல்லது இதுபோன்ற வேறொரு முக்கிய காரணத்தாலோ பால்யவிவாகம் இடைக்காலத்திலேற்பட்ட

வழக்கந்தானென்பதி லையமில்லை. பால்ய விவாக வழக்கம் ஏற்பட்ட பொழுதே சுதந்தரமிழந்த தென்பதிலும், ஐயமில்லை. ஆனால் இக்காலத்தில் அவ்வழக்கத்தையே யனுட்டிக்க வேண்டுமென்பது எவ்வகையாலும் அவசியமில்லையென்று நாம் உறுதியாகச் சொல்லக் கூடும்.

இப்போது நமது அரசாங்கத்தாரோ நிரம்ப ஆழ்ந்த கருத்தோடு இத்தகைய விஷயங்களிற் சட்டதிட்டங்கள் செய்திருக்கிறார்கள். ஒரு பெண் தன் வாழ்நாள் முழுதும் கன்னிப்பெண்ணாகவே இருக்கவேண்டுமென்றாலும், விக்கினமில்லாம லிருக்கலாம். அவளிஷ்டத்துக்கு மாறாக யாரும் எதுவும் செய்யமுடியாது. ஸ்திரீயானாலும், புருஷனானாலும் வயது வந்தபிறகு அவர்கள் சுயேச்சையாக வாழ்வதற்கு சட்ட மிடந்தந்திருக்கிறது. ஆனால் ஜாதிமதக் கட்டுப்பாடுகளிற் றாங்கள் தலையிடுவதில்லையென்று அரசாங்கத்தார் விலகி விடுகிறார்கள். "அதாவது இப்படித்தான் செய்யவேண்டும். இப்படிச் செய்யப்படா" தென்று இந்த விஷயங்களில் வற்புறுத்துவதில்லை. சீர்திருத்தி நடந்துகொள்வதை ஆக்ஷேபிப்பது மில்லை. இவ்வளவு காருண்யமும் பெருந்தன்மையுமுடைய அரசாங்கத்தில் நாமேன் பாழ்பட்ட வழக்கங்களைக் கையாடவேண்டும்? காலத்துக் கேற்றபடி திருத்தமடைந்து கொண்டாலென்ன? இந்த பால்யவிவாகத்தை யடியோடு நிறுத்திவிட்டாலென்ன? பாலகர்கட்குப் பருவப் பெண்ணைச் செய்கிற ஆபாச விவாகத்தை யடியோடு நிறுத்திவிட்டாலென்ன?

ஐயோ! அந்தத் துர்வழக்கத்தைப்பற்றி யெழுதவென்றால் இன்னொரு அத்தியாய மெழுதவேண்டும். மக்கள் ஆறறிவுடையோரென்றால் பகுத்தறிவு இருக்கவேண்டுமே! பகுத்தறிவிருந்தால் நன்மை தீமை தெரியாமற் போகக் காரணமென்ன? தக்க தின்ன தகாதின்ன இன்னவென்றெக்க வுன்னல ராகில் உயர்ந்துள, மக்களும் விலங்கே யன்றோ? பகுத்தறிவில்லாமற் செய்து விலங்குகளென்று பெயர்பெற யாரும் விரும்பார்களே? ஆகவே நாம் முடிவாகக் கூறுவதென்ன வென்றால் இந்த அபாயகரமான பால்ய விவாகத்தை யடியோடு நிறுத்திவிட்டு ஆண்சட்கு 18வயதுக்கு மேலும்,

பெண்கட்கு பிரௌடையான பிறகும், கல்யாணம் செய்வதென்று ஒரு கண்டிப்பான ஏற்பாடுசெய்து அதுபோல் பிராமணர் முதல் எல்லா ஜாதியாரும் தவறாமல் நடந்து நமது தேசத்தைத் துக்கத்தினின்றும் மீட்கவேண்டும். பாலகர்கட்குப் பருவப் பெண்ணைச் செய்கிற வழக்கமுள்ள ஜாதியார் அந்த ஆபாச வழக்கத்தை யடியோடு நீக்கிப் புருஷனுக்குப் பெண் ஒரு வருஷமாவது சின்னவளாக இருக்கும்படி பார்த்துச் செய்யவேண்டும். இந்தத் திருத்தப்பாடுகளை முதலிற் செய்துகொள்வதோடு பெண்களை அவசியம் படிப்பிக்கவேண்டும். பெண்கல்வி விருத்தியடைந்த காலத்தில் இதினும் விசேஷமாகச் செய்யவேண்டிய திருத்தப்பாடுகள் இன்னவென்பதைச் சுலபமாகச் சொல்லவும், செய்யவும், சாத்தியமாகக் கூடும்.

வயது வந்த பிறகு கல்யாணம் செய்யவேண்டுமென்று நாம் சொல்லிவிட்டதால் கல்யாணவிஷயத்தில் பிள்ளைக்கும் பெண்ணுக்கும் சிறிது சுதந்தர மிருக்கவேண்டிய தவசியமென்று இன்னொருமுறை வற்புறுத்திக்கூற வேண்டியதில்லை.

---

# வீண் அழுகை.

---

நமது தேசத்தில் சில ஜாதிப் பெண்கள் அழுவதைக்கூட, வழக்கமென்று கையாடி வருகிறார்கள். வருத்தம் வராதிருக்கும்போது அழுகிற வீண் அழுகை, கோபத்தை யுண்டாக்குமன்றோ? வீணை ஒப்புச்சொல்லி நீண்ட குரலோடு கண்ணீர் வராத வழக்க அழுகை எதற்காக அழவேண்டும். அதை விரித்து எழுதுவதைப் பார்க்கிலும் அடியில் வருமாறு ஒரு சம்பாஷணையை எடுத்துக்காட்டி விளக்குவோம்.

லெட்சுமி யென்ற ஒரு படித்தபெண் அதிக வயதான தன் தகப்பனார் இறந்தமைக்குத் துஷ்டிக்கு வந்தவர்களை உபசரித்துக் கொண்டிருந்தாள். அப்போது கருப்பாயி என்ற ஒரு மடமாது வந்து லெட்சுமியைக் கட்டிக்கொண்டு அழ முயன்றாள். லெட்

சுமி புன்சிரிப்போடு கருப்பாயியை நோக்கி அம்மா! என் தகப்பனா ருக்காக அழ எனக்கு இஷ்டமில்லை. அவர் அதிக வயதாகி எல்லா நலன்களையும் அநுபவித்து சௌக்கியமாகக் காலஞ்சென்றாராதலின் அவர்க்காக அழுவது பொருந்தாதென்றாள்.

கரு:—நானென்ன ஜாதியிற் குறைந்தவளா? அல்லது தள்ளப் பட்டவளா? ஏன் எனக்கு அழ வரமாட்டேனென்கிறாய்?

லெ:—அப்படியன்று. என் தகப்பனாரின் மரணத்தைப்பற்றி எனக்கு வருத்தமிருந்தபோதிலும் எனக்கு அழ இஷ்டமில்லாத போது நீ ஏன் அம்மா அழவேண்டும்?

கரு:—உனக்கு வருத்தத்தை வெளியிட இஷ்டமில்லாவிட் டாலும் வந்தவர்கட்காவது அழவேண்டாமா?

லெ:—இறந்தவர்க்கழுவதன்றி வந்தவர்க் கழுவது நியாயமாகு மா?

கரு:—அப்படியானால் நாளைக்கு என் தகப்பனார் இறக்கும்போ து நீ வந்தால் உனக்காக நான் அழமாட்டேன்.

லெ:—அம்மா எனக்காக நீ எப்பொழுது மழவேண்டியதில்லை.

கரு:—நீ என்னை அவமானப்படுத்திவிட்டாய்.

லெ:—உன்னை அவமானப்படுத்தியது உன் அறியாமையே யன்றி நானன்று.

கரு:—நான் இதை ஊரார்க்குத் தெரிவிக்கிறேன்.

லெ:—ஊரார் என்னைத் தண்டித்தாலும் நான் வீண் அழுகை அழச் சம்மதிக்கமாட்டேன்.

இம்மட்டோடே கருப்பாயி கோபமாய்த் திரும்பிப் போய்விட் டாள். பாருங்கள்! என்ன அறியாமையான பிடிவாதம். அழுவ தைப்பற்றி இவ்வளவு பேச்சுண்டானால் மற்றவிஷயங்களைப்பற்றிப் பேசுவானேன். சில பெண்கள் கட்டிக்கொண்டு அழ ஆரம்பித்து நாலு மூன்று சொற்களைச் சொல்லி நிறுத்திவிட்டுப் பிறகு சொந்தக் காரி யழுவதை, நீலாம்புரியா, சாவேரியா, முகாரியா, புன்னாகவரா ளியா என்று இராகத்தைக் கவனிக்கின்றார்கள். அப்போது சும்மா

வும் கேட்காமல் வாயைப்பிடித்து அழுகையை யமர்த்துவதுபோற் பாவித்து முகத்தையும் ஒருவாறுகச் சலிப்பாக வைத்துக்கொண்டு வருந்தத்தக்க கடுஞ்சொற்களைப் பேசி, சொந்தக்காரிக்கு மேன்மே லும் வருத்தமுண்டாகும்படி தந்திரஞ் செய்கிறுர்கள். அவள் குடும்பச் சரித்திரங்களையும் வர்ணித்து, விடாமலழுக ஆரம்பித்தால் இவர்களுக்கு உள்ளுக்குள்ளே சந்தோஷமாம். என்ன அநியாயம்! சாகக்கொடுத்தது பற்றுமல் சங்கீதம் வேறே பாடவேண்டுமாம். இந்தக்கச்சேரி முடிந்தவுடன் வெளியிற் சென்று அழுகையைப்பற் றிய அபிப்பிராயங் கொடுப்பதோடு தங்கள் கிருகத்துக்குப் போன வுடன் தங்கள் வீட்டுக்காரியம் முடிந்ததும் தோழிகள் பல ரும் சேர்ந்து ஒவ்வொருவரும் கேட்டுவந்த அழுகைக் கச்சேரிப்பாட் டைக் கிராமப்போன் என்ற பிரதிபொலிக்கும் வாத்தியப் பெட்டி யைப்போல் "எக்காலக்கண்ணிகள்" பாடி, அழுதுகாட்டத் தொடங் குகிறுர்கள். இது படிப்பற்ற செய்கையன்றே? கல்வி அறிவிருக் கும் பக்ஷத்தில் சாவகாசமுள்ள காலங்களில் கற்புடைய மங்கையர் களின் கதைகளையும் மதசாஸ்திரங்களையும் படிக்கக் கூடுமல்லவா? இறக்கக் கொடுத்தவர்களுக்குத் தைரியம் சொல்லிச் சமாதானப்படு த்திவிட்டு வருவதற்கே துக்கம் விசாரிக்கப் போவதன்றிச் சங்கீ தம் கேட்பதற்கன்றே? அழுவதை வழக்கமாக வைத்துக்கொள்வது அநாகரீகமும் அபாயகரமுமான விஷயம். இதை ஒருவாறுகச் சிறிது சிறிது மாற்றிவராவிட்டால் எதிர்பாராத நோய்களும் மரண ங்களும் சம்பவிக்குமென்பது டாக்டர்களின் அபிப்பிராயம். சிறு வயதானவர்களின் மரணமாளுலும் தைரியமும் சமாதானமும் சொ ல்லித் தேற்றுவது யுக்திக்குப் பொருத்தமான உபாயமேயன்றி விணுக அழும்படி முயல்வது ஒருபோதும் நியாயமாகாது.

---

# உலோபியின் சரித்திரம்.

---

நாகபட்டணத்தில் அநேகநாள் கஷ்டப்பட்டு அநேகரை வஞ்சித்து எச்சிற்கையினாற் காக்கைக்கும் ஒரு பருக்கை போடாது பொருளைச் சம்பாதித்த ஒரு பெரிய தனவந்தருக்கு ஆண் குழந்தை பிறவாமையால், அவர் அலைந்து திரிந்து ஒருபிள்ளையைச் சுவீகாரஞ் செய்துகொண்டார். பிள்ளையோ பெரியடம்பாசாரி; கெட்ட ஒழுக்குகள் யாவும் நிரம்பப்பெற்றவன்; ஒரு காசளவேனும் சம்பாதிக்க இஷ்டமில்லாதவன்; பிறந்த இடத்திற் சுவாசம் விடுவதற்கும் இடமின்றியிருந்தவன். அவன் இத்தகைய தனங்காத்த பேய் காத்ததை யொப்பிக்க எப்பொழுது வாய்க்குங்காலம் வருமென்று எதிர்பார்த் திருந்தான்; அப்படி வாய்க்கும்போது தான் இன்ன இன்ன காரியங்கள் செய்வ தென்பதையும் தீர்மானித் திருந்தான். அப்படியே வாய்த்துவிட்டது; கல்யாணமு மாகிவிட்டது. தீர்மானங்களை நிறைவேற்ற ஆரம்பித்துவிட்டான். முதலிற் பந்தயம் கெலிக்கத்தக்க நல்ல வண்டி மாடுகளை வாங்கினான்; பிறகு சென்னையிலிருந்து சில தாசிகளை ஸ்பெஷலாகத் தருவித்தான்; பிறகு கைகட்டிக்கொண்டு தன்னைப் பின்றொடருகின்ற சில போக்கிரிகளை நேசித்தான்; பிறகு இரவும் பகலும் சூதாடும் நண்பர்கள் நட்பை விடாதிருந்தான். இந்தச்செலவுக்கு ஒவ்வொருநாளும் உண்டியல் விடவேண்டியதாயிற்று. இதைக்கண்ட பரம லோபியான பிதா அளவில்லாத துக்கமடைந்து அழுகையும் கண்ணீருமாய் அடியில் வருமாறு சொல்லுவாரானார்.

பிதா:—அப்பா! பணத்தையெல்லாம் செலவுசெய்கிறாயே?

பிள்ளை:—செலவு செய்யாமல் என்ன செய்கிறது?

பிதா:—பேணி வைத்திருந்தா லன்றோ அதை அனுபவிக்லாம்?

பிள்ளை:—நீர் பேணிவைத்திருந்து என்ன பலனைக் கண்டா?

பிதா:—நான் பேணிவைத்திருந்ததனா லன்றோ உன்னை ஸ்வீகாரஞ் செய்து குடியைக் குடியாக்கினேன்!

பிள்ளை:—குடியைக் குடியாக்கினீர்; ஆனால் கொடுத்து வைக்காது போனீர். நீர் தேடிவைத்தீர், நான் செலவுசெய்கிறேன். எல்லாம் வினைப்பயன்!

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது" அன்றோ?

பிதா:—ஐயோ! ஆண்டி பரதேசிவந்தாலும் அரைக்காசு கொடாமல் வைத்திருந்தேனே! (அழுகிறார்).

பிள்ளை:—அதற்கு நான் என்ன செய்வேன்; அப்படியிருக்கும்படி யார் உமக்குச் சொன்னது? ஈயார் தேட்டைத் தீயார் கொள்வரன்றோ?

பிதா:—நியாயந்தான். ஒருவரும் சொல்லவில்லை, ஆனாலும் நீ செலவு செய்வதைப் பார்த்துக்கொண்டிருக்கக் கூடவில்லையே? என்ன செய்கிறது?

பிள்ளை:—அதற்குக் கொடுத்து வைக்கா விட்டால், இந்தப் பெரிய வீட்டைவிட்டு முன்னிருந்த கூரைவீட்டுக்குப் போய்விடலாமே.

பிதா:—என்னை ஓட்டுவதற்காகவா உன்னைச் சுவீகாரஞ் செய்தேன்?

பிள்ளை:—உம்மைப்போற் பல்லைக்காட்டிக் கொண்டு, தானுமுண்ணாமற் பிறர்க்குமீயாமல் தனங்காத்த பேயாவதற்காளென்னைச் சுவீகாரஞ் செய்தீர்?

பிதா:—நீ இருந்தது தெரியாதா?

பிள்ளை:—அதிகமாகப் பேசினால் பிண்டத்துக்குத் திண்டாடச் செய்து விடுவேன்.

இம்மட்டோடு பிதாபயந்து, அன்று முதல் வாயை மூடிக்கொண்டிருந்து அதிக வியாகூலமாக நோயுற்று மரணத்தருவாயிலிருந்தார். ஊர் ஜனங்கள் பிள்ளையிடத்திற் சொல்லிப் பசுத்தானம்

செய்யச்சொன்னார்கள்; அதுபோலவன் செய்யும்போது தானத்து க்கு மாடுமட்டுமா ரூபாவுமா என்றார் பிதா. ஆம் பத்துரூபாவும் மாடு மென்றார்கள். ஆ என்றார்; பிராணன் போய்விட்டது.

சகோதரர்களே! இக்காலத்தில் இத்தகைய மனிதர்கள் பல ரைக் காண்பது அருமையல்ல. இவர்கட்குச் செல்வத்தைக் கொடு த்த கடவுள் சிறிது அறிவையும் கொடுத்தாலன்றோ இவர்கள் பரோபகாரமாகப் பிறர்க் கீந்து புகழையும் புண்ணியத்தையும் பெ றுவார்கள்? அல்லது தாங்களாவது தங்கள் மட்டில் சௌகரிய மாக இருப்பார்கள்? அந்தோ! இவர்கள்கதி மிகப் பரிதபிக்கத் தக்கது. இதனால் உலோபத்தின்கேடு என்று மட்டும் குறிக்கப்பட்ட தன்று. செல்வர் பலர் அறிவின்மையால் நிலையானபெரும் புண்ணி யங்களைச் செய்யாது மூடமக்களைத் தத்தெடுத்துப் படாதபாடு படு வதும் குறிக்கப் பட்டதாகும். பிறதேசத்தார்களுள் இக்கெட்ட வழக்கம் இல்லை. நம்மவரும் இதன் தீமை புணர்ந்து நன்மை புரி வார்களாக.

---

## உலோபிக்கு உபதேசம்.

---

சந்தைக்கடையில் ஒருநாள் ஒரு மனிதன் அங்காடிக் கூடைக்காரியோடு மடிபிடியாக நிற்பதைச் சிலர் விலக்கி விவகா ரமென்ன வென்று விசாரித்தபோது கூடைக்காரி அடியில் வரு மாறு சொன்னாள். "ஐயா! மூன்று பைசாவுக்கு நாலு கத்தரி க்காய் விற்கிறேன். இந்த மனிதர் ஐந்து காய் கேட்டார். நான் கட்டாதென்றேன். அவர் அநியாய விலையென்றார். ஆனால் வாங்கவேண்டாமென்றேன். அம்மட்டோடு போகாமல் ஒரு காயை யெடுத்துக்கொண்டுபோக முயன்றார். நான் பிடித்திழுத் தேன்" என்றாள். பிறகு அந்தமனிதனைநோக்கி 'நீர் யாரையா எந்தவூர்' என்றதற்கு அவர் 'நான் இராங்காபுரம் வழுங்காப்பிள்ளை' யென்றார். பெயரைக்கேட்ட வளவிலேயே அவரின்னாரென்று பஞ் சாயத்தாரறிந்து கொண்டார்கள். ஐயா! நீர் பெரிய தனவந்தர்,

பசம்பளைச்செல்வர். இந்த ஏழைப்பெண்பிள்ளையோடு இந்த அற்ப காரியத்துக்கு மடிபிடியாக நிற்பது அவமான மில்லையா? ஒரு கத்தரிக்காய் உங்கட்குக் குறைந்து அவளுக்கு மிருந்தாலென்ன? உங்களைப்போற் பெரிய வீட்டுக்காரர்கள் இந்தச் செட்டுகளெல்லாம் பார்க்கலாமா? என்னையா! நீங்கள்செய்வது நன்றாயில்லை, யென்றார்கள். பிரபு பஞ்சாயத்தாரை நோக்கி சரிதான் உங்கட்கென்ன நஷ்டம் "வந்த மாடு வளர்ந்தபில்லைத்தின்கிறது" என்றபடி சொல்லிவிட்டுப்போவீர்கள். கட்டிக்கொடுத்தாலன்றோ தெரியும். இந்த மாதிரி அநியாயவிலை நான் பார்த்ததுமில்லை, கேட்டது மில்லை. இப்படி யிருக்குமென்றுதான் நான் சந்தைகட்குக்கூடப்போவதில்லை. வரிசா ஆறுமாதத்துக்கு இப்போது தான் வந்தேன். இவ்வளவு அக்கியாயவிலைக்கு யார்தான் வாங்குவார்கள் என்றார். இதைக்கேட்ட பஞ்சாயத்தாருள் ஒருவரான தனபாலர் என்னும் கீர்த்தி பெற்ற பிரபு ஒருவர் வழுங்காப்பிள்ளையை நோக்கி ஐயா! உங்கள் சரீரத்தையும் ஆடையையும் வார்த்தைகளையும் பார்க்கும்போது உங்கட்கிது அநியாய விலையென்பது அதிசயமில்லை. இருக்கட்டும். உங்கள் மனம்போல் ஒருகாய் கூடவே யெடுத்துக்கொள்ளுங்கள் என்று ஒருபைசாவைக் கூடைக்காரிக்குக்கையிலிருந்து கொடுத்து விடவே பிள்ளைக்குச் சந்தோஷமுண்டாகி சிரித்த முகத்தோடு வார்த்தையாட ஆரம்பித்தார். தனபாலர் வழுங்காப் பிள்ளையைத் தன் வீட்டிற்குக் கூட்டிப்போய் மரியாதையாக உபசரித்துப் பின் அடியில்வருமாறு சமபாஷித்தார்.

த. பா:—ஐயா! பொருள் தேட வேண்டியதும், தேடிய பொருளைப் பாதுகாக்கவேண்டியதும் நிரம்ப அவசியமே யாகும். "பொருளில்லார்க்கிவ்வுலகமில்லை" என்றபடி பணமில்லாமல் மனிதன் இம்மை யின்பங்களை யனுபவிக்க முடியாது. ஆகவே நாமெல்லாம் அதுவிஷயத்திற் சிரத்தை யெடுத்துக் கொள்ளவேண்டியது தான். ஆனால் அப்பொருள் நமக்கு முதவாமல் பிறருக்கு முதவாமல் தேடித்தேடிப் புதைத்து வைப்பதிற் பயனென்ன வென்பதைப்பற்றி நீங்கள் ஆலோசிக்கவேண்டும்.

இ. வ:—ஐயா! அப்படியப்படிச் செலவு செய்தால் பணமெல்லாம் போய்விடுமே? பிறகு பிள்ளை குட்டிகட்கு என்ன செய்வது? யாரும் சும்மா தருவார்களா?

த. பா:—உண்மைதான். செலவுசெய்வதென்றால் கையிலிருப்பதெல்லாம் செலவு செய்வதென்று அர்த்தமல்ல. வரவுக்குத் தக்கபடி செலவு செய்யவேண்டும். நமது சக்திக்குத்தக்கபடி பொது நன்மைகளைச்செய்து புகழும் புண்ணியமும் பெறவேண்டும். நாமும் நன்றாக உண்டு உடுத்தி சரீர சௌக்கியமாக இருக்கவேண்டும்.

இ. வ:—நன்றாய்ச் சொன்னீர்கள்! நாளை நாம் செய்கிற வியாபாரத்தில் நஷ்டம் நேர்ந்தால் அதைப் பொதுவிலிருந்து தருவார்களா?

த. பா:—பொது ஜனங்கட்கு நாம் கடன் கொடுக்கவில்லையே? தர்மமாகவன்றோ செய்கிறோம். செய்தவரையிற் புண்ணியம். இம்மையிற் புண்ணியஞ் செய்தவர்களன்றோ மறுமையில் நல்ல பதவியைப்பெற்று ஆனந்தமடைகிறார்கள்?

இ. வ:—நல்ல பதவி பெறுவதில் எனக்கும் ஆசைதான். அதற்காக நான் தினமும் கோயிலுக்குப் போய் வருவதுண்டு. ஆனால் செலவு செய்வதற்குமட்டும் மனம் வரவில்லை. அதுதான் சங்கடம்.

த. பா:—ஆமாம், 'வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி தொகுத்தார்க்கும் துய்த்த லரிது.' நீரென்னசெய்வீர்? ஆனாலும் பாதகமில்லை. இனிமேலாவது நீர் நல்ல கொடையாளியாக விருக்கவேண்டும். நீரும் உண்டுடுத்தி சௌக்கியமாக விருக்கவேண்டும்.

இ. வ:—மெள்ளப்பேசுங்கள். இதெல்லாம் என் மனைவி காதில் விழக்கூடாது. அவளறிந்தாற் பெருமோசம். (மெதுவாக)

த. பா:—உம்மைப்பார்க்கிலும் அந்தம்மாள் செட்டிக்காரியோ?

இ. வ:—ஆகா! தடையென்ன! அவன் செட்டே செட்டு. அவன் வந்திருந்தால் கத்தரிக்காய் ஜங்கோடு போகுமா!!

த. பா:—பேஷ்! நிரம்பச் சந்தோஷம். இன்னுமொரு விஷயமட்டும் கேட்கிறேன். சொல்லிவிட்டுப்போய்வரலாம்.

இ. வ:—என்ன, சொல்லுங்கள்.

த. பா:—இந்தப்பொருள் உமக்குச்சொந்தமா?

இ. வ:—ஆம். ஆக்ஷேபமென்ன?

த. பா:—அப்படியானால் உம்மைவிட்டு நீங்கிவிடுமென்று ஏன் பயப்படுகிறீர்? உமக்குச் சொந்தமானால் நீங்கமாட்டாதே?

இ. வ:—நஷ்டம் வந்தாலென்ன செய்கிறது? கொடுக்கவேண்டாமா?

த. பா:—அப்படியில்லை, மனிதர்கள் மயக்க உணர்வால் தங்கள் தங்களிடமிருக்கும் பொருளுக்குத் தாங்களே சொந்தக்காரர்களென்று நினைத்திருக்கிறார்கள். உண்மை யப்படியில்லை. எல்லாப் பொருளுக்கும் சொந்தக்காரன் இறைவன் ஒருவனேயாம். ஆனால் மனிதர்கள் தங்கள் தங்களிடமிருக்கும் பொருள்கட்கு அதிகாரிகளும் பொறுப்பாளிகளுமாக இருக்கிறார்கள். எப்படி ஒரு முதலாளியின் பொருளுக்குப் பல அதிகாரிகளுண்டோ அப்படியே ஒரே முதலாளியாகிய இறைவனது பொருளுக்கு நாமெல்லாம் அதிகாரிகளாகிறோம். முன் ஜன்மத்தில் நாம் நடந்துகொண்ட ஒழுங்கான நடையால் அதாவது புண்ணிய வசத்தால் நமது தரத்துக்குத் தக்கபடி இறைவன் நம்பி அதிகமாகவும், கொஞ்சமாகவும், பகிர்ந்து தந்து நம்மை வரவு செலவு செய்யும்படி கட்டளையிட்டிருக்கிறானென்று நாம் உணரவேண்டும். அதை நியாயமான வழியில் விருத்திசெய்து வீணுகச் செலவு செய்யாமல் பொது ஜனங்கட்கு நன்மையான விஷயங்களிற் செலவு செய்தும் நாமும் கிரமமான சௌகரியங்களை யனுபவித்தும் வரவு செலவு செய்து, முடிவில் நமதிறைவனுக்குக் கணக்கு ஒப்புவிக்க வேண்டும். அந்தக் கணக்கை அவர் பார்வையிடும்போது, நாம்

பிறரை வஞ்சித்து மோசஞ் செய்து திருடி, அநியாய வழியிற் றேடியிருந்தாலும், பிறருக்குதவாமல் நாமே யநுபவித்திருந்தாலும் நமக்கே நாம உண்ணாமல் உடுக்காமல் துரோகஞ் செய்துகொண்டிருந்தாலும், வீணான வழிகளிற் செலவு செய்திருந்தாலும், செலவேயில்லாமல் திருப்பிக்கும்படி புதைத்து வைத்திருந்தாலும் நம்மை நிச்சயமாகத் தண்டிப்பார். அவர் எல்லாமறிந்த பெரிய நியாயாதிபதி. அவரறியாமல் எதையும் நாம் மறைக்கமுடியாது. இதோடு அடுத்த ஜன்மத்தில் நமது குற்றத்துக்குத் தக்கபடி தாழ்ந்த பிறப்பையும் தரித்திரத்தையும் நமக்குத் தருவர். இதை நீர் உண்மையாக நம்பக்கடவீர்.

இ. வ:—ஐயா! நான் முழுதும் நம்புகிறேன். நீங்கள் சொன்னதெல்லாம் சரியாக இருக்கிறது. இதுவரையில் இப்படி யாரும் எனக்குச் சொன்னதில்லை, உண்மையாக நான் இனிமேல் பொது நன்மைகளைக் கவனிக்கிறேன். அவைகட்குச் செலவு செய்கிறேன். இன்னின்னது நல்ல தர்மம் என்பதைப்பற்றிமட்டும் நீங்கள் எனக்குச் சொல்லவேண்டும்.

த. பா:—ஆகா! அப்பையா! மிக்கசந்தோஷம். உமக்கு வந்தனம் செய்கிறேன். நீங்கள் போய் வரலாம். மற்றவிஷயங்களைப்பற்றி அடிக்கடி சந்தித்துப் பேசிக்கொள்ள வேண்டும்.

இம்மட்டோடு சம்பாஷணைமுடிந்தது.

---

# மாரியம்மனும், உயிர்வதையும்.

---

கொன்னையூரில் சமீபத்தில் உத்சவம் நடந்தது. கொல்லப்பட்ட ஆடு கோழிகட்கு அளவில்லை. அநேகமாக வளர்த்த ஆடு கோழிகள் தீர்ந்துவிட்டன. இனிச் சினையாடுகளும் கோழிமுட்டைகளும் தான் மீந்திருக்கலாம். இது என்ன அநியாயம்! இதுகொலை விஷயத்தில் நமது நாட்டுக்கோட்டையார் அதிகமாகக் கலந்திருப்பது விசனிக்கத்தக்கது. நாம் விபூதி உருத்திராக்கம் தரித்துப் பகு

சாலோக சாமீப்யம் பெற்று ஈசுவர தியானம் செய்கிற பரம சைவர்களென்கிற நமக்கும் இந்தக் காளி, கருப்பன், சாத்தன், சாமுண்டி, காட்டேரி, வீட்டேரி முதலிய துர் தேவதைகட்கும் என்ன சம்பந்தம்? சக்கிரவர்த்தியின் சேவகனுக்கு சேவகன் தயவு எதற்கு? ஐயோ! இந்த உத்சவம் நடந்த இடத்தைப்பார்த்தால் இரணகளத்தை இரத்த ஆற்றைப்போல் எங்கு பார்த்தாலும் இரத்த வெள்ளமாயிருக்கிறது. உத்சவம் நடந்த ஒருமாதம் வரை கோயிலைச்சுற்றி நான்குமைல் சுற்றளவுக்கு இரத்த வாடை பிண நாற்றமாக இருக்கிறது. இதற்குள்ளிருக்கிற சுவாமிக்குச் சிறிதாவது ஜீவகாருண்யமிராதா? இவ்வளவும் பரிமள வாசனையாக இருக்குமா? ஆனால் சுவாமி என்ன செய்யும்! அது அசைவற்றிருக்கிறது. அதன் பெயரைச் சொல்லி மனிதர்கள் அறிவில்லாமற் செய்கிற கொலைக்கு யாரை நோவது? இப்படிச் செய்கிற ஜனங்களுக்கு ஒரு பலமான நம்பிக்கையிருக்கிறது. அதாவது இந்தப் பொங்கலும் பலியுமே தங்கள் குடும்பத்திற பிரஜைகளையும் பொருளையும் விருத்தியடையச் செய்கிறதென்பதேயாம். இது நிரம்பத் தப்பிதம். பரம்பரையாகப் பொங்கலிட்ட இவர்கள் பாட்டன் பூட்டனெல்லாம் எங்கே? இருக்கிறார்களா? இவர்களுள் அகால மரணம், நோய் முதலியன இல்லையா? சிலர் பொங்கலிடாம லிருக்கிறார்களே. அவர்கள் வீட்டில் பிள்ளைகளும் பொருளும் போதாததுக்குப் புத்தியும் ஏராளமாக விருத்தியடைகிறதே அதேதன்? பொங்கலிடுவதாலும் பலிகொடுப்பதாலும் இறப்பையும் பிறப்பையும் மாற்ற முடியுமா? அந்தோ இதென்ன மதி! காரண காரிய முறைப்படி வினையை யனுபவிப்பதை மறந்து விபரீதமான வழக்கங்களைக் கைக்கொண்டு பாப மூட்டையைத் தலையிலேற்றிக்கொள்ளுகிறார்களே! பாவம்!! பாவம்!!! கோயிலிற் பொங்கலிட்டுப் புதுமணஞ்செய்வது மட்டுமன்று. அதற்கு முதல்நாள் வீட்டிலும் பொங்கலிட்டு ஒரு முறை ஆடு கோழிகளைக் கொல்லுகிறார்கள். ஆடு கோழிகள் அலறுகிற சப்தம் பரிதாபமாக இருக்கிறது. மற்றுநாள் பார்த்தால் வீடொன்றுக்கு நாலு மூன்று உப்புக்கண்டத் தோரணமும் அதில் ஊசலாடுகிற காக்கைக் கூட்டங்களும் மிக்க வேடிக்கையாக விருக்கும். சில வீடுகள் தவிர அநேகமாக இந்த மங்கள தோரணம் கட்டப்பட்டிருக்கும். ஆகா

யத்திற் கருடனும் பருந்தும் வட்டமிட்டுச் சமயம் பார்த்துக்கொ
ண்டிருக்கும். இன்னு மநேக மாறுதல்களோடு ஊர் புதுமையாக
விருக்கும். இதெல்லாம் அறிவு பெருகி வருகிற இக்காலத்திலாவது
நம்மவர் விட்டுவிட்டாலென்ன? சாதாரண காலத்தில் உயிர்பலியைச்
சிறிது சிறிதாக நிறுத்தினாலும் இப்படிச் சந்தர்ப்பத்திலும் விசேஷ
காலங்களிலும் கண்டிப்பாக நிறுத்திவிட்டாற் போதுமானது. இது
பாபச்செய்கையாக இருப்பதோடு மகா அசங்கியமாகவும் இருக்கி
றது. ஒரு புண்ணிருந்தாலதைப்பார்த்து எவ்வளவு அசங்கியப்படுகி
றோம். மாடு தின்பதினாலன்றோ பறையர்களைத் தீண்டலில்லையெ
ன்கிறோம். இது எவ்வளவு பெரிய புண். ஆட்டிற்கும் மாட்டுக்
கும் பேதமென்ன? நம்முடைய மனதைத் திருப்தி யோஜித்தால்
இதிலுள்ள உண்மை பட்டப்பகல்போல் வெளியாகும். மாம்சம் புசித்
துக்கொண்டு விபூதி உருத்திராக்ஷம் தரிப்பது மகா பாவம். அதிலும்
பஞ்சாக்ஷர ஜெபம் பண்ணுவது மிக்க கொடிய பாவம். இந்த ஒரு
செய்கையால் அவ்வளவும் பிரயோசனமில்லனவாகிவிடுகின்றன.
ஆகவே நம்மவர் புலாலுணவைச் சிறிது சிறிதாக விட்டுவிட வேண்
டியது நிரம்ப அவசியம். அதற்கு முன்னதாக இந்தப் பலியிடுகிற
கொடிய செய்கையை விட்டுவிடவேண்டும். விட்டுவிடுவதால் குடு
ம்பங்கட்கு க்ஷேமமேயன்றி யாதொரு குறையும் நேராதென்பது
சத்தியமாகும். கோழிகளும் ஆடுகளும் அடியில் வருமாறு முறை
யிடுகின்றன.

உங்கள் மக்களும் நீங்களும் நோய்கொள
எங்கள் மக்களும் நாங்களும் என் செய்தோம்
பொங்க விட்டுப் புதுமணஞ் செய்கிறீர்
எங்கள் பாவம் இறைவர் கேட்பரே.

இதைக்கேட்டாவது நீங்கள் அவைகளிடத்து இரக்கங்கொள்ளு
வீர்களென்று நம்புகிறேன். இனி அடுத்த வருஷம் [illegible]
மாரியம்மனுக்கு எத்தனையாயிரம் ஆடு கோழிகள் பலியாகப்போகின்
றனவோ. எத்தனையாயிரம் காக்கைகள் உப்புக்கண்டத் தோரண
த்தில் ஊசலாடப்போகின்றனவோ. அந்த அம்மைக்குத்தான்
தெரியும். இதை விட்டு அம்மைக்குப் பாற்பொங்கலிடுங்கள். பாற்
பொங்கலிடுங்கள். அதுவே உத்தமம், அதுவே உத்தமம்.

# நாகரீகமான பழக்கங்கள்.

---

பிறருக்குச் சங்கடத்தை யுண்டுபண்ணாமல், தாம் கௌரவமாயிருக்க, விரும்புகிற ஒவ்வொருவரும் அடியில் வருகிற விஷயங்களைக் கவனிப்பாராக.

1. ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருக்கும்போது இடையிற் புகுந்து பேசுவதும், தனித்துப் பேசுவதை யுற்றுக்கேட்பதும், அவர்கள் விலகுமிடமெல்லாம் பின்தொடர்ந்து சமயந்தெரியாமல் தானும் கூடப்போய்நிற்பதும், நல்லபழக்கமன்று. தனித்துப்பேச முயலுவோரின் நோக்கமறிந்து தானே விலகிவிடுவதும் தனக்குச் சம்பந்தமில்லாத விஷயத்தில் அனாவசியமாகத் தலையிட்டுப்பேசாமையும் கௌரவமாகும்.

2. ஒருவர் ஒருவிஷயத்தை நம்மிடஞ்சொல்ல இஷ்டப்படாவிட்டால், அதை வற்புறுத்திக்கேட்க முயலுவதும், நாம்சொல்லுவதைக்கேட்க விருப்பமில்லாதவரிடத்து நமது விஷயங்களைச் சொல்லுவதும் கௌரவக்குறைவும் அனாவசியமுமாகும். ஒருவர் இஷ்டப்பட்டுச்சொன்னால் விரும்பிக்கேட்கவேண்டும். ஒருவர் ஆவலாகவும், அன்பாகவும் கேட்டாலன்றி விஷயங்களைச் சொல்லக் கூடாது.

3. ஒருவர் ஒரு புத்தகத்தையாவது கடிதத்தையாவது வேறெதையாவது கவனமாகப்படித்துக்கொண்டிருக்கும்போது அல்லது எழுதிக்கொண்டிருக்கும்போது, அதற்கிடையே சம்பாஷிக்க முயலுவதும், கேள்விகள் கேட்பதும, பேச்சுக்கிழுப்பதும், பரிகாசம் பண்ணுவதும் நல்லபழக்கமன்று. இடையே சம்பாஷிக்கவேண்டுமானால் ஒரு சிறுவார்த்தையால் அவரபிப்பிராயத்தை யறிந்துகொண்டு விருப்பமிருந்தாற் பேசலாம். இல்லாவிடில் கிட்டப்போவதும் உசிதமன்று.

4. ஒருவர் எழுதுகிற கடிதத்தையாவது, கணக்கையாவது, ஒருவருக்கு வந்த கடிதத்தையாவது படிக்கமுயலுவதும் அதையுற்றுப்பார்ப்பதும் நல்லபழக்கமன்று. அதிற் பிரயோஜனமுமில்லை.

5. நச்சுப்பல்லிபோல் வீணாகப் பேச்சை வளர்த்து ஊர் வம்புகளைப் பேசக்கூடாது.

6. சில மூடர்கள் அனாவசியமாக, வழியிற்போகிறவர்களை உற்றுப்பார்த்தும் ஊர், பேர், குலம், கோத்திரம் எல்லாம் விசாரித்தும் அவமானமடைகிறார்கள். இத்தகைய அறிவீனர்கட்கு ஒரு கேள்விக்கு மேற் பதிற் சொல்லுவதை நிறுத்திவிடவேண்டும்.

7. சந்தோஷமாக மாமன் மைத்துனன் தகப்பன் பிள்ளை பரிகாசம் பண்ணிக்கொள்ளும்போது, அசட்டு வார்த்தைகளை யுபயோகப்படுத்திப் பேசிப் பரிகாசஞ் செய்துகொள்வதிலும், சொற் சம்பிரதாயமாகப் பேசிப் பரிகசிப்பது அழகாகும்.

8. நம்மிடத்து அன்புகொண்டு நேசிப்பவர்கள் உயர்ந்தோராயினும் தாழ்ந்தோராயினும் அதைச் சீர் தூக்காது நாமு மவரை அன்போடு நேசிக்கவேண்டும். நம்மை மதியாமல் அலட்சியம் செய்வோரிடத்து நாமும் அப்படியே நடந்துகொள்ள வேண்டும்.

9. ஒருவருக்குக் கல்வியோ செல்வமோ அல்லது செல்வாக்கோ உயர உயர அவர் வாயினின்றும் வீண் வார்த்தைகள், பொய் வார்த்தைகள், பரிகாசமான வார்த்தைகள் ஏமாற்றுகிற வார்த்தைகள் குறையவேண்டும். அவைகளிருப்பின் அவர் சொல்லுக்கு மதிப்பில்லாதமேதாடு செல்வத்துக்கும் கல்விக்கும் கௌரவமில்லை.

10. தன்னை நோக்கி வந்தவன் எவ்வளவுசாமானியனானாலும் அவனை மரியாதையாக வரவேற்று, உபசரித்து, உணவிட்டுத் தக்க மறுமொழி தந்தனுப்புவது பெருமைதரும். வாயில்லா ஜீவர்கள் போல் மௌனஞ் சாதிப்பதும் ஒரு நாழிகைக்கு ஒரு வார்த்தை பேசுவதும், வந்தவனை நின்றபடி நிறுத்தி அகௌரவப்படுத்துவதும் பெருமையன்று.

11. ஒருவன் அறியாமற் செய்கிற குற்றத்தை மன்னிக்கலாம். அறிந்து செய்கிற குற்றத்தை மன்னித்தல் பாவமாகும்.

ஏனெனில், அவன் பின்னும் பின்னும் பிறருக்குத் தீங்கு செய்வான். தன்னாலியன்றவரை முயன்று அவனுக்கு அறிவுண்டாக்கவேண்டும்.

12. எவ்வளவு ஆதாயமுண்டானாலும் ஒருவனிடத்து இல்லாத குணங்களைச் சொல்லிப் புகழ்ந்து (முகஸ்துதி) பேசி உற்சாகப்படுத்துவது நல்லதன்று. ஏன்? அதனாலவன் தன்னை யறியாமல் மயங்கி யிடறுண்டுக் கேடடைகிறான். ஒருவனிடத்துக் கண்ட நற்குணங்களை எடுத்துப் பாராட்டிப் பேசி அவனை உற்சாகப்படுத்துவது பின்னுமவனை நல்லவழியில் நடக்கச்செய்கிறது.

13. மனிதருள் ஒருவரை யொருவர் நேசிப்பதை மூன்று வகைப்படுத்தலாம். சுயநயங்கருதி யொன்று. (கடையன்பு) வியாபார சம்பந்தமாக வொன்று. (இடையன்பு) மனவொற்றுமையாலொன்று (தலையன்பு) இவற்றுட் சிறந்தது மனவொற்றுமையேயாம். மனவொற்றுமையுடைய நண்பனே சகோதரர்களினும் சிறந்தவன். அத்தகைய நண்பன் ஒருவனாவது ஒவ்வொருவருக்கும் அவசியம் வேண்டும்.

14. நமக்கு ஜீவகாருண்யமுண்டென்றால் அது மனிதரிடத்து உண்டாவதைப்பார்க்கினும் மற்ற ஜீவன்களிடத்து அதிகமாக வேண்டும். அப்போது நாம் புலாலுணவை நீக்கிவிடுதல் அவசியமாகிறது. அப்படியின்றிப் பொங்கலிட்டுப் புதுமணஞ் செய்து சோறுங் கறியும் நாமே தின்னுவதால் பொங்கலும் பலியும் நமக்கேயன்றித் தெய்வத்துக்கல்ல. அப்பாவத்தினால் நாமும் ஒருமுறையாவது ஆடு கோழிகளாகப் பிறப்போம்.

15. மனிதருள் தமக்குண்டாகிற நன்மை தீமைகளைப் பொருட்படுத்தாது பரோபகாரமே பெரும் புண்ணியமென்று கடைப்பிடித்தொழுகுபவர் உத்தமோத்தமர். தமக்குக் கௌரவத்தையும் பிறருக்கு நன்மையையும் விருத்திபண்ணுகிறவர் உத்தமர். பிறருக்குதவியின்றித் தம்மட்டிற் றமக்குத்தாமே வேண்டியவைகளைச் செய்துகொள்ளுகிறவர் மத்திமர். பிறரை யேமாற்றி ஜீவிக்க முயலுகிறவர் அதமர். திருடியோ வஞ்சித்தோ ஜீவிப்பவர் அதமாத

மா. செல்வத்தினால் ஆடம்பரஞ் [illegible] என்கிறவர்களும் நல்ல ஸாமர்த்திய யடக்கி ஜாலஞ் செய்கிறவர்களும் பெரும்பாலும் நயபக்ஷக்காரக ளல்ல.

16. ஒருவனை நல்வழிப்படுத்தவேண்டுமென்றால் அவனிடந் தனித்துப் பேசவேண்டும். ஒருவனுக்குப் புத்தி சொல்லவேண்டுமென்றால் நேரிற் சொல்லவேண்டும். [illegible] நிந்தைக் கேடென்று செய்யக்கூடாது. மனிதரிடத்துக் குற்றமோ குணமோ எது மிகைப்படுகிறதோ அதைப் பாராட்டவேண்டும். ஒருவனுக்கு அவமானமுண்டாகிற விஷயத்தை எப்போதும் பகிரங்கமாகப் பேசக்கூடாது. எல்லோரிடத்திலும் சகோதர வாஞ்சை வைக்கவேண்டும்.

17. பிள்ளைகட்குக் காளி, கருப்பன், சாத்தன், வீரன் முதலிய துர்த்தேவதைகளின் பெயர்களையாவது குப்பான், குப்பி முதலிய பழிப்பெயர்களையாவது வைக்காமல் தத்தம் சமயத்துக் கேற்றபடி அம்மை அப்பர்களின் அனேக திருநாமங்களையாவது ஆழ்வார் திருநாமங்களையாவது வைத்து அழைப்பது நாகரிகமாகும். மீனாக்ஷி சிவகாமி விசாலாக்ஷி [illegible] சொக்கலிங்கம் இராமசாமி முத்தையா என்ற உயர்ந்த பெயர்களை வைத்து அதைக் காற்பெயர் அரைப்பெயராக மாற்றியழைப்பது விசனிக்கத்தக்கது.

18. சரீரத்தை மூடிக்கொள்வதும் மூளையைப் பாதுகாத்தற் பொருட்டுத் தலையில் மயிரிருக்கவேண்டியதும் பாதரக்ஷையிட்டு நடக்கவேண்டியதும் தற்காலத்துக்கு மிகப் பொருத்தமான நாகரிகமாகும். சாஸ்திர யுக்தமு மதுவேயாம். அப்படியின்றி இருப்பது நோய்க்குள்ளாக்குகிறதென்பதை யநுபவத்திலறிகிறோம்.

19. சிலர் விருந்துக்குப் போகிற இடங்களில் அவர்கள் இட்டதை அங்கீகரித்துத் திருப்தியடையாமல் தங்கள் சுவையான உணவுக்கும் சுக சௌகரியத்துக்கும் அவர்கள் சலிக்கும்படி கஷ்டப்படுத்தி பலவந்தஞ்செய்கிறார்கள். இத்தகையோரைப் பின்னொருமுறை பார்ப்பதற்கும் அநேகர் விரும்புவதில்லை. இது கேவல அநாகரிக

மும் விசேஷமின்மையுமாகும். இன்னும் சிலர் சரியான உணவு தரவில்லையென்று புறங்கூறித்திரிவதுமுண்டு. அது பெருமையற்ற செய்கை. "அன்புடன் முகமலர்ந்து உபசரித்து தன்மையே பேசி உப்பிலாக் கூழிட்டாலும் உண்பதே யமுதமாகும்" என்பதுதான் கவனிக்கத் தக்கது.

20. எந்த விஷயத்தைப்பற்றியும் முணுமுணுத்துக்கொண்டிராமல் விஷயங்களைக் காலவிடமறிந்து வெளியிட்டு நடந்ததற்கு வருந்தாமல் நடக்கவேண்டியவற்றைக் கவனித்து முயற்சிப்பது மகிழ்ச்சிக் கேதுவாகும். அங்ஙனமின்றிச் சென்றதைப்பற்றியே பேசுவதும் அதற்காக மற்றவரோடு சண்டை பிடிப்பதும் கவலையை வளர்த்துக்கொண்டு போவதும் துக்கத்துக் கேதுவாகும். எப்பொழுதும் சந்தோஷமாக இருக்கவே முயற்சிப்பதவசியம்.

21. மத சம்பந்தமாகவும் ஜாதி சம்பந்தமாகவும் ஒருவரையொருவர் தூஷித்து வம்பு வளர்ப்பதே தொழிலாகச் சிலருள்ளார். ஜாதியும் மதமும் நமதிறைவன் முன்னிலையில் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கிவிடுமென்பதை யவர்களறிவதில்லை. ஜாதிக்காகவும் மதத்துக்காகவும் முக்தி யேற்பட்டிருக்கவில்லை. பக்தியொன்றுக்கே முக்தியுண்டு. பக்தியின் பல நாமங்களில் அன்பு என்பதுமொன்று அவ்வன்பு ஜீவர்கள் மாட்டுண்டாவது. உண்மையான அன்புடைய உத்தமர்கள் கீழ்ப்படியான ஜாதி மத பேதங்களைப் பொருட்படுத்தாமல் அதற்காக மண்டையுடைத்துக்கொள்ளாமல் எல்லோரையும் சகோதரர்களாக மதித்துப் பொது நன்மை கருதி நமது இந்திய மாதாவுக்கு நாகரிகத்தையும் பெருமையையும் உண்டாக்குவார்களாக.

22. வெற்றிலை, புகையிலை, பொடி, சுருட்டு முதலியவஸ்துக்களை அளவுகடந்து எந்நேரமும் அதுவேலையாக உபயோகிப்பது நல்ல பழக்கமன்று. அதனால் நன்மையில்லாததுடன் பெருந் தீமைகளுமுண்டு. இதனினும், கஞ்சா, அபின் கலந்த பூரணாதி முதலிய லேகியங்களையுண்பது பெருங்கேடாகும். இந்தக்கெட்ட

பழக்கங்களைச் சிறிது சிறிதாக விட்டுவிட முயலவேண்டுவது விவேகிகளின் கடமையாகும்.

23. நாம் உணவு உட்கொள்ளுமிடம் எப்பொழுதும் பரிசுத்த முடையதாக விருக்கவேண்டும். அசங்கியமான இடத்திலாவது அசங்கியமான பொருள்களைப் பார்த்துக்கொண்டாவது உண்போமாயின் அவ்வுணவு வாந்திமுதலியகெட்ட குணங்களையுண்டாக்கி நம்மை நோய்க்குட் படுத்திவிடும். அப்படியுண்பது அநாகரீகமான காட்டா முரண்டிச் சனங்கட்கே பொருந்துமன்றி நம்மைப்போற் சிறிது நாகரீகமுள்ள ஜனங்கட்குப் பொருந்தியதன்று.

24. சிலர் பிராம்மணர், சைவர் வீடென்று கேட்டமாத்திரத்தில் அங்குசாப்பிடச் சம்மதிக்கிறார்கள். எல்லாஜாதியிலும் சுத்தமான ஜனங்களும், அசுத்தமானவர்களு முண்டு. ஜாதிக்காக நோய்முதலியன வேறுபட்டிருக்கவில்லை. ஆகவே ஜாதிக்கேற்றவாறு உண்ணப்படுமிடத்தில் ஜனங்களும் இடமும் பரிசுத்தமுள்ளனவாகக் கண்டு உண்ணப் புகுவது நல்லபழக்கமாகும். சில ஓட்டல், க்ளப்புகளிலுள்ள பிராமணர்கள் ஸ்நானம் பண்ணி அநேகநாட்களானது போற்காணப்படுவதுடன், கெட்ட இரத்தத்தாலுண்டாகிற பல நோய்களை யுடையவர்களாகவும் காணப்படுகிறார்கள். ஆதலின இதில் எல்லோரும் ஜாக்கிரதையாக இருப்பது நலம்.

25. நம்முடைய கால்கைகள் நமக்கு முதவியற்றன வாகாமல் கூடியவரையில், ஒவ்வொருநாளும் நாம் சிறிது சிறிது வேலை செய்தும் சிறிது தூரம் நடந்தும் அப்பியாசம் செய்துவருவது நல்ல பழக்கமாகும். காலையிலெழுந்து சிறிது தூரம் நடத்தல், கிணற்றில் ஜலமெடுத்தல், நாமே அழுக்குத் தேய்த்துக்கொள்ளுதல், எண்ணெய் தேய்த்துக்கொள்ளுதல், இன்னும் வீட்டிலுள்ள சிறுவேலைகளையும் கூடியவரையிற் செய்தல் நன்மையாகும். ஆனால் நமக்கு அசௌகரியமானபோது வேலையாட்களைக்கொண்டு செய்துகொள்ளலாம். சிலர் வேலையாட்களைக்கொண்டே எப்பொழுதும் எல்லா வேலைகளையும் செய்துகொள்ளுதலும், தான் அசையாதிருத்தலும் பெருமையென்று கருதி அங்ஙனம் செய்கிறார்கள். அதனாற் சரீரம் சுகமி

க்கூடுபோல் பலவீனமடைந்து அஜீரணம் முதலிய நோய்கள் குடியிருக்கும் வீடாகிவிடுவதுடன் அகால மரணத்துக்குமேதுவாகிறது. ஆகவே அது தற்கொலைசெய்து கொள்ளுவதையொக்கும். வேலையாட்கள் செய்யவேண்டியன ஒவ்வொரு வீட்டிலும் நிரம்ப இருக்கும். அதைவிட்டு நமது சரீர சௌக்கியத்தின் பொருட்டு நாம் வேலை செய்து பழகவேண்டும். நாம் தனிப்பட்டபோது அப்பழக்கம் நமக்கு நல்ல உதவி செய்யும். அவனவன் கால் கைகளைப்போல் அவனவனுக்கு உதவியுள்ளன இல்லையென்பது பற்றியே கடவுள் நிரப்பிய செல்வமுள்ள பிரபுவானாலும் அவனுக்கும் தனியே கால் கைகளைப் படைத்திருக்கிறார். இதுவே போதிய சான்றாகும்.

26. நம்மையாவது, நமது விவகாரத்தையாவது முன்பின் அறியாதவரிடத்து கால் தலையில்லாத பஞ்சாயத்துச் சொல்வதும் அதற்கவர்களை அபிப்பிராயம் கேட்பதும் நல்லபழக்கமன்று. சொல்லவேண்டுமானால் நம்மையவர்களறிந்து அவர்களை நாமறிந்த பிறகு விவகாரத்தைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறி, ஞாயமெப்படியென்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். சிலர் அடுத்து நிற்பவர் யாரானாலும், அவர்களைப் பார்த்து தங்கள் விவகாரத்தின் நுனி யல்லது அடியைச் சிறிது சொல்லி என்ன சொல்லுகிறீர்களென்று கேட்கின்றனர். இதனாலென்ன பயன் எனபதையவர்களறியவேண்டும்.

இத்தகைய நல்லபழக்கங்களை உபாத்தியாயர்கள் அடிக்கடி மாணாக்கர்கட்கு ஞாபகப் படுத்துதல் நலமாகும்.

## சாந்தமும், கோபமும்.

மனிதன் தன்னைத்தான் காத்துக்கொள்ளுகிற விஷயத்தில் சாந்த குணத்தைப்போற் சிறந்த துணை எதுமில்லை. எவன் சாந்த குணமுடைய மனிதனோ அவனை எல்லோரும் விரும்புவார்கள். ஆனால் அதிற் பலவகையான சாந்தங்களுண்டு. அவற்றுள் உண்

மையும் பெருந்தன்மையுமுடைய சாந்தமே பெருமையுடையது. ஆகையால் கள்ளச்சாந்தம், கபடச் சாந்தம், லோபச்சாந்தம், ஜடச்சாந்தம், மயக்கச்சாந்தம் முதலிய போலிச் சாந்தங்கள் பிரயோஜன முடையனவல்ல. கள்ளச்சாந்தமாவது: பேராசையாற் பொருள் முதலியன ஈட்டுதற்பொருட்டு நியாயமற்ற வழிகளிற் சென்று மாட்டிக்கொண்டபொழுது அடித்தாலும் உதைத்தாலும் வைதாலும் எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டு பேசாதிருத்தல். (௨.) கபடச் சாந்தமாவது: பிறர் விரும்பியபடி தன் காரியம் முடியுமளவும் சுபாவத்தைப் பொறுமையாக நடித்துக்காட்டுவது. (௩) லோபசாந்தமாவது: வழக்குச்செலவை யுத்தேசித்துப் பிறர் எதைச் செய்தாலும் யார் என்புரிந்தாலும் ஒன்றிலும் தலையிடாது மௌனமாகவிருத்தல். (௪.) ஜடசாந்தமாவது தன்னிலை அறிவின்றிப் பிறர் செய்கிறவற்றைச் செயல்களையும் பேசுகிற கொடுஞ்சொற்களையும் தெரிந்துகொள்ளாது பேசாதிருத்தல். (௫.) மயக்கச் சாந்தமாவது: ஒரு பொருளில் வைத்த ஆசையால் அதைக் காப்போர் செய்கிற அவமானங்களைப் பொறுத்துப் பின்னும் பிரவேசித்தல். இத்தகைய சாந்தங்களும் வெளிப்பார்வைக்குச் சாந்தமேயானாலும் பிறருக்குபயோகமானவல்ல. சாந்தமென்றால் அது மிகப் பரிசுத்தமுடையது. பிறர் செய்கிற இம்சை அவமானங்களில் சுகதுக்கமடையாமல் எதையும் பாவனையும் சமமாக நினைத்துத் தன்னையாவது தன் செல்வத்தையாவது தன் செல்வாக்கையாவது பெருமையாக நினைத்துச் செருக்கடையாமல் பெரிய பெரிய கஷ்ட நஷ்டங்கள் வந்தாலும் அவற்றையும் ஒரு தன்மைகொண்டே சந்தோஷமாக ஏற்று எந்த வகையிலும் பிறருக்குத் தீய புரியாதே பெரியோர்களும் தெளிவுற்றப் பகைவருக்கும் யாதொரு அவன் வருந்தச் சகியாத இரக்க சுபாவமுடையவன் எவனோ அவனே சாந்தபுருஷன். அவன் குணமே உண்மையான சாந்தகுணம். அதுவே சாந்தமெனப்படும். இத்தகைய ஒரு உத்தமனுக்கு உலகத்திற் பகையே கிடையாது. இக்காலத்தில் இல்லற வாழ்வுடைய மனிதன் லௌகிக தோற்றத்துக்கும் இவ்வளவு சாந்தமாக இருப்பானாகில் ஜனங்கள் அவனைத் துன்புறுத்தச் சமயமாக எண்ணி வருவார்கள். அவன் வாழ்வு பல வழியிலும் கஷ்டமுள்ளதாக முடியும். ஆதலின் பூரண அறிவுள்ள இல்லறத்தான் எப்பொ

வேண்டுமென்னின் உள்ளே சாந்தமும் ஜீவகாருண்யமும் பரோபகாரமும் நிரம்பி வெளியிற் சிறிது கோபமுடையனாக இருக்கல் வேண்டும். அந்தக் கோபத்தால் யாருக்கும் தீங்குண்டாகக் கூடாது. இதை ஒரு கதை மூலமாக விளக்குவோம். ஒரு ஊரில் ஜனங்கள் அதிகமாக நடமாடுகிற பாட்டையில் ஒரு கொடிய சர்ப்பம் குடியேறியது. அது குடியேறிய நாள்முதல் ஜனங்களை இம்சித்தும் இரண்டொருவரை எமலோகத்துக் கனுப்பியும்விட்டது. இது தெரிந்து ஜனங்கள் அவ்வழி நடப்பதை நிறுத்திவிட்டார்கள். அநேககாலம் நடமாட்டமின்மையால் அவ்வழியிற் புல்லும் செடியும் உண்டாகி ஒரு காடுபோலாகிவிட்டது. இப்படியிருக்க ஒருநாள் ஒரு பெரியவர் அதன்வழியாக நடக்க ஆரம்பித்தார். அப்போது ஜனங்கள் சர்ப்பத்தின் தன்மையைச் சொல்லி அப் பெரியவரைத் தடுத்தும் அம்மகான் கேளாமல் நடந்தார். ஜனங்கள் திரண்டு நின்று வேடிக்கை பார்த்தார்கள். அரவமோ மிகச் சினத்தோடு சீறிப் பாய்ந்து பெரியவரைத் தீண்டவந்தது. சமீபத்தில் வந்தவுடன் பெரியவர் கையையமர்த்தி 'ஏ நாகேந்திரா! நீ சாந்தமாக இரு' என்றார். சர்ப்பம் வணங்கிப்போய்விட்டது. பெரியவரும் போய்விட்டார். பிறகு ஜனங்கள் சர்ப்பமெப்படி யிருக்கிறதென்றறியப் புகுந்து சிறிது சிறிதாக நெருங்கிச் சமீபத்திற் சென்றும் நாகம் அசைவற்றிருப்பதையறிந்து கல்லாலும் மண்ணாலும் அடித்துப்பார்த்து முடிவில் மெல்லவாலைப்பற்றி யிழுத்துப் பார்த்தார்கள். சர்ப்பம் சாந்தமாகவேயிருந்தது. மறுநாள் முதல் சர்ப்பத்தின் பாடு பிராண ஆபத்தாகிவிட்டது. காலையில் சிறுவர்கள் கூடி வாலைப்பற்றி ஊர் முழுது மிழுத்து மிதித்துத் துன்புறுத்தி மாலையில் எங்காவது போட்டுவிட்டுப் போகிறது வழக்கமாகிவிட்டது. சர்ப்பமோ சரீரமெல்லாம் தேய்ந்து நொந்து உணவுமின்றி வருந்தி மரணத் தருவாயிலிருந்தது. அப்போது முன் அவ்வழியாய்ச் சென்ற பெரியவர் மறுபடியும் வந்தார். நாகம் அதிக பயபக்தியோடு வணங்கித் தன்னுடைய கஷ்டங்களைப் பற்றி முறையிட்டுக்கொண்டது. பெரியவர் இரக்கமுற்று ஏ நாகமே! உன்னை நான் மனச் சாந்தத்தையடையச் சொன்னேனே யன்றி வேறன்று, ஏனிப்படி நடந்து கொண்டாய்? இனிமேல்

உன்னை நீ காத்துக்கொள். அதனால் "பிறர்க்குத் தீங்கு செய்யாதே" என்றுரைத்துப்போனார். மறுநாள் வழக்கம்போற் சிறுவர்கள் வந்துவிட்டார்கள். மள மளவென்று சர்ப்பத்தினிடம் போய் வாலைத் தொடவே சர்ப்பம் ஒரு முறை சீறிற்று. சிறுவர்கள் ஓட்டமெடுத்தார்கள். உடனே ஜனங்கள் கூடிப்பார்த்துச் சர்ப்பத்தைக் கஷ்டப்படுத்தினால் அது தீண்டுமென்பதை யுணர்ந்து அதனாற்றங்கட்குத் தீங்கில்லாமலும் தங்களாலதற்குத் தீங்கில்லாமலும் நடந்துகொண்டார்கள். சர்ப்பம் சௌக்கியமடைந்தது. இதனால் கோபம் எப்படிப்பிரயோஜனப்படவேண்டுமென்பது நன்கு விளங்குகிறது. இரத்த ஓட்டம் அதிகமாக இருப்பவனுக்கும் தயாளகுணமுடையவனுக்கும் விரைவில் விஷயங்களை யாராயுமியல்புடையவனுக்கும் பெரும்பாலும் முன்னாற் கோபமும் பின்னால் இரக்கமுமுண்டாவதியல்பென்று மேனாட்டுச்சாஸ்திர விற்பன்னர்கள் கூறுகிறார்கள். அப்படியானால் அவர்கள் அதைமாற்றிக்கொள்ளப்பழகவேண்டுமன்றோ? அதற்கு ஒரு அறிஞர் தந்திரம் சொல்லுகிறார் "When you are angry shut up your mouth" நீ கோபமாக இருக்கும் பொழுது உன்வாயை மூடிக்கொள் என்கிறார். ஆகவே நாம் மனச் சாந்தமுடையவர்களாகவும் பிறராற் கஷ்டமுண்டாகாவண்ணம் சிறிது வெளிக் கோபமுடையவர்களாகவும் உண்மையாகக் கோபம்வரும்போது சிறிது வாயைமூடி யிருந்து கொஞ்சநேரம் சென்று ஆராய்ந்து பேசவும் பழகுவோமாக.

---

## கண்ணுள்ள குருடர்கள்.

---

உலகத்திற் கண்கள் பிரகாசிக்காமலோ, ஊனமுற்றோ பார்வையற்றவர்களைக் குருடர்கள் என்பதுவழக்கம். கண்ணுள்ள குருடர்களைப்பற்றி அனேகமாக ஒருவரும் அறிந்திருப்பதில்லை. தனக்குச் சொந்த அறிவில்லாமலும், ஒன்றை, நன்மையா, தீமையா கூடுமா, கூடாதாவென்று பகுத்தறியும் ஆற்றலில்லாமலும், ஒருவர் போனவழியே போகிற மூடர்கள்தான் கண்ணுள்ளகுருடர்கள். அவர்களைத்தான் குரும்பையாட்டுப் பிறப்புகள் என்னும்

கூறுவர். குருட்டாடு ஒன்று தவறி ஒரு பள்ளத்தில்விழுந்தால் அதற்குப் பின்னுற் போகிற குருட்டாடுகளும் ஒன்றன் பின் ஒன்றாக விழுந்துபோவது வழக்கம். பள்ளமென்றோ முன்னுற் சென்ற ஆடு தவறிப்போய் விழுந்துவிட்டது. நாம் ஜாக்கிரதையாகச் செல்வோமென்ற ஞானம் இருப்பதில்லை. விழுந்தவிடத்தில் மளமளவென்று ஒன்று பாக்கியில்லாமல் விழுந்துவிடுவது குருட்டாடுகளினியல்பு. அதைப்போலவே மனிதர்களுட் சிலர், ஞானமென்பது ஒருசிறிதுமின்றி, ஒருவர் செய்வதையே செய்வதும், ஒருவர் போனவழியே போவதும், ஒருவர் பேசினதையே பேசுவதுமாகக் காலம் போக்குகிறார்கள். "தக்கதின்ன தகாதன இன்னவென், றொக்க வுன்னலராயி னுயர்ந்துள மக்களும் விலங்கே" என்றபடி, நன்மையிது, தீமையிது, வென்று ஆராயுமாற்றலில்லாதவர் உருவத்தில் மனிதரேயாயினும், மிருகவர்க்கத்திற் சேர்ந்து எண்ணப்படுவர். ஒருவனுக்கு இரண்டுகண்களும் நன்றாயிருக்கின்றன. ஆனால் ஒன்றைப் படிக்கவாவது, எழுதவாவது கூடவில்லை, ஏன்? ஞானமில்லை. கண்ணிருந்தாலும், ஞானமில்லாவிட்டால் பிரயோஜனமில்லை. அதுபோலவே, அவயவங்களெல்லாம் சரியாக இருந்தாலும், அறிவு இருக்கவேண்டும். அறிவில்லாதவன் மற்றொருவன் கொடுக்கைப் பற்றி நடக்கவேண்டியவனாகிறான். அப்போது அவன் கண்ணிருந்தும் குருடனாகிறான்.

இத்தகைய குருடர்கள் ஏற்படுத்தியதுதான், வழக்கம் என்பது. வழக்கமென்றால் நல்லவழக்கமுமுண்டு, கெட்டவழக்கமுமுண்டு. ஆதலால் எல்லாவழக்கங்களையும் கொள்ளுவதற்கில்லை, எல்லாவழக்கங்களையும் தள்ளுவதற்குமில்லை. எது அவசியமோ, அதைக்கொண்டும் எது அநாவசியமோ, அதைத்தள்ளியும் நடக்கவேண்டும் அதுதான் விவேகிகளின் கடமையாகும், குருட்டையாட்டின் வர்க்கத்தைச் சேர்ந்தமனிதர்கட்கு இந்தப் பகுத்தறிவு தானிருப்பதில்லை. நல்லதோ, கெட்டதோ, வழக்கமென்றால் அந்தப்படுகுழியைத் தாண்டி ஒரு அடிபேனும் வைக்கமாட்டார்கள். மாண்டாலும், மடிந்தாலும் வழக்கத்தோடு மடிவார்களேயன்றி ஒரு சிறிதுமாராய்ந்து சரியான வழியிற் றிரும்பமாட்டார்கள். நடக்

பிரதேசத்தில் மயானத்துக்கு நேரான வழியிருந்தாலும், பழையவழக்கப்படி பிணத்தையெடுத்துக்கொண்டு ஒருமயில் சுற்றி வருகிற வழக்கம் இப்போதும் பல ஊர்களிலிருக்கிறது. சில வருஷங்கட்கு முன், ஒருமனிதன் சிதம்பரத்துக்குப் போனவிடத்தில் பேதிகண்டிறந்துபோனாராம். அவர் வார்சுதார்கள் நாளிது தேதிவரையிற் சிதம்பரத்துக்குப் போவதில்லையாம். என்ன புத்திசாலித்தனம் பாருங்கள்! இதுபோல் எத்தனையோ குருட்டுவழக்கங்கள் நடைபெறுகின்றன. ராமேஸ்வரத்துக்குயாத்திரை செய்யச் சென்ற ஒரு வைதீகப்பிராம்மணர், தனுக்கோடியிற் சங்கற்பம் சொல்லி ஸ்நானம் பண்ணும்போது கையிலிருந்த வைதிகச் செம்பை மணலிற் புதைத்து அடையாளமாக மேற்புறத்தில் மணலை லிங்கம் போற் குவித்துவைத்துவிட்டு ஸ்நானம் செய்தார். அதைப் பார்த்துக்கொண்டிருந்த மற்ற ஜனங்களும், அதுவும் தனுக்கோடியிற் செய்யவேண்டிய ஒரு சடங்கென்றுகருதி ஆளுக்கொரு குவியல் செய்துவிட்டார்கள். ஐயர்திரும்பிவந்துபார்த்து ஆயிரக்கணக்கான மணற்குவியல்களைக் கண்டு அடையாளம் தெரியாமற் செம்பையிழந்து சென்றாராம். இத்தகைய நம்பிக்கைதான் குருட்டு நம்பிக்கையென்பது. இப்படிச்சிறியகாரியங்களைப் போலவே பெரிய காரியங்களிலும் அனேகர், வழக்கம், வழக்கமென்று ஒருவர் போனவழியே போய்ப் பொருளையும் புத்தியையும் வீணாக்குகிறார்கள். அவர்களைத்தான் நாம் கண்ணுள்ள குருடர்கள் என்று சொல்ல விரும்புகிறோம். தகப்பன்காலத்திற் கோயிலில்லை. அவர் ஒரு கோயிலைக்கட்டினார், மகன்காலத்தில் ஒரு குளத்தை வெட்டினாலென்ன? தகப்பன் கட்டிய கோயிலைப்போல் தானொருகோயில் கட்டவேண்டிய அவசியமென்ன? தகப்பன் ஒரு பாடசாலையை இயற்றினார். மகன் ஒரு வித்தியாசாலையையியற்றினாலென்ன? தகப்பன் தஞ்சாவூரிற் பாடசாலை வைத்தால், மகன் மன்னார்குடியிற் பாடசாலை வைக்கவேண்டுமென்ற அவசியமென்ன? இதெல்லாம் குருட்டு நம்பிக்கையும், குரும்பையாட்டுச் சுபாவமுமன்றோ! காலத்தையும் சமயத்தையுமனுசரித்து காரியங்களைச் செய்கிறவனன்றோ விவேகியாகிறான்? நாம், எந்தக்காரியத்தையும் கண்ணை மூடிக்கொண்டு செய்கிற சுபாவமுடையோராக இருக்கக்கூடாது. சிறிய

பெரிய ஒவ்வொரு விஷயத்தைப்பற்றியும் நன்குயாராய்ந்து தெரிந்து கொள்ளவேண்டும். நமது அறிவுக்குப் புலப்படாவிட்டால் அறிஞர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும். காரணகாரியமறியாமல் எதையும் நம்பக்கூடாது. நமக்குச் சொந்த அறிவிருக்கவேண்டும். அவசியமான காரியங்களைக் கைப்பற்றிநடக்கவும், அனுவசியமான காரியங்களைத் தள்ளிநடக்கவும் நமக்குத் தைரியமிருக்கவேண்டும். இல்லாவிட்டால் நாம் ஆண்பிள்ளையென்று பிறந்து பிரயோஜனமில்லை. எல்லாவிஷயத்திலும் ஒருவர் கொடுக்கைப்பிடித்து வழிநடப்பதைப் பார்க்கிலும் கண்ணையிழந்து ஒருகோல்பிடித்து நடப்பது விசேஷமாகும்; எத்தகைய புதியவிஷயமாயினும் அதிற்பிரமையும் ஆச்சரியமுமடையக்கூடாது. உலகஇயற்கைகளி லிதுவுமொன்று என்பதை யுணரவேண்டும். அப்படியுணர்கிற ஒருவனுக்குத்தான், சொந்த அறிவும் திடபுத்தியுமிருக்கும். உற்று நோக்குமிடத்து உள்ளபடிக்கொன்றும் ஆச்சரியமில்லை. எதைக்கண்டாலும் ஆச்சரியமடைகிற மனிதர்கள்தான் இந்த உலகத்திற் பேதைகளென்னப்படுவார். அவர் மனம் விரைவில் மாறுதலடைந்து வழக்கமுதலிய படுகுழிகளிலும் பள்ளத்தாக்குகளிலும்போய் விழுகிறது குருட்டு நம்பிக்கையும் மூடபத்தியுமுண்டாகிறது. கடவுள் நமக்குக்கொடுத்திருக்கிற கண்களை வீணுக்காமல் நன்றாகத் திறந்து ஒவ்வொரு விஷயங்களையும், நன்மை, தீமை, கெட்டது, நல்லது, கூடும், கூடாது என்று பகுத்தறிந்து சரியான வழியில், உபயோகமானவழியில் நடக்கவேண்டும். அப்படிச் செய்யாதமனிதர்கள்தான் கண்ணுள்ள குருடர்கள்.

---

# * சங்கங்களாலாகும் நன்மைகள்.

அன்பர்களே!

ஜனசமூகத்துக்கு நன்மையான பலவிஷயங்களைப் பற்றிப்பேசவும், ஆலோசிக்கவும், தீர்மானிக்கவும் பலர் ஒன்று கூடுவதே சங்கமெனப்படும். சங்கங்களாலாகும் நன்மைகள் பலவுளவெனினும்

* இது மதுரை ஸேதுபதி ஐஸ்கூலில் 20-10-12-ல் ஸ்ரீமான் T. C. ஸ்ரீநிவாசய்யங்காரவர்கள் B.A.,B.L. தலைமையின் கீழ்க்கூடிய மாணவர் தமிழ்ச்சங்கத்தின் பதினோராவது வருஷபூர்த்திக்கூட்டத்தில்வாசிக்கப்பெற்றது

அதை நடத்துவோரையும், அபிமானிப்போரையும் பொறுத்ததாகவேயிருக்கும். செவ்வையாகவும் உண்மையாகவும் நடத்தப்பட்டால் சங்கங்களைப் போற் பிரயோஜனமுள்ள காரிய மெதுவுமில்லை. ஒருமனிதன் மற்றொருமனிதனோடு கூடியோசித்து ஒருகாரியத்தைச் செய்யப்புகுந்தால் அக்காரியம் எவ்வளவோ நன்மையாகவும் சிறப்பாகவும் முடிவுபெறுகிறது. ஒருமனிதன்செய்கிற முயற்சிக்கு மற்றொருமனிதன் உதவியாகநின்றால் அவ்விஷயம் எவ்வளவோ பலப்பட்டு நேருகிற இடையூறுகளைத் தாண்டிக் கைகூடுகிறது. தனிமையில் யோசித்து தனித்து முயன்று ஒன்றைச் செய்வதென்றால் அது அசாத்தியமாகவேயிருக்கும். இப்படியே ஒருகுடும்பம், ஒருஊர், ஒருதேசம் ஒன்றுபடாமல் வெவ்வேறு அபிப்பிராயங்களையும் முயற்சிகளையும் உடைத்தாயிருந்தால், மனஸ்தாபம் ஊக்கமின்மை, அதைரியம் முதலியனவுண்டாகி ஒற்றுமை கெட்டு எடுத்தகாரியம் கைகூடாததோடு பிறர் பரிகசிக்கவும் இடமுண்டாகும். இதுபோலவே ஒருமனப்படாமற்செய்கிற சிறிய பெரிய எந்தக்காரியமும் எந்த முயற்சியும் பயனற்றதாகி வீண் கஷ்ட நஷ்டங்கட்கு ஏதுவாகுமென்பதி லையமில்லை. இரண்டொருவர்கூடி, ஆலோசித்துச் செய்கிற காரியங்களே இப்படி நல்ல பயன் தருவதானால் பலர்கூடிச் செய்கிற காரியம் எவ்வளவு பலமாகவும் பிரயோஜனமாகவும் முடிவுபெறுமென்பதைச் சொல்ல வேண்டுமா?

சங்கங்கள் கூடுவதின் முதல் நன்மை ஒருவரையொருவர் அறிந்து கொள்ளுதலாகும். ஒருவரையொருவரறிந்திருப்பதால் எத்தனையோ பலசௌகரியங்களும் உதவியும் உண்டாகின்றன. அதிலும் ஒருவிஷயத்தில் அபிமானமும் விருப்பமுமுள்ள, பலர் ஒன்று கூடுவது எவ்வளவோ பெரிய நன்மையாகும். அதனா லவ்விஷயத்துக்குப் பெரிய அனுகூலமும் சங்கங்கூடும் பொழுதெல்லாம் அளவில்லாத உற்சாகமும் ஏற்படக்கூடும். கல்விகற்றோர் ஒருவரையொருவர் சந்திக்கும்போது "கற்றோரைக் கற்றோரே காமுறுவர்" என்றபடி எவ்வளவோ திருப்தியடைகிறார்கள். அத்தகைய பலர் ஒன்று கூடினால் அவர்களது சந்தோஷத்திற்கு ஒரு அளவுண்டோ?

இப்படியே மதம், ஆசாரம், வர்த்தகம், தொழில், விபசாயம். முதலிய ஒவ்வொருவகையிலும் ஒருமனப்பட்ட பலர் ஒன்று கூடுவதால் அதிகப் பிரயோஜனமுண்டாகிறது. அப்படிக் கூடியவிடத்து அனுவசியமான காரியங்களையும், கைகூடாத காரியங்களையும் பற்றி வீண்காலப் போக்குச்செய்தல் கூடாது. பல அறிஞர்களும் அபிமானிகளும் ஒன்று கூடியிருக்கிற ஒருகாலம் மிக அருமையும் பயனுமுடையது. அந்த அருமையான காலத்தை நிரம்பச் சிக்கனமாக (செட்டாகச்) செலவு செய்யவேண்டும். அப்படிச் செய்யாமல் தற்காலத்தில் நமது நாட்டுச் சங்கங்களின் பெரும்பான்மையான கூட்டங்களில் மனோவாக்குகட்கெட்டாத விஷயங்களைச் செவிக்குள் நுழையாத கடின நடையில் அடிமுடி காண முடியாமல் நீண்டநேரம் பேசிப் பேசியவரை சந்தோஷப்பட்டுக்கொள்வது விசனிக்கத்தக்கது. இப்படி நடத்துவதாற் பயனொன்று மேற்படமார்க்கமில்லை. எந்தவிஷயத்தைப்பற்றிப் பேசினாலும் அது பண்டிதர் பாமரர் யாவருக்கும் விளங்கும்படியாகவும், நம்பிக்கை பிறக்கக்கூடியதாகவும் கைகூடக் கூடியதாகவும் இருக்கவேண்டும். காலத்தையும் நிலைமையையும் கூடியிருக்கிற நோக்கத்தையும் ஆராய்ந்துபேசுவதே பயனுடையதாகும். அனுவசியமான பழங்கதைகளும் அஞ்சத்தக்க ஞான மார்க்கங்களும் பிடிவாதமான ஆசாரங்களும் இக்காலத்துக்குப் பொருந்தியனவல்ல. அத்தகைய விஷயங்களில் நமது ஜனசமூகத்துக்குத் தற்காலத்தில் வெறுப்பும் அசிரத்தையும் முண்டாகியிருப்பதாற் பேசும்போது கேட்கவருபவர் சிலரேயாகின்றனர். அதனால் சங்கங்கள் நீண்ட ஆயுளைப் பெறுவதும் கஷ்டமாகிறது. ஆதலின் பரோபகாரிகளான பண்டிதர்கள் தற்சமயத்துக்கு உபயோகமான விஷயங்களை எளியநடையிற் பேசவேண்டும். அப்படிப் பேசப்படுகிற விஷயம் முதலில் அங்கு கூடியிருக்கிற எல்லோர்மனதிலும் பதிந்து அபிமானமுண்டாகி ஊக்கமேற்பட்டு கைகூடத்தக்க முயற்சிக்கும் வழியேற்படக்கூடும். "முயற்சியுடையோர் இகழ்ச்சியடையாரென்றபடி" எந்த விஷயமும் முயன்றால் கைகூடுமென்பதைச் சுருதி, யுக்தி, யனுபவங்களால் நாமறிந்திருக்கிறோம்.

இப்படிச் சங்கங்கள் கூடுவதும் பிரசங்கிப்பதும் நமது இந்தியா தேசத்தில் தொன்று தொட்டு இருந்த வழக்கமென்பதைப் பழைய தமிழ்ச்சங்கங்களாலும் மணிமேகலை முதலிய நூல்களாலும் நாமறியக்கூடும்.

> "தண்மணற் பந்தரும் தாழ்தரு பொதியிலும்
> புண்ணிய நல்லுரை யறிவீர் பொருந்துமின்
> ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்
> பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின்"

என்று, மணிமேகலை விழாவறை காதையிற் கூறியிருத்தலால் அக்காலத்திலும் இத்தகைய சங்கங்களின் பயனை நமது தேசத்தார் அறிந்திருந்தார்களென்பதிலையமில்லை. ஆனாலும் இடைக்காலத்தில் கையாடப் படாமல் மறந்தே போயிற்றென்னலாம். இப்போது எங்குபார்த்தாலும் சங்கங்களும், சபைகளும், கூட்டமுமாகவே காணப்படுகின்றன. இது நமது புராதன வழக்கத்தைப் பின்பற்றி நடைபெறுகிறதென்பதைப்பார்க்கிலும் முக்கியமாக மேனாட்டாரைப் பின்பற்றியே நடைபெறுகிற தென்று சொல்ல விரும்புகிறேன். மேல்நாட்டார் பெரிய பெரிய காரியங்கள் முதற் சிறிய காரியங்கள் வரையில் ஒவ்வொரு காரியத்துக்கும் தங்கள் தங்களுக்குள் ஒரு சங்கமுண்டாக்கி அதை மிக்க அபிமானமாகவளர்த்து அதற்குக்கட்டுப்பட்டு நடந்து அதனால் நல்ல நல்லபிரயோஜனங்களை யடைந்து வருகிறார்கள். அவர்களுள், வியாபாரிகள், தொழிலாளிகள், விபசாயிகள், வக்கீல்கள், உபாத்தியாயர்கள், பத்திராதிபர்கள், வேலையாட்கள் இன்னும் ஒவ்வொருவகுப்பாரும் தனித் தனி தங்கட்குள் சங்கமேற்படுத்தி அதன் ஆலோசனைப்படி எதையும் செய்து கட்டுப்பாடோடு நடந்துவருவதால் அவர்கள் எந்த விஷயத்திலும் பெருமையும், லாபமும் பெற்று வருகிறார்கள். அவர்கள் சங்கங்களையும் அதிற் பேசப்படுகிற விஷயங்களையும் அலக்ஷியஞ் செய்யாமல் நல்லமதிப்புவைத்து நடப்பதால் அவைகள் மிகுந்தசிறப்பையும் கௌரவத்தையும் பெற்று நீண்ட ஆயுளோடு நடைபெறுகின்றன. அவர்களைப்பின்பற்றி நமது நாட்டார் சங்கங்கள் ஸ்தாபிப்பதும் பேசுவதுமன்றி அவர்களைப்போல் மதிப்பு வைப்பதும் அதன்

ஆலோசனைக்கிணங்க நடப்பது மில்லையென்பது என்னபிப்பிராயம். அப்படி நடைபெறுவதில் அதிக நன்மை பெறமுடியாது. முக்கியமாக இப்போது நமது நாட்டுச் சங்கங்கள் கல்வி சம்பந்தமாகவும், மத சம்பந்தமாகவும் ஆசார சம்பந்தமாகவும் ஏற்பட்டு நடைபெறுகின்றன. ஒருதேசம் முன்னேற்ற மடைவதற்கு முதற்படியி லித்தகைய விஷயங்களே உபயோகமானவை யென்பதி லையமில்லை. மனிதர்கட்கு வேண்டிய எல்லா நன்மைகட்கும் கல்வியே உதவியானது. கல்வி விருத்தியில்லாத தேசம் எவ்வழியாலும் நன்மைபெற மார்க்கமில்லை. உதாரணமாக இரயில் மோட்டார்க்கார் முதலிய விரைந்து செல்லுகிற சாதனங்களைப் பாருங்கள், அதிக தூரமான ஊர்களையும் தங்கள் வேகத்தால் சமீபமாக்கி விடுகின்றன. அதுபோலவே கல்வியானது தனது அளவில்லாத வல்லபத்தால் மதங்களாலும் ஜாதிகளாலும் அதன் உட்பிரிவுகளாலும் மற்ற பல காரணங்களாலும் ஏற்படுகிற வேற்றுமைகளையும் அறியாமை, பொறாமை முதலிய தியகுணங்களையும் கடந்து ஜன சமூகத்தை ஒன்றுபடுத்தி விடுகிறது. ஆகவே கல்வியபிவிருத்தி செய்கிற நோக்கத்தோடு முதலில் நமது சங்கங்க ளேற்பட்டு நடைபெறுவது மிகவும் கொண்டாடத்தக்கது. அத்தகைய உபயோகமான சங்கங்களுள் இம்மானவர் தமிழ்ச்சங்கமும் ஒன்றென்பதைப்பற்றி நான் பெரிதும் சந்தோஷமடைகிறேன். இனி மறுமைப் பயனை நோக்குமிடத்து மத சம்பந்தமான சங்கங்களும் நிரம்ப அவசியமேயாகும். ஆனால் அச்சங்கங்கள் தற்காலத்தில் நடைபெறுகிற முறைமட்டும் திருப்திகரமாக இல்லை. அன்னியமத தூஷணை, வீண் சண்டை, வம்புவாதங்களில்லாமல் நடைபெற்றால் நல்ல பயனை யுண்டாக்குமென்பதி லையமில்லை.

"பற்றுமாக்க டம்முட னாயினும்
செற்றமும் கலாமுஞ் செய்யா தகலுமின்"

என்பதை நமது சமயவாதிக ளுணர்ந்து சண்டையும், வம்பும், மறுப்பும், மறுப்புக்கு மறுப்பும், நிந்தையும், தூஷணையும் செய்யாமல்

ஒற்றுமையும் பொறுமையும் உடையவர்களாய் டம்பத்துக்கும் பட்டத்துக்கு மாசைப்படாமல் மதவிஷயத்தில் உண்மையாக உழைப்பார்களானால் மதாபிவிருத்தியும் தேசத்து நன்மையும் உண்டாகும். அப்படியில்லாமல் தற்காலத்தில் நடைபெறுகிற முறை சீர்கெட்டிருப்பதால் முதல் வருஷத்தில் இருந்த அபிமானமும் ஊக்கமும் அடுத்த வருஷத்தி லில்லாமல் நாளடைவில் குறுகிவிடுகிறது. சில வருஷங்கள் சென்றதும் மறைந்தே போய்விடுகிறது. இப்படித் தோன்றி மறைந்த சபைகட்கும் சங்கங்கட்கும் அளவில்லை. ஆதலின் மத சம்பந்தமான சபை நடத்துகிற அறிஞர்களும் அத்தகைய சபைகளிற் பேசும் வித்துவான்களும் மனத்தாபங்கட்கும் கலகங்கட்கு மிடமில்லாமல் சாஸ்திர யுக்தமாகவும் நடுநிலைமையோடும் நடைபெறும்படி நடந்துகொள்ள வேண்டும். இனி, ஆசார சீர் திருத்த சம்பந்தமாக சங்கங்கள் நடைபெறுவது தற்காலத்தில் நமது தேசத்துக்கு மிகவும் அவசியமாகும். நமது புராதன ஆசாரங்கள் நல்லமுறையோடு ஏற்பட்டிருக்கின்றன வெனினும், தற்காலத்துக்குச் சில பொருந்தியனவாக இல்லை. அதனால் அநேக கஷ்டநஷ்டங்கள் அனுவசியமாக ஏற்படுகின்றன. அவைகளைத் திருத்தி இக்காலத்துக் கேற்றபடி சௌகரியமாகச் செய்துகொள்ளுவதற்கு ஆசார சீர் திருத்த சங்கங்கள் ஒவ்வொரு இடங்களிலும் ஏற்பட்டு நல்ல வேலை செய்யவேண்டும். அதனால் அநேக நன்மைகளை நாம் எதிர்பார்க்கலாம். இதை நன்குணர்ந்தே உண்மைத் தேசாபிமானிகளும் மேதாவிகளும் இது விஷயத்தில் பெரும்பாடுபட்டு உழைத்து வருகின்றனர். இவைகளில் நின்றும் வர்த்தக சம்பந்தமாகவும், தொழில் சம்பந்தமாகவும், விவசாய சம்பந்தமாகவும் பல சங்கங்கள் ஏற்பட்டு நடைபெறவேண்டும். இப்படிப் பலவகையிலும் நல்ல நோக்கத்தோடு நமது நாட்டார் முயன்றால் சிறிது காலத்துள் மேலான நாகரீகத்தையும் செல்வத்தையும் பெற்றுக் கீர்த்திபெறுவதிலையமில்லை. அன்பர்களே! இவ்விஷயங்களை இன்னும் சற்று விளக்கமாகப் பேசுவதற்குக் காலம் போதாமையால் இம்மட்டோடு முடித்துவிடுகிறேன்.

---

# *தமிழ் மொழியும், நாகரீகமும்.

அன்பர்களே!

இந்தச் சைவ சபைக் காரியதரிசியவர்களால் நான் திருக்குற்றாலத்திலிருந்து அழைக்கப்பட்டு கற்றுணர்ந்த உங்கள் முன்னிலையிற் பேசப்போகிற விஷயத்துக்குப் பெருமையுண்டென்றால் அது உங்களாலேயே ஏற்பட்டதாகும். ஏனெனின் இலக்கண இலக்கிய நூல்களையாவது சமய நூல்களையாவது நான் முறையாகப் படித்தவனல்லன். படிப்பு சம்பந்தமில்லாமல் லௌகிக விஷயமாக விரித்துப் பேசுவதற்கு நான் ஆண்டிலும் அநுபவத்திலும் இளமையுடையவனாக யிருக்கிறேன். ஆனால் பொது விஷயங்களும் பொது நன்மைகளும் சிறப்படையவேண்டுமென்றும், நமது நாட்டிற் கல்வியும் நாகரீகமும் விருத்தியடையவேண்டுமென்றும், தொழில்களும் வியாபாரங்களும் பெருகவேண்டுமென்றும் நான் மனப்பூர்வமாகவும் உண்மையாகவும் விரும்புகிறேன். இடைவிடாத அந்த விருப்பமே இத்தகைய அறிவும் கௌரவமும் நிரம்பிய கூட்டங்களின் முன்னும் பேசத் துணிவு உண்டாக்குகிறதேயன்றி வேறு காரணமெதுவுமில்லையென்று நான் உள்ளபடி சொல்லுகிறேன். ஆதலின் சகோதரர்களே! குறித்த விஷயத்தைப்பற்றிப்பேசுவதில் ஏற்படும் குற்றங்களை நீக்கி ஏதாவது சிறிது குணமிருப்பதைமட்டும் நீங்கள் அங்கீகரிக்கவேண்டும்.

(தமிழின் பெருமை.)

தமிழ்மொழியென்பது முக்கியமாக நமது சென்னை ராஜதானியின் தென்பாகத்திலும், யாழ்ப்பாணத்திலும், பிறவிடங்களிலும் இரண்டுகோடி ஜனங்கட்கு அதிகமாகவே பேசப்படுகிற ஒருதேசபாஷையாகும். இந்தத் தமிழ்ப்பாஷை பிர்ம்ம சிருஷ்டியுண்டான பொழுதே யுண்டான ஒரு பழமையானதும் பெருமையுடையதுமான தனிப்பாஷையேயாம். இது வேறெந்தப் பாஷையிலுமிருந்து பிறந்த புதுப்பாஷையன்று. ஆரியர் வடநாட்டிலிருந்து வருமுன்னர் நமது தென் தேசத்திலிருந்த பூர்வ குடிகள் கலப்பற்ற தமிழர்களேயாம். அவர்கள் பேசியதும் செந்தமிழேயாகும். இதற்குச்

* 21—7—12ல் பாளையங்கோட்டை சைவ சபையில் ஸ்ரீமத் C. P. சுப்பையா பிள்ளை B. A. அவர்கள் தலைமையின்கீழ்ச் செய்த பிரசங்கம்.

சான்ருக அக்காலத்தில் தனித்தமிழிலே ஏற்பட்ட ஞான சாஸ்தி ரங்களும், இதிகாசங்களும், இலக்கண நூல்களும் இன்றைக்கும் நமது கையிலிருந்துகொண் டிருக்கின்றன. இவற்றுட் பெரிதும் முதுமையுடையது, இயற்றமிழின் ஐந்திலக்கணமும் அமைந்த தொல்காப்பியமென்று அறிகிருேம். இன்னுமிதைப் போன்ற பழைய நூல்களும் வேறு பாஷைச்சொற்கள் ஒன்றேனும் கலவாமல் தனித்தமிழ்ச் சொற்களாகவே அமைந்திருக்கின்றன. அவற்றுட் சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம்,மணிமேகலை, புறநானூறு, பத்துப் பாட்டு முதலியன முக்கியமானவையாகும். இன்னும் தேவார திரு வாசக திருவாய்மொழிகளான வேதங்களும் தமிழ்ப்பாஷையிலிருக் கின்றன வென்ருல் தமிழ் மற்ருெரு பாஷையிலிருந்து பிறந்ததென் ருவது மற்றப் பாஷையின் ஆதாரவாற் சிறந்ததென்ருவது எப்படிச் சொல்லலாம்? தமிழ்ப்பாஷையின்பெருமையைப்பற்றிக் கூறுமிடத்து அதைப்போல அருமையும் இனிமையுமான பாஷை வேறெதுவும் இல்லை. தமிழ்ப்பாஷையி லிருப்பதுபோல உருக்கமும் ரசமும் நிரம்பிய செய்யுட்கள் வேறெந்தப் பாஷையிலுமில்லை யென்று அன் னியர்களே ஒப்புக்கொள்ளுகிருர்கள். தமிழ்ப்பாஷையைப்பற்றி காலஞ்சென்ற ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி ஐயரவர்கள் ஒருகாலத்திற் பேசியபோது இதைப்போல் இனிமையான பாஷை வேறெதுவும் இல்லை யென்றுசொன்னூர்கள். அவர்கள் வடமொழியில் அதிகப் பற் றுடையவரும், வடமொழிக் கலாசாலையொன்று ஸ்தாபித்தவரும், அறிவு நிரம்பிய பண்டிதருமென்பது யாருமறிந்த விஷயம். ஆனல் தமிழர்கள் சமீப காலம்வரையிற் பெரும்பாலும் செய்யுட் செய்கிற ஆற்றலே மிகுதியுடையவர்களாக இருந்தார்கள். அதனல் செம் பிரமானதும் விளக்கமானதுமான வசன நடைகளமைந்த நூல்கள் அதிகமாக இல்லை. அந்தக் குறையையும் ஸ்ரீலஸ்ரீ சிவஞான சுவாமி களும், ஆறுமுக நாவலரவர்களும், அவர்கட்குப் பிற்பட்ட சிலரும் ஒருவாறு நீக்கினுர்கள். என்ருலும் அக்குறை இன்னும் முழுதும் நீக்கப்படவில்லை. இதைத்தவிர வேறுகுறை யொன்றுமில்லை. தமிழ்ப்பாஷை மற்றெந்தப் பாஷைகளிலிருந்தும் எதையும் எதிர் பார்த்திருக்கவில்லை. ஆகவே நமது தமிழ்ப்பாஷை தனிமையான ஒரு பாஷையென்பதையும், பெருமையுடைய தென்பதையும்

யாவரும் ஒப்புக்கொள்வதில்லையமில்லை. ஒப்புக்கொள்ளா விட்டாலும் மற்றப் பாஷைகளிலிருந்து பிறந்த தென்றாலும் மற்றப் பாஷைகளாற் சிறந்ததென்றாலும் நாம் அதைப் பொருட்படுத்தி அதற்காக வம்புபேசாமலும் வாதிடாமலும் தற்காலத்தில் மிகவும் தளர்ந்திருக்கிற அந்தப்பாஷையை முன்னுக்குக்கொண்டு வருவதில் முயற்சியெடுத்துக்கொள்வது நலமாகும்.

(தமிழின் நிலைமை.)

எந்தப் பாஷையையும் இராஜாங்கத்தார் அங்கீகரித்தாலன்றி அது அவ்வளவு விருத்தியடையமாட்டாது. ஆங்கிலக் கலாசாலைகளில் உப பாஷையாக இருந்து வந்ததையும் சமீபத்திலெடுத்துவிட்டார்கள். அதைப்பற்றி முயன்று எப்பொழுதுமிருக்கும்படி செய்வதில் நாம் பிரயாசைப்பட வேண்டும். அதற்கு ஆங்கிலங்கற்ற தமிழர்கள் முன்னிற்கவேண்டும். ஆங்கிலங்கற்ற தமிழர்களைப்பற்றி நாம் என்ன சொல்வது! அவர்கள் தமிழிற் பேசவும் வெட்கப் படுகிறார்கள். தமிழ்ப் புத்தகங்களையாவது பேப்பர்களையாவது படிக்கவும் வெட்கப்படுகிறார்கள். பாஷைக்குச் சொந்தக்காரர்கள் தாய்ப் பாஷையைப் பேசவும் எழுதவும் படிக்கவும் வெட்கப்பட்டால் அந்தப் பாஷை முன்னுக்கு வரவில்லை யென்று பிறரைக் குறை கூறுவ தெப்படி?

ஆங்கிலம் கற்ற தமிழர்களுட் சிலர் தமிழ் தங்கட்கு நன்றாகப் பேசத்தெரியாதிருப்பது பெருமையென்று கருதி அதற்காகவே தமிழ்பேசும்போது அனாவசியமாகப் பாதிக்குப்பாதி இங்கிலீஷ் வார்த்தைகளைக்கலந்து பேசுகிறார்கள். உதாரணமாக (Sir) "சார் உங்கள் (Son) சன்னுக்கு (Marriage) மேரியேஜ் நடக்கிறதாமே" என்றும் அதற்குப்பதில் (Yes Yes) "எஸ்ஸெஸ் உண்மைதான் (Monday) மண்டேயில் ஆரம்பம்" என்றும் பேசிக்கொள்ளுகிறார்கள். என்ன அழகு பாருங்கள்! "ஐயா! உங்கள் பிள்ளைக்குக் கல்யாணமாமே" என்று கேட்டாலென்ன? "ஆமாம் உண்மைதான். திங்கட்கிழமை ஆரம்பம்" என்று பதிற்சொன்னாலென்ன? மண்டையில் நடக்கிறது தலையில் நடக்கிறதென்று பேசுவதுதானா அழகு?

உள்ளபடிக்கு ஆங்கிலம் கற்றவர்கள்தான் இப்படிப்பேசுகிறார்களோ எனின், இல்லை. இங்கிலீஷ் அக்ஷரம் தெரியாதவர்களும் அவர்களைப்பார்த்து மயிலைக்கண்டு வான்கோழி ஆடுவதுபோல் காதிற்பட்ட சொற்களை அப்படியப்படியே உளறுகிறார்கள். இதனாலன்றோ நமது அருமையான தமிழ்ப்பாஷை வரவரப் பெருமைகுன்றி வருகிறது. கல்கத்தா, பம்பாய் முதலிய வடநாடுகளில் ஆங்கிலம் கற்ற பெரிய பெரிய பண்டிதர்களும் தங்கள் வீடுகளிலும் சுற்றத்தாரிடத்திலும் பேசுவது சுயபாஷைதான். சுயபாஷையிற் புத்தகங்கள் எழுதவும், பிரசங்கிக்கவும், சுயபாஷைப் பத்திரிகை புத்தகங்களைப் படிக்கவும், பெரிதும் விருப்பமுடையவர்களாக இருப்பார்கள். அப்படி வளர்த்தாலன்றோ பாஷை விருத்தியடையும்? ஆனால் ஆங்கில வார்த்தைகளைக் கலந்து பேசவே கூடாதென்று நான் சொல்லவில்லை. அனுவசியமாக வேண்டுமென்றும் அதிற் பெருமையுண்டென்றும் நினைத்துப் பேசவேண்டியதில்லையென்று சொல்லுகிறேன். முக்கியமான சொற்களையிட்டுப் பேசலாம். கூடியவரை தமிழ்ச் சொற்களாலேயே பேசுவது நிரம்ப அழகாக இருக்கும். அல்லது தனி இங்கிலீஷாகப் பேசுவது நன்றாயிருக்கும். பழைய தமிழ்ப்பாஷைக்கும் இப்போதுள்ள தமிழ்ப்பாஷைக்கும் மிகுந்த வித்யாசமிருக்கிறதென்பது யாருமறிந்த விஷயம். இப்போதுள்ள தமிழ்ப்பாஷையில் இங்கிலீஷ், இந்துஸ்தான், அராபி, உருடு முதலிய பல பாஷைச் சொற்களும் கலந்து வழங்கப்படுகின்றன. இவைகளெல்லாவற்றையும் நீக்கித் தனித் தமிழாக அதன் பூர்வ நிலைக்குக் கொண்டுவருவது மிகவும் அசாத்தியம் என்றாலும் உள்ளமட்டில் மறந்துபோகாலும் இன்னும் கலந்து கெடுக்காமலும், இருப்பதை விருத்தியடையச் செய்தாற் போதுமானது. அப்படி விருத்தியடையச் செய்வதுதான் இப்போது நமது தமிழர்களின் முக்கிய நோக்கமாகவும் முயற்சியாகவுமிருக்கவேண்டும். (தமிழ்விருத்திக்குற்றவழிகள்) இதற்குக் கற்றவர்கள்தான் பொறுப்பாளிகள். அவர்கள் உண்மையாகப் பாடுபடவேண்டும். பிரசங்கிகள் கல்வி விருத்தி விஷயமாகவே பெரும்பாலும் பிரசங்கிக்கவேண்டும். நூலாசிரியர்கள் எளிய தமிழ் நடையில் விளக்கமாக யாவருக்கும்(பண்டிதர் பாமரர்க்கும்)பயன்படும்படி தொழிற்படிப்புக்குற்ற நூல்களையும் முயற்சி ஒற்றுமை திருத்தம்

முதலியன விருத்தியடையச் செய்வதற்குற்ற நூல்களையும் அதிக
மாக எழுதவேண்டும். மடாதிபதிகளும் ஜமீன்தார்களும் பிரபுக்க
ளும் கல்வி விருத்திக்கு ஏராளமான திரவிய சகாயம் செய்யவேண்
டும். முக்கியமாகத் தமிழ்ப் பத்திரிகைகளை எல்லோரும் வாங்க
வேண்டும். இந்த முயற்சியெல்லாம் பயன்படும்படி நமது தேசத்
திற் கட்டாயக் கல்வியைச் சட்டமாக்கும்படி செய்வதில் ஸ்ரீமான்
கோபாலகிருஷ்ண கோகலே யவர்களைப்போன்ற உத்தம தேசாபி
மானிகளோடு மற்ற கௌரவஸ்தர்களும் ஒத்துழைக்கவேண்டும்.
இப்படி அபிமானத்தோடு ஒவ்வொருவரும் ஒவ்வொரு வழியில்
நின்று முயன்றால் நமது பாஷையும் தேசமும் விருத்தியடைந்து
முன்னுக்கு வருமென்பதில் ஐயமில்லை. நமது பிரசங்கிகள், பண்டி
தர்கள் கூடிய சபையிலன்றி சாதாரண ஜனங்கள் முன்னின்று அவ
ர்களின் மனோவாக்குகட் கெட்டாதபடி ஞானம், யோகம், முக்தி,
மோக்ஷம், முப்பொருளுண்மை, தானே பிரமம் என்ற அரிய பெரிய
விஷயங்களைப்பற்றிப் பேசுவது அவர்களின் சாமர்த்தியத்தைக் காட்
டுகிறதேயன்றி ஜனங்களின் நன்மைக்கு உபயோகமானதாக மாட்
டாது. அவர்கள் தங்கள் முன்னிருக்கிற ஜனங்கள் எப்படிப்பட்ட
வர்களென்று நினையாமற் பேசுவது எப்படியிருக்கிறதென்றால்
இந்தத் திருநெல்வேலியிலிருந்து மதுரைக்குப் பாதை கேட்கிற
ஒருவனுக்கு பாலத்திலிருக்கிற ரயில்வே ஸ்டேஷனைக் காட்டாமுன்
மதுரை மேலமாசி வீதியிலிருந்து வழி சொல்வது போலிருக்கிறது.
இதிலென்ன பிரயோஜனம்? இப்படியில்லாமல் நமது பிரசங்கிகள்
சாதாரண ஜனங்களின் முன் சாதாரண விஷயங்களான கல்வி,
ஒழுக்கம், தொழில், வியாபாரம், ஆசாரம், சீர்திருத்தம், சுகாதாரம்
முதலிய விஷயங்களைப்பற்றி எளிய நடையிலும் பண்டிதர்கள் முன்
னிலையில் அரிய பெரிய விஷயங்களைப்பற்றி உயர்ந்த நடையிலும்
பிரசங்கிப்பது மிகுந்த பயன் தருவதாக இருக்கும். அது அவர்
கட்கும் கௌரவமாக இருக்கும். இரண்டாவது நூலாசிரியர்கள்
அறிவு விருத்திக்கேதுவான பல வசன நூல்களையும் தொழில் முறை
களைப்பற்றிய நூல்களையும் விவசாய சம்பந்தமான நூல்களையும்
ஆசாரம் ஒழுக்கங்களைப்பற்றிய புது முறைகளைத் தழுவிய நூல்களை
யும் உண்மையான சரித்திரங்களையும் ஏராளமாக எழுதவேண்டும்.

தமிழ்ப்பாஷையில் ஆத்மார்த்தமான சமய நூல்களும், ஞான நூல்களும், நீதி நூல்களும் கடல்போல வேண்டுமென்ற வரையிலிருக்கின்றன. அவைகளை நன்ருகப் படிப்பதற்கே மனித ஆயுள் போறுமானதாக இல்லை. அப்படியிருக்க இன்னும் அத்தகைய நூல்களையே எழுதியும் பாடியும் கொண்டிருப்பது உபகாரமான காரியமன்று. ஆனல், அவற்றுள் அச்சுக்கு வராமல் மறைந்து கிடக்கிற நூல்களை யச்சிட்டு வெளியிடுவது மிக்க நலமாகும். அப்படிச் செய்தவர்களுள் ஸ்ரீலஸ்ரீ சிவஞான சுவாமிகளும், ஆறுமுக நாவலரவர்களும் மகாமகோபாத்தியாயர் சாமிநாதய்யரவர்களும், இன்னும் சிலரும் குறிப்பிடத் தக்கவர்கள். அவர்களைப்போற் பெரிய எண்ணமுடைய உத்மர்கள் இன்னும் சிலராவது இருக்கவேண்டும். நமது தமிழ்ப்பாஷையில் மட்டுமன்று. நமது இந்தியா தேசத்திலேயே புதிகாக ஞான நூல்கள் செய்யவேண்டுவது அனுவசியமென்று சொல்லுகிறேன். ஏன்? அந்த வகையில் எந்தத் தேசமும் நமது தேசத்துக்கு நிகராகமாட்டா. மற்றத் தேசத்தார் ஞான நூல்கள் வேண்டுமானல் அதை இந்தியாவிலிருந்து தான் பெறவேண்டும். மேனுட்டுத் தத்துவ சாஸ்திரிகள் என்று நாம் புகழ்ந்து பேசுகிற பெரியோர்களெல்லாம் ஞான நூல்களை நமது தேசத்திலிருந்தே பெற்றுப் படித்தும், மொழிபெயர்த்தும், பெருமை பெற்றூர்களென்பது யாருமறிந்த விஷயமாகும். ஆனல் ஜீவியகாலம் வரையில் வயிற்றுப் பிழைப்புக்குற்ற தொழிற்படிப்பு, வியாபாரமுறை, சுகாதாரமுறை முதலியவைகளை நமது தேசத்தார் இப்போது மேனுட்டாரிடமிருந்து கற்றுக்கொள்ளவேண்டுமென்பதை நாம் ஆக்ஷேபிக்க முடியாது. மனித வாழ்வுக்கு முதலிற் பிழைப்புக்குற்ற அறிவும் பிறகு ஞானமும் வேண்டியதாகும். ஆகவே முதற்படியில் நாம் மேனுட்டாரை யெதிர்பார்க்கவேண்டிய நிலைமையிலிருக்கிறேம். ஆதலின் ஆங்கிலம் கற்ற நமது நூலாசிரியர்கள் லௌகீக சம்பந்தமாகத் தாங்கள் கற்றவைகளை எளிய தமிழ் நடையில் விளக்கமாக எழுதி வெளியிட்டுப் பாஷைவிருத்திக்கும் தொழில் முதலியன விருத்தியடைதற்கும் உதவும்படி செய்யவேண்டும். தமிழ் வித்துவான்கள் லௌகீக சம்பந்தமான அறிவு விருத்திக்குற்ற நூல்களை யெழுதி வெளியிடவேண்டும். இதனுல் பிரசங்கிகளும் நூலாசிரியர்களும் வைதீக சம்பந்தத்தை

விட்டு விடவேண்டுமென்பதன்று. அது சிறுபான்மையும் லௌகிகம் பெரும்பான்மையுமாக இருக்கவேண்டும். அப்படியிருக்க வேண்டியது தான் இப்போது நமது நாட்டுக்கு அவசியமாகும். லௌகிக சம்பந்தமான பிரசங்கங்களும், நூல்களும், சாதாரண ஜனங்களை முன்னுக்குக் கொண்டுவரக்கூடும். சாதாரண ஜனங்கள் முன்னுக்குவந்தாலன்றி தேசம் க்ஷேமமடைய முடியாது. தேசநன்மைக்குதவாத எந்த முயற்சியும் எந்தச் சிரமமும் பயன்றரத்தக்கனவல்லவென்று நான் உறுதியாகச் சொல்லுவேன். இனி இத்தகைய பொது விஷயங்கட்குப் பாடுபடுகிற உத்தமர்களான வித்துவான்களையும், அவர்கள் செய்கிற முயற்சிகளையும் ஆதரிப்பது மடாதிபதிகள், ஜமீன்தார்கள், பிரபுக்கள் முதலிய பொருட் பெருக்குள்ளோரின் கடமையாக இருக்கவேண்டும். ஆனால், தற்காலத்தில் நமது நாட்டில் அப்படியில்லையென்பது தான் பெரிதும் விசனிக்கத்தக்கது.

## மடாதிபதிகள்.

மடாதிபதிகள் மதங்களையோ, பாஷைகளையோ விருத்திசெய்ய முழுதும்கடமைப்பட்டவர்கள். மற்றவர்களைப்பற்றி நாமப்படிச் சொல்லமுடியாது. பொது நன்மைக்காகவே தாங்கள் தங்கள் வாழ்வை வெறுத்துத் துறவுபூண்டு மடாலயங்கட்குள்ள திரண்ட பொருள்கட்கு அதிபதியாகிறார்களேயன்றி அந்தச் சொத்துக்கள் அவர்கள் பாட்டன் பூட்டன்கள் தேடிவைத்தவையல்ல. பாட்டன் பூட்டன் தேடிவைத்த குடும்பங்களின் பொருள்களேயானாலும் அதிகமாக வைத்திருப்பவர்கள் பொதுவிஷயங்கட்குச் செலவுசெய்ய வேண்டுமென்று நாம் வற்புறுத்தும்போது பொதுச்சொத்துக்களைப் பொது நன்மைக்குச் செலவு செய்யாத அதிபதிகளைப்பற்றி நாம் கூறவேண்டியது பெருங் குறையாகவன்றோ இருக்கிறது. ஆதியில் மடங்கள் ஏற்பட்ட பொழுது அது தொழில்களையாவது வியாபாரங்களையாவது பெருக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு ஏற்படவில்லை யென்பது உண்மையே என்றாலும், பாஷையையும் மதத்தையும் விருத்தி செய்கிற நோக்கத்தோடு ஏற்பட்டதென்பதிலையமின்றன்றோ? இப்பொழுதும் நாம் அந்த நன்மையைத்தான் மடாதிபதிகளிடமிருந்து எதிர்பார்க்கிறோமேயன்றி தொழில்களைப் பற்றியாவது வியாபாரங்

களைப்பற்றியாவது அவர்களை எதிர்பார்க்கவில்லை. தற்கால மடாதிபதிகள் தங்கள் கடமையை முற்றும் மறந்திருக்கிறார்களென்பதிலையமில்லை. சாதாரண குடும்பிகள் எந்தெந்த இன்பங்களைப் பெரிதென்று கொண்டு அனுபவிக்கிறார்களோ, அந்த அனுபவங்களில் ஒருபடியேனும் மடாதிபதிகளான துறவிகள் பின்னிற்கவில்லை. ஆனால் அது ஒரு பெரியகாரியமென்றும் அந்த இகபோகங்களை வெறுத்த ஒரு உத்தமத்துறவி இக்காலத்திலகப்படுவது மிக அருமையென்றும் அகப்பட்டாலும் அம்மகான் மடாதிபதியாகச் சம்மதிக்க மாட்டாரென்றும் நாமறிவோம். ஆதலின் மடாதிபதிகள் தங்கள் சரீர சௌக்கியத்துக்குற்ற எந்தச் சௌகரியங்களையும் இழக்கவேண்டாம்.

இன்னும் அவர்கள் ஒரு குடும்பியாக இருந்து இல்லற தர்மத்தை ஒழுங்காக நடத்திக்கொண்டிருந்தாலும் நமக்குச் சம்மதந்தான். ஆனால் அவர்கள் பொது நன்மைகளைக் கவனிப்பவர்களாகவும் ஆதரிப்பவர்களாகவும் அதற்கே உழைப்பவர்களாகவும் இருக்க வேண்டும். அந்த உத்தமகுணங்கள் இருக்குமானால் அவர்கள் இகபோகங்களை யனுபவிப்பதைப்பற்றி நாம் குறைகூறவேண்டிய அவசியமில்லை. அதில்லாமல் வெளித்துறவு பூண்டு வேஷமிட்டு டாம்பீகமாகவும் பார்த்தோரதிசயிக்கவும் இருப்பதால் என்னபயன்? அது யாருக்கு எந்த நன்மையைச் செய்யும்? அவர்கட்கே ஆத்மார்த்தமான நன்மைக்கேதுவுண்டா? ஒன்றுமில்லை. ஆதியிலே இருந்த மடாதிபதிகளான மகான்கள், இல்லத்துறவும் உள்ளத்துறவுமுடையவர்களாகவிருந்து எத்தனையோ நன்மைகளைச் செய்தார்கள். இக்காலத்தவர், அப்படியிருக்க சாத்தியமில்லாவிட்டாலும் சாதாரண மனிதர்களுட் பெரிய மனிதர்களாக இருந்து தங்கள் கடமையை விடாமற் செய்யக்கூடாதா? ஒருவரிருவர் உத்தமர்களாக இருப்பவரும் கல்வி விஷயத்திலாவது மதவிஷயத்திலாவது உண்மையாகவும் அக்கரையாகவும் பாடுபடுவதில்லை, அவர்களும் தற்காலத்துக்கு அனுவசியமான வழியில் வீண் செலவைப் பெருக்கி ஜனங்கட்குப் பொருள் நஷ்டத்தையும் அதிருப்தியையு முண்டுபண்ணாமலிருக்கவில்லை. ஆகவே தற்சமயம் நாம்நமது குறையையெல்லா மடாதிபதிகளின்பேரிலும் தாக்கி முறையிடவேண்டியதாக நேர்ந்திருக்கிறது

நமது தேசத்தில் மடாதிபதிகட்குள்ள மதிப்பும் செல்வாக்கும் எத்தகைய பிரபுவுக்கும் தேசாதிபதிகட்குமில்லை. பிரபுவுக்கு, செலவு செய்தவரையிற் பெருமையும் செல்வாக்குமிருக்கும். தேசாதிபதிகட்கு தங்கள் பூமி எவ்வளவு விஸ்தீரணமிருக்கிறதோ அந்தமட்டிற்றான் செல்வாக்கும் அதிகாரமுமிருக்கும். ஆனால் மடாதிபதிகட்கோ சென்றவிடமெல்லாம் சிறப்பும் செல்வாக்கும் உயர்வும் பெருமையுமிருக்கும். மேலும் மடாதிபதிகளிடத்தில் ஜனங்கள் பயபக்தியாக நடப்பதுபோல ஒரு தேசாதிபதியிடமும் நடக்கமாட்டார்கள், தேசாதிபதியின் அதிகாரத்துக்குப் பயந்து பணிகிற ஜனங்கள் மடாதிபதியிடம் அன்பாகப் பணிவார்கள். பண்டைக்கால முதற்கொண்டே நமது ஜனங்கள் மடாதிபதிகளிடம் பெருமதிப்பு வைத்து அவர்கள் வாயிலிருந்து வருவதெல்லாம் வேதவாக்கென்று நம்புகிறார்கள். அவர்களைத் தெய்வமென்றும் அவதாரபுருஷர்களென்றும் கருதுகிறார்கள். இப்படியெல்லாம் உண்மையாக நம்புகிற ஜனங்களின் க்ஷேமத்தைக் கருதாமல் உலகவாழ்வென்னும் நித்திரையிற் கனவு கண்டுகொண்டிருக்கும் மடாதிபதிகளைக் குறை கூறாயல் நாம் எப்படி விடக்கூடும்? பொது நன்மைகளைக் கவனிக்கும்படி நாம் அவர்களைத் தூண்டாமலிருப்பது நம்முடைய கடமையன்று. பாஷையும் மதமும் விருத்தியாகும்படி ஒவ்வொரு சபையாரும் மடாதிபதிகளைத் தூண்டவேண்டுமென்று நான் விரும்புகிறேன். மடாதிபதிகள் முன்னின்று பாஷையையும் மதத்தையும் வளர்க்க ஆரம்பித்தால் அது அதிக விரைவாக ஓங்கிவளர்ந்து விடும். அவர்களைப்பின்பற்றி அநேக தனவந்தர்கள் அந்தவழியில் தர்மம் செய்ய முன்வருவார்கள். ஆகவே இனிமேலாவது நமது மடாதிபதிகள் தங்கள் கடமையை உள்ளபடிக்குணர்ந்து கற்றோரையாதரித்துக் கலாசாலைகளையுண்டாக்கி பாஷை நடைகளைத் திருத்தி ஜனங்களுக்கு மதபோதமும் ஹிதபோதமும் செய்து ஆசாரங்களைக் காலத்துக்கேற்றபடி மாற்று முறைகளை உபதேசித்துத் திடப்படுத்தி இன்னும் எவை ஜனங்கட்கு அவசியமான விஷயங்களோ அவைகளை விருத்தியடையச் செய்து அவைகட்குத் தங்களாற் கூடுமானவரை மடாலயத்தின் பொருள்களை உதவியும் உதவச்செய்தும் ஆதரி

த்து வரவேண்டும். கல்வி விஷயத்திலும் மத விஷயத்திலும் அவர்கள் உண்மையாகப் பாடுபட வேண்டும். இந்த விஷயங்களிற்றலையிட்டு முன்னிற்கிற எந்த மடாதிபதிகளிடமும் வேறு குற்றங்கள் எத்தனையிருந்தாலும் நாம்பாராட்ட வேண்டிய அவசியமில்லை.

## மற்றவர்கள்.

இனி ஜமீந்தார்களையும் சிற்றரசர்களையும் பற்றிப் பேசுவோம். இவர்களும் ஜனசமூகத்துக்குற்ற நன்மைகளைச் செய்யக் கடமைப்பட்டவர்களே யெனினும் தங்கள் எல்லைக்குட்பட்ட ஜனங்களையே பெரிதும் ஆதரிக்க வேண்டியவர்கள். ஆனால் பொதுவாக தங்கள் தேசம் கல்வியிலும் நாகரீகத்திலும் மேன்மை பெற்றிருக்கிற தென்ற பெருமையைப் பெறுவதற்கு உரிமையுடையவர்கள். ஆகவே இவர்கள் தேசபாஷை கற்ற வித்துவான்களை ஆதரிப்பதிலும் கலாசாலைகள் ஏற்படுத்துவதிலும் தற்காலத்துக் கேற்றபடி கல்விகற்பிக்கும்படி திட்டப்படுத்துவதிலும் முன்வரவேண்டும். தங்கள் நாடுகளில் தொழிற் சாலைகளையும் வியாபாரங்களையும் ஆதரித்து விருத்தி செய்ய முயலவேண்டும். இத்தகைய வழிகளை விட்டு டாம்பிகத்தை விரும்பி மெய்மறந்து வீணாகச் செலவுகளைப் பெருக்கிப் பற்றும் பற்றாததற்கு கடன்வாங்கிச் செலவிட்டுக் கஷ்டப்படுவது அழகன்று. எத்தனையோ ஜமீன்தார்கள் அபரிமிதமாக வீண்செலவு செய்து தங்கள் ஜமீனை யிழந்துவிட்டுப் பேருக்கு மட்டும் ஜமீன்தாராக இருக்கிறார்கள். எத்தனையோ ஜமீன்தார்கள் தங்கள் ஜமீனை நிர்வகிக்க முடியாமல் கஷ்டமடைகிறார்கள். இப்படி வீணாகப்போகிற பொருள்களை கல்வி விருத்தி விஷயத்திலுபயோகித்தால் அது அவர்கட்கு எவ்வளவு புகழையும் புண்ணியத்தையும் தரக்கூடும்? மூன்றாவதாகப் பொருட்பெருக்குள்ளோரைப் பற்றி நாம் கூறாவிட்டது அவர்களும் தேச நன்மையில் கவனமற்றவர்களாகி வீண் டம்பத்துக்கும் பெருமைக்கும் ஆசையுற்றவர்களாகவே காணப்படுகிறார்கள். தேசபாஷை கற்று பண்டிதர்களாக இருப்பவர்கள் ஒரு ஜில்லாவுக்குப் பத்துப்பேரிருப்பது அருமையாகிறது. அவர்களை யாதரிப்பவரில்லாமையால் அவர்கள் "என்

இந்தத் தமிழைக்கற்ரும். ஆங்கிலம் படித்திருக்கக் கூடாதா" வெ ன்று வருத்தப்படுகிருர்கள். அப்படியாளுல் தேசபாஷை விருத் தியடைவதற் கெப்படி வழியுண்டாகும்? வித்துவான்களை யாதரி ப்பதோடு கலாசாலைகளையும் பரீட்சை வெகுமதிகளையுமேற்படுத்தி படிப்போருக்கு உற்சாகமுண்டாக்கவேண்டும். இந்த வகையில் மதுரைத்தமிழ்ச் சங்கத்தாரும் எமது நாட்டுக்கோட்டையாரும் இப்போது சிறப்புடையவர்களாக இருக்கிருர்களென்று நான் திட்டமாகச் சொல்லுவேன். மதுரைத்தமிழ்ச் சங்கம் சிறிது கால மாக இது விஷயத்திற் பெரிய உதவிசெய்து வருகிறது. தமிழ்ச் சங்கமும், நாட்டுக்கொட்டையாரும் கைவிட்டால் தமிழ்ப்பாஷை அதிவிரைவில் மங்கிவிடுமென்பதி லையமில்லை. எத்தனையோ தமிழ் நூல்களை யச்சிடுவதற்கு எமது நாட்டுக்கோட்டையார் பொருளுதவி செய்தார்கள், செய்கிருர்கள். எத்தனையோ சிவாலயங் களைச் சிரிட்டி சைவசமயத்தை நிலைக்கச்செய்தார்கள். இன்னு மெத்தனையோ மத சம்பந்தமான தர்மங்களைச் செய்கிருர்கள். கல்வி விஷயத்தி லிவ்வளவு காலமாகப்போதுமான கவனம் செலு த்தவில்லையென்று சொன்னுலும் இப்போது சிறிதுகாலமாக அதிகக் கவனம் செலுத்தி வருகிருர்கள். இப்படியே ஒவ்வொரு வகுப்பாரும் செய்ய முயன்ருல் நமது தேசத்தில் கல்வியும் மத மும் ஏன் சிறப்படையா? மற்ற வகுப்பாருட் பொருட்பெருக்கு ள்ளோரில் தர்ம சிந்தையுள்ளவர்கள் மிகச்சொற்பமாகவே காண ப்படுகிருர்கள். நமது நாட்டுப் படிப்பாளிகளான வக்கீல்மார்களுட் பெரிய தனக்காரர்கள் பலரிருக்கிருர்கள். அவர்கள் மத விஷய மாகவாவது பாஷை விஷயமாகவாவது ஒரு பெரிய உதவி செய் திருக்கிருர்களென்று நான் கேள்விப்பட்டதில்லை. முக்கியமாக அவர்கள் தான் மற்றவர்கட்கு வழிகாட்டி களாக இருக்கவேண்டும். ஏன்! அவர்கள் கற்றுணர்ந்த அறிஞர்கள். இதோடு இவர்கட்கு வேறு பொறுப்புக்களுமிருக்கின்றன. அதாவது நாம் முன் சொ ன்னபடி ஆங்கிலக்கலாசாலைகளி லெடுத்துவிட்ட தமிழ்ப்பாஷை யைப் பின்னும் உபபாஷையாக எடுத்துக் கொள்ளச் செய்யும்படி முயலவேண்டுவதும் நமது தேசத்திற் கட்டாயக் கல்வியைச் சட்ட

யாக்கும்படி முயல்வதுமாகும். இவ்விரண்டி வகையிலும் முக்கியமாக நமது ஆனரபிள் மெம்பர்கள் பிரயாசைப்பட வேண்டும். அவர்கள் பொது ஜனங்களின் பிரதிநிதிகள். பொதுஜன நன்மையின்பொருட்டாகவே உழைக்கவேண்டியவர்கள். பொறுக்கி யெடுக்கப்பட்ட புத்திமான்கள். ஆகவே அவர்கள் தங்கட்கு அருமையாகக் கிடைத்த பெரியபதவியைப் பொது ஜனங்களின் நன்மைக்கும் திருப்திக்கு முபயோகித்து சட்ட சபைகளில் ஏதாவது ஒரு நன்மையான விஷயத்தி லுழைக்கும் பெருமை பெறவேண்டும். மனிதவாழ்வின் பயனைப்பற்றி மட்டும் அவர்கள் கருதவேண்டும். அந்த ஸ்தானத்தைப் பெற்றவன்றே அவர்கட்கு உள்ளபடிக்குக் கௌரவமுண்டாகி விட்டது. அதன்மேல் அவர்கள் கௌரவத்தைக்கருதாமல் பொது ஜனங்களின் நன்மைகளைக் கருதவேண்டும். அப்படிக் கருதுவதில் தேசபாஷைகளை விருத்தி செய்வது முக்கியமான நோக்கமாக இருக்கவேண்டும். இந்த வகையில் உண்மையாகவும் ஊக்கமாகவும் பாடுபடுகிற ஸ்ரீமான் கனம் கோகலேயவர்களை மற்றவர்கள் பின்பற்றவேண்டும். பாடுபட்டாற்றான் சித்தியுண்டாகும். முயற்சியுடையார் இகழ்ச்சியடையார். ஆதலின் நமது ஆனரபிள் மெம்பர்கள் விடாது முயன்று தேசநன்மைகளை விருத்தி செய்யவேண்டும்.

இனி யிப்படிப் பலவகையிலும்:—பிரசங்கித்தல், நூலெழுதுதல், கற்றோரை யாதரித்தல், கல்விச்சாலைகளை நியமித்தல், பொருளுதவுதல், துரைத்தனத்தாரின் ஆதரவு பெறுதல், சுயபாஷையை விருப்பமாகப்பேசுதல், தமிழிற் கடிதமெழுதுதல் முதலிய துறைகளில் நம்மவர் ஊக்கத்தோடு முன்னின்று தமிழ் மொழியை விருத்தி செய்யவேண்டும்.

## ஆங்கிலபாஷை.

தமிழ் ஒரு தனிப்பாஷையாகவிருந்தாலும் தற்காலத்திலதற்கு ஆங்கிலத்தி னுதவியதிகமாக வேண்டியதிருக்கிறது. தொழிற்படிப்புக்குற்ற அறிவுகளெல்லாம் இப்போது ஆங்கிலத்திலிருந்து தான் கிடைக்கவேண்டும், சுகாதாரத்துக்குற்ற புதிய முறைகளும் ஆங்கிலத்திலிருந்துதான் பெறவேண்டியிருக்கின்றன. இன்னும் பல நன்மைகள் ஆங்கில பாஷையாலுண்டாகக் கூடுமாதலால்

நமது தமிழ்மக்கள் தமிழ்ப்பாஷையோடு ஆங்கிலபாஷையையும் அவசியம் படிக்கவேண்டும். ஒரு பாஷையை நன்கு கற்றவனுக்கு மற்றொருபாஷை சுலபமாகக் கிடைக்கும். ஆங்கிலத்தை ஒருவன் நன்றாய்க் கற்றிருந்தால் அவன் தமிழில் இலக்கணம் படிக்கவேண்டியதில்லை. முறையாகப்பாடம் கேட்கவும் அவசியமில்லை. இப்படியே எந்தப் பாஷையானாலும் ஒரு பாஷை கற்றவனுக்கு இன்னொரு பாஷை பெறுவது சுலபமாகும். ஆனால் ஆங்கிலம் கற்ற தமிழன் அதுவே போதுமென்றெண்ணக்கூடாது. திருநெல்வேலியிற் பிறந்த ஒருவன் வியாபார நிமித்தம் லண்டனிலிருந்தாலும் வியாபார முடிந்த பிறகு பிறந்த ஊரிலிருந்து சுற்றத்தாரோடு வசிக்க விரும்புவது அவசியமாவதுபோல் அன்னிய பாஷையாற் சகல ஜீவனம் செய்தாலும் ஆத்ம பரிசுத்தத்துக்கு சுயபாஷைபோலுதவியாகாது. அதினும் தமிழ பாஷைபோல் இனிமையும் மகிழ்வும தரத்தக்க பாஷை வேறெதுவுமில்லை. ஆகவே தமிழ் மொழியை அபிவிருத்தி செய்வதில் நாமெல்லோரும் ஒரு மனப்பட்டு உழைப்போமாக. இனி நாகரிகமென்பதைப் பற்றிப் பேசுகிறேன்.

## இந்தியாவின் பூர்வ நிலை.

அன்பர்களே! நாகரிகமென்ற செப்பமான ஒரு சொல் தன்னுள் எத்தனையோ அரிய பெரிய விஷயங்களை யடக்கிக்கொண்டிருக்கிறது. நாகரிகமென்றால் கேவலம் ஆடைகளையும், அணிகளையும் விசித்திரமாகத் தாங்கி நிற்பதுமட்டுமன்று. கல்வியும், அறிவும், தொழிலும், சாஸ்திரமும், ஆசாரமும், அனுட்டானமும் சிறப்புற்றுப் பிரகாசித்திருக்கவேண்டும். இத்தகைய பெருமைகளெல்லாம் நிரம்பி ஒரு காலத்தில், நமது இந்தியா தேசம் நாகரிகத்தில் மிகவும் பிரசித்தியடைந்திருந்தது. ஆனால் நம்பத்தக்க புராதன ஹிந்து சரித்திரங்கள் இல்லையென்றாலும் ருக்வேத காலமுதல் இயற்றியிருக்கும் அநேக அருமையான நூல்களின் உதவியால் நாம் பல விஷயங்களைத் தெரிந்துகொள்ள இடமுண்டு. பழைய காலங்களில், கிரேக்கரும், ரோமரும் உயர்ந்த நாகரிகம் பெற்றவர்களென்பது பிரசித்தம். இந்துக்களோ அதினும் பழமையானவர்கள். ஒரு காலத்தில் பூலோகத்திலுள்ள ஜாதியாரெல்லாம் இந்தியாவி

னிடத்திற் கௌரவமும், அதிசயமும் பாராட்டியிருந்தார்கள் என்று தெரிகிறது. ஆதியில் ஹிந்துக்கள் எவ்வளவு வரை தெரிந்திருந்தார்களென்பதை யறிந்து தற்கால ஐரோப்பிய பண்டிதர்களும் ஆச்சரியமடைகிறார்கள். வான, சிற்ப சாஸ்திரம், ரசாயன முறைகள், மூலிகை வகைகள், வைத்தியம், ஜோதிஷம், அங்க கணிதம், பீஜகணிதம், தசாம்ச கணிதம் முதலியவைகளை முதலிற் கண்டுபிடித்தவர்கள் ஹிந்துக்களேயாம். இந்துக்களிடமிருந்துதான் மற்றவர்கள் தெரிந்துகொண்டார்கள். இனி பாஷையும், இலக்கணமும் முறைப்பட்ட அழகாக முதல் முதல் அமைத்தது இந்தியர்களே. இன்னும் மதம், ஆசாரம், ஒழுக்கம், மரியாதை முதலியவையும் ஒழுங்காக வரம்புகட்டி நடந்து காட்டியவர்கள் இந்துக்களே. இன்னும் பேசுமிடத்து நாகரீகம் பிறந்த இடமே இந்தியாவென்பதிற் சந்தேகமில்லை.

## தற்கால நிலை.

ஆனால் எதுதான் இந்தஉலகத்தில் நீடித்திருக்கிறது? தற்காலம் நமது இந்தியாவின் நாகரீகம் ஒரு பழங் கதையாக முடிந்து விட்டது, சென்ற காலத்து நிலைமையைப் பற்றி நாம் பெருமை பேசிச் சந்தோஷிப்பது எப்படியிருக்கிறதென்றால், ஒரு குழந்தை பிறந்து வளர்ந்து வாலிபமடைந்து எல்லா நலன்களையும் மேம்பட அனுபவித்து விருத்தாப்பிய தசையைப் பெற்று ஆற்றாத காலத்தில் இருந்த இடத்திலிருந்துகொண்டு தன் வாழ்வின சிறப்பைப்பற்றிப் பழங்கதை பேசிக்கொண்டிருப்பதுபோல் இருக்கிறது. இப்போது நாகரீகமென்றால் அதை மற்றவர்களிடம் நமது இந்தியர் பாடங் கேட்டுக் கற்றுக்கொள்ளவேண்டியதாகி விட்டதென்பதைச்சொல்ல விசனப்படுகிறேன். இப்படி யேற்படுவதற்குக் காரணமென்னவென்று நாம் ஆலோசித்தால் ஒரு வழியில் நாம் முடிவுக்கு வரக்கூடும். அதாவது:—ஆதியில் லௌகிக போகங்களையும், சௌகரியங்களையும் விரும்பி அதற்குற்ற பல சாஸ்திரங்களையும் தொழில்களையும் கண்டுபிடித்தார்கள். பிறகு அப்போகங்களும் பொருள்களும் சௌகரியங்களும் அநித்யமெனக்கண்டு அதை விருத்தி செய்வதில் ஊக்கமும் முயற்சியும் குறைந்து வைதீக மார்க்கத்துக்குரிய விருத்தி

யாப்பியாசத்திலேயே காலத்தைச் செலுத்தி தர்ம சாஸ்திரங்களை யும் நீதி நூல்களையும் பக்தி நூல்களையும் எழுதி மத சித்தாந்தம் செய்வதிலும் அவைகளை விருத்தி செய்வதிலுமே முயன்றிருக்கி றார்கள். ஆத்மார்த்தமாகப் பாடுபட ஆரம்பித்துவிட்டார்கள். ஆகவே பிற்காலத்தில் பௌதீக சாஸ்திரங்கள் செழித்தோங்காமல் மங்கி மறைந்துபோய் விட்டன. ஆனால் தற்காலத்தில் வைதீக முறைகளைப் பார்க்கிலும் லௌகீக முறைகள் அதிக அவசியமாக இருக்கின்றனவென்று சொலலவேண்டியதில்லை. பிழைப்புக்கு வழி தேடிக்கொண்ட பிறகு புண்ணியத்துக்கு வழி தேடவேண்டியது சாமான்ய ஜனங்களின் கடமையாகும். வைதிக நெறியில் நின்று உலக வாழ்வில் வெறுப்புற்று நிச்சய வஸ்துவை நாடிக்கொண்டிருக் கிற மகான்கள் இக்காலத்தில் மிகச்சிலரேயாவர். லட்சத்துக்கு ஒருவரிருவ ரிருப்பதும் அருமை. சரீரத்தைப் போஷிக்க வகையும் வழியுமில்லாமல் தவிக்கிற ஜனங்களே அதிகமாக இருக்கிறார்கள். ஆதலின் தற்காலத்து நாகரீகம் தொழிலைப்பற்றியும் கல்வியைப்பற்றி யும் ஆசாரத்தைப்பற்றியும் இருக்கவேண்டும்.

## (பெண் கல்வி.)

தற்கால இந்தியர்கள் மீண்டும் பூர்வ நாகரீகத்தைப் பெற வேண்டுமென்றால் (கல்வி, தொழில், ஆசாரம்) இம்மூன்று துறைக ளிலும் சிறப்படையவேண்டும். தொழிலுக்கும் ஆசார சீர்திருத்தத் துக்கும் கல்வியே முதற்காரணமாகும். கல்வி நமது நாட்டில் ஏராள மாக விருத்தியடையவேண்டு மானால் புருஷர்களைப் போலவே பெண்களும் படித்திருக்கவேண்டும். ஒரு தேசத்தையோ ஒரு ஊரையோ, ஒரு குடும்பத்தையோ, ஒரு ஜாதியையோ அலங்கரிப் பது பெண்களேயாம். உலகத்திற் புருஷர்களைப் பார்க்கிலும் பெண் கள் அதிக உபயோகமானவர்கள். ஒரு பெண்ணில்லாத வீடு எப் படி உபயோகமில்லையோ அதுபோலவே அறிவில்லாத பெண்க ளிருக்கிற தேசமும் உபயோகமற்றதாகும். பெண்களைப் படிக்கச் செய்து அறிவுள்ளவர்களாக்கி எவ்வளவு மேன்மையடையச் செய் கிறோமோ அவ்வளவு மேன்மையும் நமது தேசத்தைப் பிரகாசிக்கச் செய்யும். பெண்கள் கேவலம் புருஷர்கட்கு ஊழியம் செய்யப்

பிறந்த விலங்குகளல்லர். அல்லது பிள்ளைகளைப் பெறுவதற்கு அமைந்த இயந்திரங்களல்லர். புருஷர்களைப்போலவே நன்மை, தீமை, சுகம், துக்கம் முதலியவைகளை யநுபவிக்கத்தக்க பகுத்தறிவுள்ள மனுஷ்ய ஜன்மங்களேயாவர். ஆகவே அவர்களைக் கல்வியறிவில்லாத மூடர்களாகச் செய்வது நமது கையிலிருக்கிற பொருளை யநுபவிக்கத் தெரியாமல் மண்ணுக்குட் புதைத்துவைப்பதை யொக்கும். புருஷனும் மனைவியும் உடலும் உயிரும்போலவும் நகமும் சதையும் போலவும் பூவும் மணமும் போலவும் தேனும் ருசியும் போலவும் இருக்கவேண்டுமென்று நமது நூல்கள் கூறுகின்றனவே? அறிவுள்ள இருவ ரப்படியிருப்பது சாத்தியமேயன்றி மனிதனும் மிருகமும் அப்படி யிருத்தல் கூடுமோ? (விலங்கொடு மக்களனையர் இலங்கு நூல் கற்றாரோ டேனையவர்.) படிப்பற்று மிருக சுபாவமுடைய பெண்களோடு உயிருமுடலுமாக யிருப்பதெப்படி? சுட்ட மண்ணும் பச்சைமண்ணும் எப்படி ஒட்டாதோ அதுபோலவே படித்த புருஷனும் படிப்பற்ற பெண்ணும் ஒற்றுமைப்படார்களென்பது வெளிப்படையாகும். நமது தேசத்தில் பிராமணர் முதல் தாழ்ந்த ஜாதியார் வரையில் இந்த விஷயத்தில் ஒரே தன்மையுடையவர்களாக இருக்கிறார்கள். பெண்கள் கட்டாயம் படித்திருக்க வேண்டுமென்ற நிர்மானத்துக்கு இன்னும் வரவில்லை. இன்னும் சிலர் பெண்கள் படித்தால் அவர்கள் கற்புக்குக் கேடு உண்டாகிறதென்று வாதிக்கிறார்கள். கற்பு வேறு கல்வி வேறு என்பதையவர்கள் ஆலோசிப்பதில்லை. கல்வி கற்பைக் கெடுத்துவிடுமென்றால் விளக்கு வெளிச்சத்தைக் கெடுத்து விடுமென்று சொல்லலாம். புருஷர்களோ பெண்களோ விபசாரம் செய்வது சேர்க்கைத் தோஷத்தாலும், சரீர இயற்கையாலும் என்பது உண்மையான காரணமாகும். கல்வி யிருந்தாலும் இல்லாவிட்டாலும் அந்த இயற்கைச் சுபாவமுடையவர்களை அதினின்றும் மாற்றமுடியாது. அந்த உபயோகமற்ற காரணத்தை வைத்துக்கொண்டு பெண்கள் படிக்கக்கூடாதென்று வாதிப்பது பெரிய தப்பிதமேயாகும். அநுபவத்தில் படியாத பெண்கள் கற்பு நிலை தவறாமலிருக்கிறார்களென்று தெரிந்தால் நிறுத்திவிடலாம். அப்படியும் தெரியவில்லை: இன்னும் பார்த்தவிடத்து பெண்களைப் புருஷர்களே கெடுக்கிறார்கள். புருஷர்கள்

கல்வி கற்றமை யாற்றான் அப்படிச் செய்கிறார்கள் என்றால் புருஷர்கள்படிப்பதையும் நிறுத்திவிட வேண்டும். ஆகவே கல்விக்கும் கற்புக்கும் சம்பந்தமில்லை. கல்வி அறிவை யுண்டாக்கும். அறிவானது ஆசாரம், ஒழுக்கம், ஞானம் முதலிய நன்மைகளையுண்டாக்கும். அதனால் மனித ஜென்மம் மேன்மையடையும். புருஷர்கள் படித்தும் பெண்கள் படிக்காமலு மிருந்தால் புருஷர்களின் அறிவும் பிரகாசிக்காது. எப்படியொரு தகட்டுத்தங்கத்தில் அதே எடையுள்ள செம்பைச் சேர்த்து ஒன்று படுத்தினால் தங்கத்தின் தன்மை குறையுமோ அதுபோல படிப்பற்ற பெண்களைப் படித்த புருஷர்கள் கூடி வாழ்வது அவர்களின் அறிவின் பிரகாசத்தை மங்கச் செய்யும். இனி சாஸ்திரயுக்த மாகவாவது, பெண்கள் படிக்கக்கூடாதென்று ஏற்படவில்லை. பண்டைக்காலத்தில், எத்தனையோ பெண்கள், நூல்கள் செய்தும், கவி பாடியு மிருக்கிறார்கள். எத்தனையோ பெண் மணிகள் அரசாட்சி செய்திருக்கிறார்கள். நமது மூதாட்டியாராகிய ஔவையார் பெண்ணன்றோ? கல்வியின் பிறப்பிடமாகிய சரஸ்வதியாரும் பெண்ணன்றோ. அப்படி யிருக்கப் பெண்கல்வி நம் நாட்டிற் குறைவு பட்டது பெரிய அந்நியாயமாக இருக்கிறது. அதனாற்றான் செல்வமும் பெருமையும் குறைந்து நாகரீகமற்ற ஒருதேசமாகிவிட்டது. ஆகவே இனிமேலாவது நமது தேசத்தில் ஒவ்வொரு ஜாதியாரும் பெண்களைப்படிக்கவைப்பதைக் கட்டாயமாக வைத்துக் கொள்ளவேண்டும். படிப்பும் உயர்தரக் கல்வியாக இருக்கவேண்டும். பெண்கல்வியே நாகரீகத்தின் முதற்படியாகும்.

## ஜாதியும், மதமும்.

இனி நமது தேசத்தில், ஜாதிமதபேதங்கள் அதிகப்பட்டு ஜனங்களை வேற்றுமைப்படுத்தி தொழில் முதலிய விருத்திகளைக் குறைத்து விடுகின்றனவென்பர் ஒருசாரார். அதுவும் உண்மையேயாம். ஆதியில் ஜனங்களை வேற்றுமைப்படுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடு ஜாதி மதங்கள் பிரிக்கப்படவில்லை. தொழில்பற்றி ஜாதிகள் பிரிக்கப்பட்டன. பலதேசத்து ஜனங்கள் குடியேறிய பழமையான தேசமாதலின் மதங்கள் வேற்றுமைப்பட்டன. ஆனால் இப்போது இந்த ஜாதி மதவேற்றுமைகளை முற்றிலும் அகற்றி ஒன்று படுத்து

வேண்டுமென்பது அவசியமில்லை. அப்படிச் செய்வதும் சாத்திய மாகாது. சிறிது சிறிதாக தானே ஒன்றுபட்டு விடக்கூடும். அது வரையில் ஜாதிச்சண்டை மதச்சண்டைகளை விட்டு தேச நன்மை விஷயத்தில் சகோதர உரிமையுடன் ஒத்துழைப்பதே விவேகமாகும். ஜாதிமத வித்தியாசங்கள் கல்யாண முதலிய முக்கிய விஷயங்களில் மட்டும் பாராட்டப்பட்டாற் போதுமானது. அதற்குப்புறம்பான மற்ற விஷயங்களிற் பல்லைக்கடித்துக்கொண்டு அனுமார் வேஷம் போடுவது மிகவும் பரிதபிக்கத் தக்கது. எந்தஜாதி, எந்த மதமும் கடவுளுக்கு அன்னியமல்ல. கடவுளுக்குச் சம்மதமான எதுவும் நாம் அங்கீகரிக்கத் தக்கதன்றோ? ஜாதிப் பிரிவினையை ஆராயுமிடத்து அதொரு சரீரஅமைப்பைப்போலவே யிருக்கிறது. எப்படி யொரு சரீரத்தில் தலை, உடல், கை, கால் என்று அதனதன் தொழில்பற்றி வகுக்கப்பட்டிருக்கிறதோ அப்படியே ஜாதிகளும் பிரிக்கப் பட்டிருக்கின்றன. ஆனால் எந்த அங்கத்துக்குக்குறையுண்டானாலும் அது சரீரத்துக்குக் குறைவேயாம். அதுபோலவே எந்த ஜாதி தாழ்மையடைந்தாலும் அது தேசத்துக்குக் குறைவேயாம். ஒரு ஜாதியாரும் மற்ற ஜாதியாரும் வேற்றுமைபாராட்டி தீண்டக் கூடாது, சமீபத்தில் வரக்கூடாது, காற்றுப் படக்கூடாது, பேசக் கூடாது என்று ஒதுங்கி நடப்பதோ அல்லது உயர்வு தாழ்வு பேசுவதோ ஒரு சரீரத்திலுள்ள அவயவங்கள் ஒன்றையொன்று வேற்றுமை பாராட்டி அல்லது சண்டை போட்டுக்கொள்வதையொக்கும். அப்படியானல் அது எவ்வளவு அறியாமையாகும். மனுஷியர்களிலும் தாழ்மையான எருமை, நாய் முதலிய மிருகங்களைத் தீண்டுகிறவர்கள் மனிதர்களுள் ஜாதிவேற்றுமை கருதி சமீபத்தில் வந்தாலும் தோஷமென்று சொல்வது விவேகமாகுமா? தாழ்ந்த ஜாதியானொருவன் ஒரு குளத்தில் தவறி வீழ்ந்து இறக்கும் தருவாயிலிருந்தாலும் உயர்ந்த ஜாதியார் தீண்டமாட்டார்கள். ஜாதி வேற்றுமை பாராட்டி விலகி நிற்பார்கள். அப்படியானல் அது எவ்வளவு இரக்கமற்ற காரியம். சுத்த வைதீகர்களான சில மேல் ஜாதியார் மற்றவர்கட்குத் தாகத்துக்குத் தண்ணீர் கொடுப்பதுகூட இல்லை. கொடுத்தால் தீண்டலாகிவிடுமாம். இப்படி கடுமையாகப் பாராட்டப்படுவதுதான் விசனிக்கத்தக்கது. இவ்வித துர்க்குணங்களை

விட்டு முக்கியமான விஷயங்களில் மட்டும் பாராட்டிவந்தால் இன்னும் பல வருஷங்கட்கு இப்படியே யிருந்து பெருமை பெறக்கூடும், இல்லாவிட்டால் தானே ஒன்றுபட்டுவிடும். ஒன்றுபட்டாலும் அல்லது இப்படியே யிருந்தாலும் அதைப்பற்றிக் கவலையில்லை. ஆனால் பரஸ்பரம் அன்பும் அபிமானமும் சகோதர உணர்ச்சியுமுடையவர்களாக இருக்கவேண்டும். பந்தி போஜன விஷயத்திலும் அதிக வேற்றுமை பாராட்டாமல் புலாலுணவை விட்டவர்கள் யாவரும் ஒன்றாக இருந்து உண்ணுவது தேச நன்மைக்கு ஏதுவாகும். மத விஷயத்தில் அவரவர் அநுஷ்டிக்கிற மதத்தைவிட்டு விலகாமலும் மற்ற மதங்களையும் கொள்கைகளையும் தூஷிக்காமலும் இருந்தாற் போதுமானது. இத்தகைய வழிகளே நாகரீக விருத்திக்குற்றவையாம்.

## தொழிலும், வியாபாரமும்.

இனி இந்த விதமாகக் கல்வியும், ஒற்றுமையும் பெருகினவிடத்துத் தொழில் முயற்சிக்கு வழியுண்டாகும். தொழிற்சாலைகள் பலப்படும். ஒரு தேசத்திற் செல்வப் பெருக்குண்டாவதற்குத் தொழிற்சாலைகளே மிகப் பிரயோஜனமுடையன. தொழிற்சாலைகளை நடத்துவோருக்கு அதிக லாபமுண்டாவதோடு ஏழை ஜனங்கள் பிழைப்பதற்கும் வழியுண்டாகும். நமது விரிந்த இந்தியாவிற் பிழைப்புக்கு இடமில்லாமல் பத்தாயிரக்கணக்கான ஏழைகள் தென்னாப்பிரிக்காவுக்கும் மலேயா நாட்டிற்கும் சிலோன் முதலிய தேசங்கட்கும் ஏற்றுமதி செய்யப்படுகிறார்கள். அங்கு அவர்களடைகிற ஹிம்சைகளையும் கஷ்டங்களையும் நினைக்கும்போது மனம்திடுக்கிட்டு நடுங்குகிறது. பிழைப்புக்கு இடமிருந்தால் தங்கள் தேசத்தைவிட்டு முன்பின்னறியாத அன்னிய நாடுகட்குச்சென்று அங்கு துன்பப்படுவார்களா? இந்தியாவில் எல்லாப்பொருள்களுமுண்டாகின்றன. எல்லாவசதிகளும் அமைந்திருக்கின்றன. இயந்திரங்களைத் தந்து உதவுவதற்கு இங்கிலாந்து தயாராகவிருக்கின்றது. நமதுகாருண்யமுள்ள அரசாங்கத்தார் ஒத்தாசை செய்யச் சித்தமாக இருக்கிறார்கள். இப்படி யெல்லாமிருந்தும் நம்முட்கல்வியும் ஒற்றுமையும முயற்சியுமின்மையால் அதன் பயனைநாம் பெறக்கூடவில்லை. நமது தேசத்திற்

செல்வமும் குறைந்துகொண்டு வருகிறது. தொழிற்சாலைகள் அதிகப்பட்டு ஊக்கத்தோடு நடைபெற்றாலன்றி நமது நாட்டார் செல்வர்களாகமுடியாது. ஆகவே தொழில் முயற்சி அதி தீவிரமாக நடைபெறவேண்டும். பண்டைக்காலத்தில் நமதிந்தியா தேசத்தில் எவ்வளவு அருமையான தொழிலாளிகள் இருந்தார்களென்பதை இக்காலத்தில் நாம்காண்கிற அதிவிசித்திரமான கட்டடங்களும் கோயில்களும் தேர்களும் கோட்டைகளும் புகழ்ந்துகூறுகின்றன. இயந்திர சகாயமுள்ள இக்காலத்தில் முயன்றால் எவ்வளவு மேன்மை பெறக்கூடுமென்பதை எடுத்துக்காட்ட வேண்டுமா? தொழில் உற்சாகத்தோடு நடைபெற ஆரம்பித்தால் வியாபாரம் தானே பெருகிவிடும். வியாபாரங்களை விருத்தி செய்வதற்கு இக்காலத்தில் ரெயில், கப்பல், தந்தி, தபால் முதலிய பல சாதனங்களமைந்திருக்கின்றன. அவற்றின் உதவிகளாலும் இராஜாங்கத்தின் அநுகூலத்தாலும் நாம் எந்தத்தேச சம்பந்தமான வியாபாரங்களும் செய்யலாம். எந்தப் பெரிய வியாபாரங்களும் செய்யலாம். தொழில்களாலும் வியாபாரத்தாலுந்தான் நமது இந்தியா தேசம் செல்வமடையவேண்டும்.

## ஆசார சீர்திருத்தம்.

அந்த வழிகளிற்றான் நாகரீகம் பெற்றுச் சித்தியடையவேண்டும். இதுதான் நமது நாட்டாரின் முதற்கடமையாகும். இனிப் புராதன ஆசாரங்களையும் இக்காலத்துக்கேற்றபடி திருத்தவேண்டியவைகளைத் திருத்தி தள்ளவேண்டியவைகளைத் தள்ளிச் சேர்க்கவேண்டியவைகளைச்சேர்த்து ஒருவாறு புதுப்பித்துநடத்தவேண்டும். பழமையான தேசமாதலாலும், மகமதிய அரசாட்சி ஜனங்களை அல்லோலகல்லோலப்படுத்திச் சீர்கெடச்செய்துவிட்டதாலும் பழக்க வழக்கங்கள் முதிர்ச்சியடைந்து விட்டமையாலும் நமது தேசத்தின் ஆசாரங்கள் கிழப்பருவத்தையடைந்து காரண காரிய மறியாமல் அநுஷ்டிக்கப்பட்டு வருவதாலும் பல சங்கடங்களும் விபரீதங்களும் கஷ்ட நஷ்டங்களும் உண்டாகி நம்மவரின் வாழ்க்கையைச் சுகபோகமற்ற வாழ்வாகச் செய்துவிடுகின்றன. இவற்றுள் முதன்மையானது விவாக விஷயம். இந்த விவாக விஷயத்திற்றான் நமது நாடு மிகவும் சீர்கெட்டுப்போயிருக்கிறது. விவாகமென்பது மனி

தகாதென்றும் கட்டிடத்திற்கு அஸ்திவாரமல்லவோ? அதில் ஊழல்களும் அரம்பாவிகளுமிருந்தால் நமது வாழ்க்கைப்பயிர் சந்தோஷமாக முடியுமா?

(விவாகங்களின் முறைகள்.)

அஸ்திவாரத்தைப் பலப்படுத்திக்கொண்டன்றோ மற்ற அலங்காரங்கள் செய்யவேண்டும். பலவீனமான சுவரில் சித்திர மெழுதுவதிற் பயனென்ன. கஷ்டத்தையும் துன்பத்தையும் விரைந்து அடையலாமா? சந்தோஷத்துக்கும் உற்சாகத்துக்கும் இல்லாமல் துக்கத்துக்கு விவாகம் செய்துகொள்வதிலும் துறவியாகித் தனித்திருந்து ஆனந்தமடைவது எவ்வளவு நன்மையாகும். விவாஹ விஷயத்தில் சந்தோஷமும் உற்சாகமும் உண்டாக வேண்டுமென்றால் தலைவனும், தலைவியும், உருவும், திருவும், பருவமும், குலமும், குணமும் அன்பு முதலியவற்றால் தம்முளொப்புமை யுடையராகவும் கல்வியறிவுள்ளவர்களாகவும் உண்மைக்காதலுடையவர்களாகவும் ஒருவரையொருவர் நேசிப்பவராகவும் இருந்தாலன்றி முடியாது. அப்படி யமைவதற்கு விவாஹ விஷயத்தில் தாய் தந்தையர்களைப் பார்க்கிலும் மணமகனுக்கும் மணமகளுக்கும் அதிகமான சுதந்திரமிருக்கவேண்டும். நமது நாட்டு விவாஹங்களில் எதிர்பதிகட்கு ஒரு சுதந்திரமுமில்லை. சந்தைகளில் வண்டிமாடுகட்கு ஜோடி தேடுவதிலும் உயரம் நிறம் கொம்புச்சீர் தலையெடுப்பு முதலிய பொருத்தங்களைப் பார்த்தன்றோ வாங்குகிறார்கள்? அந்த ஆராய்ச்சிகூட மனித சமூகத்துக்கு வேண்டாமா? அந்த மாடுகளைப்பார்க்கிலும் மனிதர்கள் எவ்வளவோ உயர்ந்தவர்களும் உபயோகமானவர்களும் பெரிய காரியங்களை நடத்தக் கூடியவர்களுமென்பது யாரே அறியார்? நாட்டுமாடொன்றையும் ஆலம்பாடி மாடொன்றையும் ஒரு வண்டியிற் பூட்டினால் அல்லது பால் குடிக்கிற கன்றையும் பண்ணையி லுழுகிற காளையையும் ஒரு ஏரிற் பூட்டினால் அல்லது பால் மணமாறாத கன்றிரண்டை வண்டியிற் பூட்டினால் அதைக் கண்டு நகைக்கிறார்களே. 5வயதுப் பெண்ணுக்கும் 50 வயது மாப்பிள்ளைக்கும், 20 வயதுப் பெண்ணுக்கும் 10 வயது மாப்பிள்ளைக்கும் பால் மணமாறாத பிள்ளைகட்குமசெய்கிற

போலி விவாஹத்தைக் கண்டு நகைக்காமலிருப்பர்கள்? (சமீபத்தில் செங்கல்பட்டு ஜில்லாவில் செட்டி ஜாதியில் 22 வயதுள்ள மாப்பிள்ளை 1½ வயதுள்ள பெண்ணை மணந்தாராம். இவர் அறிவே அறிவு. எதை முன்னிட்டுச் செய்தாரோ தெரியவில்லை. அந்தோ! இதனால் வரும் தீங்குகளை சொல்லுமோ? இந்தத் துர்வழக்கம் சுருதி, யுக்தி, அநுபவம் மூன்றுக்கும் ஒத்திருக்கவில்லையே! உயர் குலத்தாரான பிராமணர்கள், பெண்கள் பிரவிடையாமுன் விவாஹம் செய்யப்படவேண்டுமென்ற வழக்கத்தை வைத்துக்கொண்டு ஆடை கட்டத் தெரியாத பருவத்திலேயே விவாஹத்தை முடித்துவைத்து விடுகிறார்கள். அக்கிக, பேதை, பெதும்பை நீக்கி மங்கைப் பருவமடையும்போது புருஷன் கிழப்பருவத்தை யடைந்து விடுகிறார். அதுவரையிற் தீர்க்காயுளாகவு மிருக்கவேண்டும். இல்லாவிட்டால் மொட்டையிட்டு முக்காடிட்டு மூலையில்வைத்து ஒருவேளை யன்னமிட்டு வதைக்கிறார்கள். அந்தத் தண்டனை ஆயுள் பரியந்தமப் படவே தான். விமோசனம் கிடையாது. இது எவ்வளவு பரிதாபம் பாருங்கள். விவாஹத்தை விரும்பாமல் விளையாடிக்கொண்டிருந்த பெண்ணைப் பிடித்துத் தாலியைக் கட்டிவைத்து அழகு பார்த்து சந்தோஷித்தவர்கள் சும்மாவிருக்க அப்பேதை ஆயுள் பரியந்தம் கஷ்டப்படலாமா? இவ்வளவு பெரிய ஆக்கினைகளை யடையலாமா? மொட்டையிட்டும் முக்காடிட்டும் அவமானப்படுத்தலாமா? உணவைக் குறைக்கலாமா? இதெல்லாம் எந்த நோக்கத்தோடு ஆதியிற் செய்கிற வழக்கமேற்பட்டதோ, அந்த நோக்கம மட்டும் நிறைவேறுவதில்லை. வெளி வேஷமேயன்றிக் காரியமொன்றுமில்லை, இதை அறியும் உயர்வுள்ள குலத்தாரான பிராமண பண்டிதர்கள் ஏன் கவனிக்கக்கூடாது? சமீபத்தில் காஞ்சீபுரத்திற் கூடிய பண்டித பரிஷத்தில் பெண்கள் பிரவிடையான பிறகு விவாஹம் செய்வது சாஸ்திர சம்மதமான காரியமேயென்று தீர்மானிக்கப்பட்டது. அதை மறுத்து அநேகர் கூடி தீர்மானித்தார்கள். நல்ல காரியங்களில் ஒன்றுபடாமல் ஒருவர்க்கொருவர் மாறி நிற்பது ஞாயமன்று. நமது தேசத்தில் ஆரியர் குடியேறிய காலமுதலாக பிராமணர்களைப் பின்பற்றியே மற்றவர்கள் நடந்து வருகிறார்கள். அவர்களை புரோகிதர்களாகவும், குருமார்களாகவும், ஆசாரியர்களா

கவும், சாஸ்திரிகளாகவும் இருக்கிறார்கள். ஆதலின் அவர்கள் தான் இந்தவிஷயத்திலும் முதலில் திருத்தமடைந்து மற்றவர்கட்குக் காட்டவேண்டும். ஆனால் அவர்கள் கையாடாத சில வழக்கங்களை மற்றவர்கள் கையாடி வருகிறார்கள். சில ஜாதிகளில் பாலகர்கட்குப் பருவப்பெண்ணைச் செய்கிற ஆபாச விவாஹவழக்கமிருக்கிறது. அது மிகு ஞான சூனியமான வழக்கம்; அது பெண்ணையும் பிள்ளையையும் அவமானப்படுத்துகிற வழக்கம். உள்ளபடிக்கு நடந்த ஒரு விஷயம்: ஒருபாட்டையிற் சந்தித்த ஒருமாதை அவளுக்கு அறிமுகமான ஒருமனிதன் நோக்கி, "அம்மா! உங்கட்குப் பின்னால் வருகிற தம்பி உங்கள் பையனோ?' என்று கேட்க அம்மாது வெட்கித் தலை குனிந்து ஒன்றும் மறுமொழி பேசாதிருப்பதைக்கண்டு அம்மனிதன் 'அவர் தான் அப்பெண்ணின் புருஷன்' என்று தெரிந்துகொண்டாராம். என்ன அழகு பாருங்கள். இவ்வித கல்யாணமும் கல்யாணந்தானோ? எதற்காக இப்படிச் செய்வதோ? இன்னும் இத்தகைய விவாஹங்களால் ஏற்படுகிற அவமானங்களும் பழியும் கொஞ்சமன்று. ஆகவே இந்தத் துர்வழக்கமுள்ள ஜாதியார் கூடிய விரைவில் திருத்தமடைந்துகொள்ளவேண்டும். போதுமான வயது வராமுன்னம் செய்யப்படுகிற பால்ய விவாஹத்தை நமது தேசத்தாரெல்லோரும் பொதுவாக விட்டுவிடவேண்டும். ஆனால், மேனாட்டாரைப்போல் பெண்கட்கு 25. 30. வயது வந்துதான் விவாஹம் செய்யவேண்டுமென்பது நமது தேசத்திற்குப் பொருந்திய விஷயமன்று. அது இன்னும் இதிகமான கேடுகளை யுண்டுபண்ணவும் கூடும். ஆகவே அந்த காலாவதியான விவாஹ வழக்கமுமின்றி பால்ய வயதிற் செய்வதையும் விட்டு பிள்ளைகட்கு 18 வயதும் பெண்கள் பிரவிடையான பிறகும் விவாஹம் செய்வதென்றும், பிள்ளைக்குப் பெண் ஒரு வருஷமாவது சின்னவளாக இருக்கவேண்டுமென்பதையும் கண்டிப்பாகக் கைக்கொண்டு நடப்பதே நமது தேசத்திற்குப் பொருந்திய விஷயமாகும். கட்டாயமாகப் பிள்ளையையும் பெண்ணையும் சம்மதங் கேட்டு விவாஹம் பேசவேண்டும். சதிபதிகள் மனமொவ்வாமற் செய்கிற விவாஹம் ஒரு பிரயோஜனமுமில்லை.

## விதவா விவாகம்.

இனிப் புருஷர்களைப் போலவே பெண்கட்கும் புனர்விவாஹம் செய்துகொள்ளுகிற சுதந்திர மிருக்கவேண்டு மென்பதைப் பற்றிப் பல அறிஞர்கள் பலவிதமாக அபிப்பிராயப் படுகிறார்கள். புருஷர்களைப் போலவே பெண்களும் இகபோகங்களை யனுபவிப் பதிலும் உண்பதிலும் உடுத்துவதிலும் விருப்ப முடையவர்கள். புருஷர்களைப் பார்க்கிலும் பெண்கள் மனவன்மையுடையவர்களல்லர். பெண்கள் உலகத்தைப் பெரிதும் நம்பியிருப்பவர்கள். ஆகவே புருஷர்களைப்போலவே பெண்களும் புனர்விவாஹம் செய்துகொள்ளுகிற சுதந்திரத்தை யிழந்துவிட எந்த முகாந்திரத்தாலு முட்படத்தக்கவர்களல்லர் என்று வாதிப்பார் ஒரு சாரார். மற்றொரு சாரார் அப்படிச்செய்வது சாஸ்திரயுக்தமன்று; பெண்கள் புனர்விவாஹம் செய்துகொள்ளும் வழக்க மேற்பட்டால் அது அநேக தீங்குகட் கிடமாகும். மேலும் அநுசிதமான காரியமென்பர். புருஷர்கள் ஒன்றன்பின் னொன்றாகப் பல பெண்களை மணக்கலாமென்ற விதியிருக்கும்போது பெண்கள் விஷயத்தில்மட்டும் அந்த நியதியில்லாமற்போனது பாரபக்ஷமான விதியாகுமென்பார் மற்றொரு சாரார். பராசர ஸ்மிருதியிற் கூறுகிறபடி புருஷன் இறந்துவிட்டாலும் தீராத பயித்தியம் பிடித்துப்போய் விட்டாலும் தூரதேசங்கட்குப்போய் அநேக வருஷங்கட்குந் திரும்பி வரா விட்டாலும் பெண்கள் வேறொரு புருஷனை மணந்துகொள்ளலா மென்றிருப்பதால் சாஸ்திரவிரோத மன்றென்று கூறுவர் மற்றொரு சாரார். இப்படிப் பலவாறு பலவித அபிப்பிராயங்கள் வெளிவருகின்றன. முடிவில் எதைத் தீர்மானிப்ப தென்று நாம் ஆலோசிக்கும்போது காலத்துக்கேற்றபடி செய்வதே உசிதமாகும். பழக்க வழக்கத்துக்கு விரோதமான காரியத்தைச் செய்வது முதலில் மனதுக்கு அரோசியத்தையுண்டுபண்ணு மென்றாலும் நாளடைவில் சமாதானமடைந்துவிடும். நமது இந்தியா தேசத்தில் பண்டைக்காலமுதற்கொண்டு பெண்கள் உடன்கட்டை யேறுகிற வழக்கமிருந்துவந்தது. முதலில் அந்த வழக்கம் ஒருவரும் ஏற்படுத்தவில்லை. உத்தமிகளான பெண்கள் புருஷன் இறந்தபிறகு நாமி

ருந்து பிரயோஜனமென்னவென்று வெறுப்புற்று தைரியமாக உடன் கட்டையேறி தங்கள் உயிரை விட்டார்கள். பிறகு அதைப்பின்பற்றி உத்தமிகளென்று பெயர் பெறுவதின் பொருட்டு மற்றவர்களும் அச்சத்தோடும் சஞ்சலத்தோடும் ஏறிமாண்டார்கள். பின்னும் சிலகாலத்தில் அவ்வழக்கம் கட்டாய வரிபாகிவிட்டது. பெண்கள் மாட்டேனென்றாலும் பிடித்துக் கட்டித் தீயிற்போட்டுப்பொசுக்கிவிடுகிற வழக்கமுண்டாகி விட்டது. இந்தப்பரிதாபமான வழக்கம் மோகலாய அரசராகிய அக்பர் சக்கிரவர்த்தி காலத்தில் தடுக்கப்பட்டும் அப்படிச் செய்கிறவர்களைத் தண்டித்தும் அந்தர் வழக்கம் முழுதும் ஒழியவில்லை. பிறகு சுமார் 80 வருஷங்கட்கு முன் (லார்ட் வில்லியம் பெண்டிக்) என்ற கவர்னர் ஜனரல் காலத்தில் கண்டிப்பான சட்டமுண்டாக்கி அடியோடு நிறுத்தி விட்டார். இப்போது அப்படி உடன்கட்டையேறவில்லை யென்று யாரும் நிந்திக்கப்படவில்லை. இதேவிதமாக ஒரு காலத்தில் புருஷனை இழந்த பெண்கள் மனவெறுப்புற்று ஆடை யாபரணங்களை வெறுத்து உணவு முதலிய சுக சௌகரியங்களை விட்டுத் தங்களைத் தாங்களே குறைவு செய்து கொண்டார்கள். அது பிற்காலத்தில் வழக்கமாகி இப்போது கட்டாயவரியாகியிருக்கிறது. இக்காலத்துப் பெண்களுட் பெரும்பாலார் தங்கள் ஆடையணிகளை யிழக்க உள்ளபடிக்கே சம்மதிப்பதில்லை. புருஷன் இழந்த துக்கத்தைப் பார்க்கிலும் தாங்கள் அலங்கோலமடைந்த துக்கத்தை அதிகமாகக்கொண்டாடுகிறார்கள். அந்த உண்மையை அவர்கள் ஒப்புச்சொல்லியழும்போது காணலாம். அவர்கள் வெறுக்காமலே அவர்கள் சிக்ஷிக்கப்படுகிறார்கள். ஆதலின் அது நடுநிலையோடு நோக்குமிடத்துப் பெரிதும் பரிதாபமென்பதி லையமில்லை. ஒரு பெண் மணம் செய்துகொள்ள விரும்பினால் அவளைத்தடைப்படுத்துவது ஞாயமில்லை. பதிபக்தியுள்ள உத்தமிகள் அப்படி வெறுத்திருக்க விரும்பினால் அவர்களிஷ்டம்போல் விட்டுவிடலாம். விருப்பமுள்ள பெண்களைத் தடுத்துக் கட்டாயப்படுத்துவது இரக்கமற்ற காரியமேயாம். அப்படிச்செய்வதால் செத்த உயிருக்கு வருந்துவதிலும் இருக்கிற உயிருக்கு வருந்தவேண்டியது அதிகமாகிறது. ஆதலின் நமது தேசத்து அறிஞர்கள் இது விஷயத்தில் இன்னும் ஆழ்ந்தே

போஜித்து ஒரு சரியான முடிவுசெய்யவேண்டும். இத்தகைய புதிய ஏற்பாடுகளுண்டானாலன்றி நமது தேசத்தில் பிள்ளைவீட்டார் பெண் வீட்டாருக்குப்பணம் கொடுப்பதும், பெண்வீட்டார் பிள்ளை வீட்டாருக்குப் பணங்கொடுப்பதுமான கெட்ட பழக்கம் ஒழியாது. நமது இந்தியாதேசத்தில் இரண்டுகோடிபால்ய விதவைகளிருக்கிறார்களென்று தெரிகிறது. இந்த அபாக்கியவதிகளான பெண்மணிகளின் பரிதாபநிலைமை நமது தேசத்து ஜீவகாருண்ணிய முள்ள அறிஞர்களாற் கவனிக்கப்பட வேண்டும்.

## முடிவுரை.

இனி நமது தேசத்தில் நடையுடை பாவனைகளும் நன்றாய்த் திருத்தமடையவேண்டும். பெண்கட்குக் கல்வியுண்டானால் நடையுடைபாவனைகள் நாகரீகமாகத் திருந்திவிடுமாதலின் அதைப்பற்றி அதிகமாகப்பேசவேண்டியதில்லை. நமது தேசத்தில் ஸ்திரீகளைப் போல ஆடவர்களும் நகைகளை அதிகமாக அணிந்து கொள்வதில் விருப்பமுடையவர்களாக இருக்கிறார்கள். புருஷர்கள் நகைகளை யதிகமாக அணிந்து கொள்வது நாகரீகமான வழக்கமல்ல. பெண்களுட் சிலஜாதியார் பெரிய பெரிய நகைகளைத் தாங்கி நிற்கிறார்கள். அதுவும் அநாகரீகமான வழக்கமேயாம். அழகானதும் சிறியதுமான நகையணிவதே பெண்கட்கு இலக்ஷணமாகும். புருஷர்கள் மத சம்பந்தமான அடையாளமும் மோதிரமும் அணிவதே போதுமானது. பொதுவாக நமது தேசத்தில் நகைப்பைத்தியம் குறைவுபடவேண்டும். அன்பர்களே! இத்தகைய விஷயங்களே நாகரீகத்தின் அங்கங்களாகுமென்பது என்னுடைய அபிப்பிராயம். இம்மட்டோடு இச்சபையாரால் எனக்குத்தந்த அவகாசமும் சரியாகிவிட்டதால் என் உபந்நியாசத்தை முடித்துவிடுகிறேன்.

---

# தலைமை வகித்தல்.

தலைமை வகித்தல் பல திறப்படும். குடும்பத் தலைமை, ஊர்த் தலைமை, ஜாதித் தலைமை, நாட்டுத்தலைமை, தேசத்தலைமை, சபைத் தலைமை முதலிய பல தலைமைகளுண்டு. இத்தகைய தலைமைகளை வகித்து நடத்துகிறவர்களே தலைவர்களென்று சொல்லப்பெறுவர். தலைவர்கள் மிக்க சாமர்த்தியசாலிகளாக இருந்தாலன்றி அவர் தலைமையின் கீழ் ஒன்றும் ஒழுங்காகநடைபெறாது. தலைவர்களின் பொதுவிலக்கணத்தைப்பற்றிக் கூறுமிடத்து அவர்கள் முதலிற் பொறுமையுடையோராக இருக்கவேண்டும். இனிமையாகவும், சாந்தமாகவும் பேசிப் பிறரைத் தன்வசமாக்குமியல்புடையோராகஇருக்கவேண்டும். பொதுக்காரியங்களிற் றலையிடும்போது ஒரு சிறிதும் தன்னயங்கருதாத உதார குணமுடையோராக இருக்கவேண்டும். முரட்டுத்தனமாவும், முட்டாள் தனமாகவும் எதையும் செய்யாதவராக இருக்க வேண்டும். தன் தலைமையின் கீழுள்ளவர்களின் சுகத்துக்கங்களைத் தன்னுடைய சுகத்துக்கங்களாக கருதுகிறவர்களாகவும், தனக்குச் சிறிது கஷ்ட நஷ்டங்களுண்டானாலும் தன்னைச் சூழ்ந்திருப்பவர்கட்குச் சங்கடமேற்படாமற் பார்த்துக் கொள்ளக் கூடிய பெரிய மனமுடையோரகவு மிருக்க வேண்டும். தன்னுடைய நன்மைகட்கே தன் தலைமையை யுபயோகிக்கிறவர்களாக இருக்கக்கூடாது. இத்தகைய பொருத்தங்கள் அடைந்தாலன்றி தலைமையை வகிக்க எவனுமருகனல்லன். இனிச்சிறப்பாகக் கூறுமிடத்து சபைத்தலைமை வகிக்கிற ஒருவன் அவசர புத்தியும், படபடப்பும், விஷயங்களைச் சமாதானப் படுத்திச் சாமர்த்தியமாக அபிப்பிராயம் சொல்லுந் திறமையுமின்றி மனம் போனபடி பேசுகிற சுபாபமும், பிரசங்கிகள் ஒன்றைத் தவறிப்பேசி விட்டால் அதைச்சாமர்த்தியமாக எடுத்துக் காட்டாமல் அவமானப் படுத்திப் பேசுகிற முரட்டுச் சுபாபமுமுடையவனாக இருந்தால் அவன் தலைமையின் கீழ் என்ன நடைபெறும்? அவனையறிந்தவர் யாரும் விரும்புவார்களா? அது போலவே நிரந்தரமாகச் சபை நடத்துவோரும், சமநோக்கும் மரியாதையும் பெருந் தன்மையுமுடையோராக இருக்க வேண்டும். உபசார முதலியன அளவோடு ஒரே படியானதாக எப்பொழுதுமிருக்க வேண்டும். தேசத்தலைவர்கள் நல்ல கல்விமான்களாகவும், உழைப்

பாளிகளாகவும், மிகுந்த சாமர்த்தியமும், மனவன்மையு முடையோ ராகவும், திடதைரிய முள்ளவர்களாகவும், நம்பிக்கையும், யோக்கிய முமுள்ளவர்களாகவும், தன்னையங் கருதாதவர்களாகவும், அரசாங் கத்தாரால் மதிக்கப் பட்டவர்களாகவு மிருக்க வேண்டும். அப்படி யல்லாத சாமானியர்கள் தேசத்தலைமை வகிக்க அருகரல்லர். நாட் டுத்தலைவர்கள் எப்பொழுதும் சமாதானத்தை விரும்பினவர்களாக வும், கலகம், கெடுதி முதலிய வம்பான செய்கைகளை வெறுக்கிறவர்க ளாகவும், நாட்டுச் சிறப்புகளையும் தேவதைகளையும் அந்தந்தக் காலங்களில் விமரிசையாகக் கொண்டாடுவதில் ஊக்கமுடையர்களாக வும் இருக்கவேண்டும். ஜாதித் தலைவர்கள் தங்கள் ஜாதியிலிருக்கிற ஊழல்களையும் அசம்பாவிதமான வழக்கங்களையும், அநாவசியமான வழக்கங்களையும் நீக்கி ஆசாரங்களைச் சீர்திருத்தி நடையுடை பாவனைகளைக் காலத்துக்கேற்றபடி புதுக்கி ஜனங்கட்குச் சௌகரிய மான விஷயங்களைக் கவனித்து முயன்று கையாடச் செய்து, ஜாதிக் கட்டுப் பாட்டினின்றும், ஜனங்களைச் சிதறவிடாமல் ஒற்றுமையும் சமாதானமு மடையச்செய்து ஒவ்வொரு நாளும் முன்னேற்றத்துக் குற்ற காரியங்களை விடாமற் செய்து கொண்டு போகவேண்டும். ஜாதித் தலைவர்கள் தான் ஆசார சீர்திருத்தத்துக்கு முக்கியமான வர்கள். ஒவ்வொரு ஜாதியாரும் தங்கள் தங்கள் ஜாதியிலுள்ள ஊழ ல்களைத் திருத்திவிட்டால் அதுவே தேசத்துக்குத் திருத்தமுண் டானதாகும். இனி ஊர்த்தலைவர்கள் தங்களூரில் களவு முதலியன இல்லாமலும், அக்கிரமங்கள் நடவாமலும், குடிதண்ணீர்களைக் கெடுக்காமலும், ஊரிற் குப்பை கூளங்களைக் கண்டவிடமெல்லாம் கொட்டி தொத்து வியாதிகளை யுண்டாக்காமலும் பார்த்துக்கொள்ள வேண்டும். குடும்பத் தலைவர்கள் நல்ல எண்ண முடையோராகவும், யோக்கியமான செய்கை யுடையோராகவும், பேராசை யற்றவர்க ளாகவும், கவைக்கு முதலியன நியாயமாக வைத்திருப்பவர்களாக வும், தனக்குக் கீழுள்ள பிள்ளைகளையோ, சகோதரர்களையோ, அல் லது சகோதரர் பிள்ளைகளையோ, விதந்துவான பெண்களையோ, கௌரவமாகவும், சமாதானமாகவும் நடத்துகிற சாமர்த்தியசாலி களாகவும், எல்லோருக்கும் நன்மையே கருதுகிற உத்தம குணமுள் ளவராகவும், லாபம் கண்ட விடத்துச் சந்தோஷமும் நஷ்டமான வி-

த்துச் சஞ்சலமும் கொள்ளாதவர்களாகவும், எல்லாவகையிலும் தனக்கு லாபமுண்டாகவேண்டுமென்று நினைக்கிற சுயநலப்பற்றற்றவராகவும், இன்னும் பல நற்குணங்களோடு மிருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் தலைமையின் கீழ் ஒரு குடும்பம் நன்கு நடைபெறாது. இப்படியே ஒவ்வொரு தலைவர்களும் தத்தம் கடமைகளைச் சரியாக உணர்ந்து நடத்தாவிட்டால் அவர்கள் கேடடைவதோடு அவர்கள் தலைமையின் கீழ்ப்பட்டாரும் கேடடைய வேண்டி வரும். ஒரு தலைவன் பேராசையால் ஒன்றை வெளவ விரும்பினால் அவனைப் பின்பற்றியோ அல்லது அவனுக்கு எதிராகவோ மற்றவர்களும் அந்தக் கொள்கையைக் கைப்பற்றுகிறார்கள். ஒரு தலைவன் சமாதான மற்றவனாகவும் மூர்க்கனாகவுமிருந்தால் அவன் கீழ்ப்பட்டாரும் அவனை யடக்கு வதற்கு அந்த வேஷமே கொள்ளுகின்றனர். ஒரு தலைவன் அற்பமான காரியங்கட்கெல்லாம் மனத்தாபமும், கலகமும் செய்கிறவனாக இருந்தால் அவன் கீழ்ப்பட்டாரும் அங்ஙனமே செய்கிறார்கள். ஒரு தலைவன் தன்னைச் சூழ்ந்தாரின் நன்மைகளைக் கருதாமல் தன்னயமொன்றே கருதுவானானால் அவனைப் பின்பற்றி மற்றவர்களும் அவ்விதம் நடக்க ஆரம்பிக்கின்றனர். இங்ஙனமே "அரசனெவ்வழி, குடிகளவ்வழி" என்றபடி தலைவன் கெட்டவனாக இருந்தால் அவன் தலைமையின் கீழ்ப்பட்டவர்களும் கெட்டவர்களேயாகிறார்கள். இதை அனுபவத்தில் நாம் பார்க்கிறோம். ஒரு குடும்பத்தில் தலைவன் விபசாரம் செய்கிறவனாகவோ, அல்லது சூதாடுகிறவனாகவோ, அல்லது பொய்க் கேசு போடுவதும் பொய்ச் சாக்ஷிச் சொல்லுவதுமான சுபாபமுடையோனாகவோ, அல்லது மூர்க்கனாகவோ, முறடனாகவோ இருந்தால் அந்தக் குடும்பத்திற் பெரும்பாலும் அப்படியே பரம்பரை வழக்கமாக நடந்து வருகிறது. தலைவர்கள் நல்ல யோக்கியர்களாகவோ, படிப்பாளிகளாகவோ, உதார குணமுடையோராகவோ இருந்தால் மற்றவர்களுமப்படியே யிருக்கிறார்கள். ஒரு ஊரில சேர்ந்தாற் போல் நாலுகிழவர்கள் சூதாடுகிறவர்களாக இருந்தால் அந்த வூரிற்பிறந்த பிள்ளைகளெல்லாம் சூதாடப் பழகிக்கொள்ளுகிறார்கள். ஒரு ஜாதியில் தலைவராகளாக இருப்போர் ஒன்றை ஊழலாகவும், அனுவசியமாகவும், அக்கிரமமாகவும் செய்தால் அந்த ஜாதியார் முழுதும் அதைப் பின்பற்று

கிறார்கள். இப்படியே ஒவ்வொரு விஷயங்களும் தலைவர்களைப் பின்பற்றியே நடந்தேறுகின்றன. ஆகவே ஒரு தேசத்திலோ, ஒரு நாட்டிலோ, ஒரு ஊரிலோ, ஒரு ஜாதியிலோ, ஒரு குடும்பத்திலோ ஒரு கூட்டத்திலோ விஷயங்கள் சரிவர ஒழுங்காக நடைபெறவில்லையென்றால் அதற்குப் பொறுப்பாளிகள் அதனதன் தலைமை வகித்திருப்பவர்களே யாவர். மனிதர்கள் தன் தன் மட்டில் சுதந்தரமுடையவர்களென்றாலும், ஒற்றுமையின் பொருட்டு ஒரு தலைவரை யேற்றுக்கொள்வ தவசியம். தலைவர்கள் திறமையற்றவர்களானால், விபரீதமே விளையுமாதலின் அதை விட்டு ஒழுங்கான வழியில் தானே நடந்துகொள்ளுதல் உசிதமாகும்.

## மனித வாழ்வு.

மனித வாழ்வைப்போல் பலவீனமுடையதும், நிலையற்றதும், நம்பிக்கையற்றதும், கவலையுடையதும், மயக்கமுடையதும் வேறெதுவுமில்லை. மனிதராற் செய்யப்படுகிற பொருள்கட்குள்ள நிச்சயங்கூட அதைச் செய்து முடிக்கிற மனிதர்கட்கில்லை. வீடுகள் இருக்கின்றன, கட்டிய மனிதர்களைக் காணவில்லை. குளங்களிருக்கின்றன, வெட்டிக் கட்டிய மனிதர்களைக் காணவில்லை. மரங்களிருக்கின்றன, வைத்தவர் வளர்த்தவர்களைக் காணவில்லை. அறங்கள் (தர்மங்கள்) நடைபெறுகின்றன, செய்தவர்களைக் காணவில்லை. இப்படியே உலகத்தில் அசேதன வஸ்துக்கட்குள்ள நிச்சயங்கூட மனிதர்கட்கில்லை. "இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்றெண்ணவோ திடமில்லையே" என்றபடி மிகவும் அநித்தியமான வாழ்வையுடைய மனிதர்களாகிய நாம், அந்தோ! நமது மதிமயக்கத்தால் இந்த உலகத்தில் அநேக யுகங்கட்கிருந்து வாழப் போவதாகவும், ஒப்புயர்வற்ற கீர்த்திபெற்று விட்டதாகவும், ஏராளமான செல்வத்தைப் பெற்று விட்டதாகவும், பல பிள்ளைகளைப் பெற்று விட்டதாகவும், மாட மாளிகை கூட கோபுரங்களைக் கட்டி விட்டதாகவும். ஒரு குறையுமின்றி வாழ்வதாகவும், தாழ்ந்தோரென்றும், உயர்ந்தோரென்றும், ஏழையென்றும், செல்வரென்றும், வலியாரென்றும் எளியாரென்றும் பற்பல பேதங்களைக் கற்பித்து மனோராச்சியம் செய்துகொண்டு, அகங்காரமும் கர்வமு மேலிட்டு ஜீவதயை,

உபகாரம், நல்லெண்ணம், நடுநிலைமை முதலிய உத்தம குணங்களை விட்டு உலோபம், வஞ்சகம், பொறுமை நன்றி மறத்தல் முதலிய துர்க்குணங்களுடையவர்களாய் பணத்தையே குல தெய்வமாகக் கொண்டு, பணமுள்ளாரையே மனிதர்களென்று கருதி, அவர்களை யே புகழ்வதும், அஃதில்லாரை யிகழ்வதும், பரிகசிப்பதும், ஆயுள் காலமெல்லாம் பணப் பேய் பிடித்தலைவதுமாக நமது அருமையான ஜன்மத்தைக் வீணாக்கிப் பெரும் பாவிகளாகிறோம். நாம் உற்று நோக்குமிடத்து உண்பது நாழி உடுப்பது நான்கு முழம். ஆனால் எண்ணுவதோ இந்த உலகத்தை யெல்லாம் கட்டியாளவேண்டு மென்று. அம்மட்டோடுதான் ஆசை நின்று விடுகிறதா? இல்லை. வஜ்ர காயமும் முடிவற்ற ஆயுளும் பெற்றாலும் ஆசை யடங்கின பாடில்லை. என்னே! மனிதர்களின் அறிவும் அதன் மயக்கமும் "யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பது முறங்குவது மாக முடியும்" என்ற பெரியார் வாக்கு ஒரு நிமிஷமேனும் மனிதர்களாகிய நமது மனதிற்றங்கி நிற்கவில்லையே! நின்றால் நாம் நமது வாழ்வை எவ் வளவு சுலபமாக நடத்தலாம். நமக்கு எவ்வளவு திரவியமிருந்தாற் போதும்? எவ்வளவு மனைகளிருந்தாற் போதும்? எத்தனை பெண் டிரிருந்தாற் போதும்? எத்தனை கிராமமிருந்தாற் போதும்? எத் தனை ஏவலாட்க ளிருந்தாற் போதும்? எத்தனை வாகனங்களிருந் தாற் போதும்? எவ்வளவு அதிகாரமிருந்தாற் போதும்? எவ் வளவு செல்வாக்கிருந்தாற் போதும்? இவைகட்கு ஒரு முடிவுண்டா? "ஆசைக்கோரளவில்லை" யென்றபடி மேலேற மேலேற ஆசை யதி கரித்துக் கொண்டே போகிறதன்றி "இது போதும், இம்மட்டோடு திருப்தி" யென்று நமது எண்ணம் முடிவடைய வில்லையே! மாயை வயிற்றில் அசுரர்கள் தோன்றியது போலும் புற்றிலிருந்து ஈசல் வருவது போலும் மனத்தினிடத்திருந்து ஆசையானது அதி விரைவாகவும், உற்சாகமாகவும் மளமள வென்று தங்குதடையின்றி உற்பத்தியாகி மனிதர்களை ஹிம்சிக்கிறது. அந்த ஹிம்சைக் கஞ்சி மனிதர்களாகிய நாம் படுகிற பாடு கொஞ்சமன்று. மனம் விரும்பு கிற ஒவ்வொரு பொருளையும் தேடியலைகிறோம். அதை யடையாத விடத்து மனமென்னும் துஷ்டன் தனது ஏவலாளராகிய ஆசை யென்னும் கலகக்காரர்களை மேன்மேலும் தூண்டி நம்மை அல்

லோல கல்லோலப்படுத்துகிறான். வஞ்சகனை யனுப்புகிறான், பொய்யனை யனுப்புகிறான், திருடனை யனுப்புகிறான், உலோபனை நம்மோடு கூடவே வைத்திருக்கிறான். இப்பரம துஷ்டர்கள் நம்மைத் தங்கள் வசப்படுத்திப் படாதபாடு படுத்துகிறார்கள். மனமென்னும் பாதகன் தான் விரும்புவதைப் பெறும் விஷயத்தில் நம்மைக் கொலை செய்யவும் சம்மதிக்கிறான். பசியாலும் நோயாலும் கஷ்டப்பட்டாலும் அவனுக்கு இரக்க முண்டாவதில்லை. ஜீவகாருண்ய மற்ற அம்மன மென்னும் பேய்க்குரங்கு சாமான்யத்தில் நமக்கு வசப்படுவதன்று. பாய்மரத்திலிருந்து கொடிமரத்திலும் கொடிமரத்திலிருந்து குட்டிச்சுவரிலும் ஒரு கணத்திற் றாவுகிற அக்குரங்கு வசப்படுவதென்றால் என்ன சாமான்யமோ! அக்குரங்கின் சுபாவம் கண்டதையும் கேட்டதையும் விரும்புவது, விரும்பியதைக் கொடா விட்டால் கலகம் செய்வது. உண்ண விடுவதில்லை, உறங்க விடுவதில்லை, மல்யுத்தம் செய்வது. இத்தகைய கெட்ட சுபாவமுடைய துஷ்டக் குரங்குக்கும் அதன் ஏவலாளராகிய ஆசையென்னும் சதிகாரருக்கும் அஞ்சியன்றோ மனிதர்களாகிய நாம் இந்த உலகத்தில் மனச்சாக்ஷிக்கு விரோதமாகவும், நடிப்பாகவும் பற்பல காரியங்களைச் செய்கிறோம், பொய் பேசுகிறோம், வஞ்சிக்கிறோம், ஏமாற்றுகிறோம், சூது செய்கிறோம், முகஸ்துதி பேசுகிறோம், அனுவசியமாகத் தோத்திரம் செய்கிறோம், செய்நன்றி மறந்து பேசுகிறோம், ஒரு நலனுமில்லாத உலோபிகளைக் குங்குமஞ் சுமக்கிற கழுதைகளென்றெண்ணமல் அவர்களுடைய பொருட்பெருக்கை மதித்துப் புகழ்கிறோம், ஏற்றுகிறோம், போற்றுகிறோம்? இப்படி வாழ்ந்தாருக்கு மாரடிப்பதெல்லாம் அந்தோ! வயிறு வளர்ப்பதற்குத்தானே? "மிடுக்கிலாதானை வீமனே, விறல் விஜயனே வில்லுக்கிவனென்றும்...கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினும் கொடுப்பாரிலை" என்ற நமது சுந்தரமூர்த்தி சுவாமிகளின் அருமைத் திருவாக்கின்படி வீண்தோத்திரம் முதலியன செய்வதற்கெல்லாம் நமது பழுதுற்ற மனமும் முடிவற்ற ஆசையுமே யன்றோ காரணமாகின்றன? மனத்தைத் திருப்தி செய்வதே செல்வத்துக்கு முடிவாகும். வேறு எவ்வழியிலும் ஆசைக்கு முடிவு காண முடியாது. இதையே "செல்வமென்பது சிந்தையின்

நிறைவே" என்றார் பெரியோர்கள். அறிவுள்ள மனிதர்களாகிய நாம் மனதைத் திருப்தி செய்கிற வழியைக் கூடியவரை முயன்று கண்டுபிடித்து இயன்றவரை கையாடினாலன்றி நமது அருமையான ஜன்மமும் வாழ்வும் உபயோக மற்றனவாகிவிடும். பிறப்பிறப்பென்னுங் கடலை நாம் ஒருபோதும் கடக்கமாட்டோம். இந்த உலகத்தில் நாம் ஏன் பிறந்தோம்? எதற்காகப் பிறந்தோம்? யாருக்காகப் பிறந்தோம்? முன் ஜன்மத்திற் செய்த வினையின்பயனை யனுபவித்தற் பொருட்டு நாம் நமக்காகவே பிறந்தோம். அது நல்வினையோ தீவினையோ வென்றறிதற்கு "இறந்த பிறப்பிற் றான் செய்த வினையைப் பிறந்த பிறப்பாலறிக" என்றபடி நாம் பிறந்திருக்கிற குலம், குடி, இயல்பு, செல்வம் முதலியனவே சான்றாகும். ஆனால் எத்தகைய உயர் குலம் குடிகளிற்பிறந்தாலும், செல்வத்திற் பிறந்தாலும், சக்கிரவர்த்தி வீட்டிற் பிறந்தாலும், தாழ்மையான வீட்டிற் பிறந்தாலும், எல்லோருக்கும் பிறப்பும் இறப்பும் ஒரே தன்மையுடையது தான். சக்கிரவர்த்தியின் மனைவியாரும் பத்து மாதம் சுமந்து கஷ்டப்பட்டுத்தான் பிரஸவிக்கிறாள். மேலான மனிதர்களும் மரணவாதைக் குள்ளாகிறார்கள். உதாரணமாக சென்னபட்டணம் போவதற்கு ரோட்டு மார்க்கமு மிருக்கிறது. ரயில்பாதையு மிருக்கிறது. ரயில்வண்டித் தொடரில் முதல் வகுப்பு இரண்டாம் வகுப்பு மூன்றும் வகுப்பு என்று வித்தியாச மிருக்கிறது. ஆனால் முதல்வகுப்புப் பிரயாணிகளும் மற்ற வகுப்புப் பிரயாணிகளும் போய்ச்சேருவது ஒரே இடந்தான். ரோட்டு மார்க்கமாக வண்டியிலாவது அல்லது நடந்தாவது போகிற பிரயாணியும் போய்ச் சேருகிற இடம்ஒன்று தான். ஆனால் பிரயாண சௌகரியம் வித்தியாசப் படுகிறது. அதுபோலவே எல்லா மனிதர்கட்கும் பிறப்பும் இறப்பும் ஒரே தன்மையுடையது தான். இடைக்காலத்திற் பற்பல விதமாக வாழ்வு வித்தியாசப்படுகிறது. அதுதான் மனிதர்களை உயர்ந்தோர் தாழ்ந்தோரென்று வித்தியாசப் படுத்துகிறது. அந்த வாழ்வும் நிச்சயமாக ஒருவனிடத்தில் நிலைத்து நிற்பதில்லை. இன்றைக்கு ஏழையென்பவன் நாளைச் செல்வனாகிறான். இன்றைக்குச் செல்வனென்பவன் நாளை யேழையாகிறான். ஓடம் வண்டியிலேறுகிறது. வண்டி ஓடத்திலேறுகிறது.

கண்மூடித் திறப்பதற்கு முன் எத்தனையோ மாறுதல்களடைந்து விடுகின்றன.

இதற்கு உதாரணமாக இங்கே ஒரு கதை சொல்லிவிட்டு மேலேபேசுவோம். ஒரு நாள் ஒரு ஏழைப்பெண் பளுவான சுமையொன்றைத் தலையிற்றாங்கி ஒரு குழந்தையைக் கூட்டிக்கொண்டு தன் ஊர்நோக்கி வழி நடந்தாள். வெயில் அதிக கடுமையாக இருந்தமையாலும், வயிற்றுப் பசியாலும் அக்குழந்தை களைத்து நடக்கமுடியாமல் விழுந்துவிட்டது. குழந்தையையும் சுமையையும் தூக்கமுடியாமல் அப்பெண் மனங்கலங்கி வருத்தமுற்றுத் தனக்குப் பின்னால் வருகிற வண்டியொன்றை எதிர்பார்த்து ஏங்கிய முகத்தோடு நின்றாள். சமீபத்தில் வண்டி வந்தது. அது தம்மூர் வண்டியென்றும் அதிலிருப்பவர் ஒரு கப்பலுக்குச் சொந்தக்காரரான பிரபு வென்றும் தெரிந்து அவருடன் பேசப்பயந்து வண்டிக்காரனிடம் பல்லைக்காட்டி "அண்ணே! இந்தக் குழந்தையைக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும். நான் இந்தச் சுமையை எடுத்துக்கொண்டு மெள்ளமெள்ள வருகிறேன். உனக்குப் புண்ணியமுண்டு. தயவுசெய்யவேண்டும்." என்று இரந்து கேட்டுக்கொண்டாள். அந்த ஜீவகாருண்யமுள்ள வண்டிக்காரனுக்குச் சம்மதமேயென்றாலும் எஜமானுடைய கோபத்துக்கஞ்சிக் கண்ணைக்காட்டி எஜமானிடம் கேட்டுக்கொள்ளச்சொன்னான். அவ்வேழைப்பெண் வண்டிக்குப் பின்புறமாகப்போய் மிகுவணக்கமாகவும் அச்சமாகவும் தன் வேண்டுகோளைத் தெரிவித்தாள். அப் பாவியான எஜமான் கண் சிவந்து "அடி தரித்திரம்பிடித்த நாயே! உனக்கு வண்டி வேண்டுமா? நீ அவ்வளவுக்கு உயர்ந்துவிட்டாயா? உன் மகன் என்னுடன் சமமாக இருக்கத் தகுந்தவனா? நாவஞ்சாமல் அவ்வளவு துணிவுடன் கேட்டதென்ன" வென்று தன் காலால் எட்டி முகத்தில் உதைக்கவே அம்மாது மல்லாந்து விழுந்து மண்டையுடைபட்டாள். இதைக்கண்ட இரக்கமுள்ள வண்டிக்காரன் அடங்காத் துக்கமுற்று வண்டியினின்றுங் குதித்து அப்பெண்ணைத் தூக்கித் தண்ணீர் கொடுத்து ஒரு மர நிழலிற் கொண்டுபோய்க் களைப்பாற்றினான். அதை அந்தப் பெருமையும் கர்வமுமுள்ள மூடனான எஜமான் கண்டு அவ்வண்

டிக் காரனை நிந்தித்து வேலையை விட்டு நீக்கிவிட்டதாகச் சொல்லிவிட்டுத் தானே வண்டியை நடத்திக்கொண்டு சென்றான். சிறிது தூரம் சென்றதும் தனக்கெதிரே அதிவேகமாக வருகிற வண்டியொன்றைக் கண்டு அதை நெருங்கிப் பார்த்த பொழுது அதிலிருப்பவன் தன்னூரா னென்றும் அதிக நாளாகத் தூரதேசம்போய் ஒரு தாக்கலும் தெரியாமலிருந்தவனென்றும் தன்னு லுதைபட்டு மண்டையுடைந்து வீழ்ந்த பெண்ணின் புருஷ னென்றும் அதிக திரவியத்தோடு திரும்பி வந்திருக்கிற குறிகளையுங் கண்டு அச்சத்தோடும் வெட்கத்தோடும் மிக மரியாதையாக ஐயா! எப்பொழுது வந்தீர்கள் என்றான். அக்கேள்விக்குப் பதிலில்லாமல், வந்த மனிதன் ஐயா! அநியாயமாக உங்களுடைய கப்பல் புயலிற் பட்டுக் கடலில் மூழ்கிவிட்டதென்று பதிற் சொன்னார். அந்த வார்த்தையைக் கேட்டதும் சற்றுநேரத்திற்குமுன் தன்னைப்பற்றி வியந்து பாராட்டிப் பேசிக்கொண்ட அந்தக் கர்வமுள்ள மனிதன் தன் செருக்கும் சீரும் குலைந்து பதைபதைத்துக் கதறிக்கொண்டு கீழே வீழ்ந்தான். வந்த மனிதன் அவனைத் தேற்றித் திடங்கூறித் தான் உதவி செய்வதாக வாக்களித்துத் தன் மனைவி மக்களைப்பற்றி எதுவும் தெரியுமோவென்று கேட்க அப்பேய்மகன் மிரளமிரள விழித்தான். இதற்கிடையில் வண்டிக்காரன் சுமையையும் குழந்தையையும் எடுத்து வர அப்பெண்மணி தலைவிதியை நினைந்து அழுதுகொண்டு வருவதைக்கண்ணுற்ற அம்மனிதன் விரைந்தோடி மகனையும் மனைவியையும் தழுவி சமாசாரங்களை விசாரிக்க அப்புண்ணியவதி விவரமாகத் தன் புருஷனுக்குக்கூறி செருக்குற்ற அந்த அறிவிலியை மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டாள். அப்படியே மன்னித்ததோடு வாக்குறுதிப்படி உதவியும் செய்தான். வண்டிக்காரன் நல்ல நிலையைப் பெற்றான். பாருங்கள்! வாழ்வும் தாழ்வும் எவ்வளவு விரைவாக மாறுகிறது. 'கப்பற்காரன் பேச்சு ஒரு காற்றடித்தாற் போச்சு' என்ற பழமொழிப்படி ஒரு நிமிஷத்தில் மாறிவிடுகிறது. ஆதலின் இந்த நிலைகெட்ட வாழ்வை நாம் ஸ்திரமாக நம்பிப் பெற்றவிடத்துச் சந்தோஷமும் பெறுதவிடத்துத் துக்கமுமடையவேண்டியதில்லை. நல்வினையின் பயனாக நமக்கு ஏற்கண

வே ஏராளமாகச் செல்வப்பெருக்கு முதலியன அமைந்திருந்தா லும் அல்லது நமது முயற்சி கைகூடி அத்தகைய சௌகரியங் கள் நமது காலத்திலேற்பட்டாலும் நாம் இந்த உலகத்தில் முதல் வகுப்புப் பிரயாணியாக இருப்போம். அப்படி யமையாமல் நாம் செய்த தீவினையின் பயனாக நமக்கு அசௌகரியங்களேற் பட்டால் அதற்குக் கீழ்ப்பட்ட வகுப்புகளிற் பிரயாணஞ் செய் வோம். அதற்கும் வழியின்றி தரித்திரமும் கஷ்டமும் நேர்ந் தால் அப்பொழுதும் சலிப்பில்லாமல் விசேஷ தைரியத்தோடு கட்டைவண்டி அல்லது முடிவிற் கால்நடையாகவாவது நாம் நமது பிரயாணத்தை நிறைவேற்றுவோம். இதற்காக நாம் நமது மனச் சாக்ஷிக்கு விரோதமாக எதையும் செய்யவேண்டியதில்லை. பெரி யாரைப் போற்றுவோம், உத்தமர்களை ஏற்றுவோம், நல்லவர் களை நாடுவோம், அன்புள்ளவர்களைத் தேடுவோம், நம்மை மதி ப்பாரை நாமும் மதிப்போம், நம்மை வெறுப்பாரை நாமும் வெறுப்போம், நம்மை நினையாரை நாமும் மறப்போம், கடவு ளுக்கும் உண்மைக்கும் அன்புக்குமன்றி வேறே யாருக்கும் எதற்கும் நாம் அஞ்சவேண்டியதில்லை, எப்பொழுதும் மனத்தி ருப்தியோடு சந்தோஷ மாகவே இருப்போம், நம்மாலியன்ற உதவியை ஒரு சிறிதும் மறைக்காமல் உலகத்துக்குச் செய்வோம், பிறர் வாழ்வைப் பார்த்து ஆனந்தமடைவோம், ஏழைகட் கிரங் குவோம், ஆதரிப்போம், எப்பொழுதும் அறிவுள்ளவர்களோடு வசிப்போம், தர்மிஷ்டர்களையும் புத்திமான்களையும் நேசிப்போம். உத்தமர்களை வலிந்து சென்று நட்புக்கொள்வோம், எட்டாத கனிக்கு இச்சைப்படாமல் கிடைத்த மட்டில் திருப்தியடைவோம், நம்மை நம்பினோரை ஆதரித்து நமது வாழ்வை உற்சாகமாக நடத்துவோம், எப்பொழுதும் முயற்சியுடையவர்களாக இருப் போம், நமது பகைவரேயாயினும் அவர்கட்குக்கேடு நினைப்பதி ல்லை யென்று உறுதி செய்து கொள்ளுவோம்.

நமது வாழ்வை இந்தவகையிற் றிருப்பினால் தாமரையிலைத் தண்ணீர்போல இந்த உலகத்தில் நாமீடுபடாமல் சந்தோஷமாக வாழலாமென்பது சாத்தியமாகும். ஆனால் நமக்குத் தாழ்மை யான வாழ்வு நேர்ந்தவிட்த்து மற்ற மனிதர்கள் கண்டு நகைப்பார்

களை, பரிகசிப்பார்களே என்ற எண்ணம் நம்மை வாதிக்கக் கூடும். நம்மைப்போலவே சிறு பொழுது இந்த உலகத்தில் வாழுகிற பேதை மக்கள் நகைத்தா லென்ன? அவர்கள் எவ்வளவு காலத்துக்கிருந்து நகைக்கப் போகிறார்கள்? நாம் எவ்வளவு காலத்துக்கிருந்து நாணப் படப் போகிறோம்? சந்தைக் கடையை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அது எவ்வளவு விரைவாகக் கூடி எவ்வளவு சீக்கிரம் கலைந்து விடு கிறது. அங்கே பரிகசிப்பதையும் நகைப்பதையும் யார் கவனிக்கிறார் கள்? அது போல இந்த உலகமென்னும் சந்தைக்கடையில் நாம் வந்த வேலையை முடித்துக்கொண்டு திரும்பிவிடுவோம். நம்மைப் பார்த்து யார் சிரித்தாலென்ன? யாரழுதாலென்ன? அதை நாம் பொருட்படுத்த வேண்டிய அவசியமென்ன? இன்றைக்கு இகழப் படுவார் நாளைக்குப் புகழப்படுவர். சுகமும் துக்கமும் மாறி மாறி வரு கிறது. ஒவ்வொரு மனிதனும் சுக துக்கங்களைக் கலந்தே அனு பவிக்கிறான். சுகமயமாகவாவது, துக்கமயமாகவாவது ஒரேபடி யாக அனுபவித்த மனிதன் யாருமில்லை. ஆனால் தரத்துக்குத் தக்கபடி சுக துக்கங்கள் உருமாறிவரும். ஏழைக்குத்துக்க மென்ன? கஞ்சியில்லாமை. அரசனுக்குத் துக்கமென்ன? அரசிழத்தல். என்றாலுஞ் சஞ்சல மொன்றுதான். எத்தகைய பெரிய மனித னும் துக்கமற்ற சுகத்தை யனுபவிப்பதில்லை. உதாரணமாக சமீப காலத்தில் டெல்லியில் பெரிய சக்கிரவர்த்தியாக இருந்து இந்தியா முழுதும் கட்டி 91 வயதுக்கிருந்து கொடுங்கோலரசு செய்தாண்ட மொகல் அரசனாகிய ஔரங்கசீப் என்பவர் தமது அந்தியகாலத்தில் அமட்நகரத்திலிருந்து டெல்லிக்குத் தன் மகனுக்கு அடியில் வரு மாறு எழுதுகிறார்:—

"நான் பிறந்த காலத்தில் அநேகர் என்னைச் சூழ்ந்திருந்தனர். இறத்தலான இக்காலத்தில் எவரும் என் சமீபத்திலில்லை. நான் தனியாகவே போகிறேன். எங்கிருந்து வந்தேன், எங்குபோய்ச் சேருவேன் என்ப தொன்றும் எனக்கு விளங்கவில்லை. தேசத்துக் காவது ஜனங்கட்காவது நான் யாதொரு நன்மையும் செய்யவில்லை. கடவுள் என் ஹிருதயத்தில் வீற்றிருக்கிறார். இருந்தும் இருண்ட என் கண்கட்கு அவருடைய பிரகாசந் தோன்றவில்லை. இந்த உல கத்துக்கு வரும்போது நான் ஒன்றும் கொண்டுவரவில்லை. போகும்

போது மாத்திரம் பாப மூட்டை கட்டிக்கொண்டு போகிறேன்" என்று எழுதி முடித்தார். பாருங்கள்! ஒரு பெரிய சக்கிரவர்த்தியின் பரிதாப நிலைமையை!!

"பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லைப் பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை யிடைநடுவிற்
குறிக்குமிச் செல்வம் சிவன்றந்த தென்று கொடுக்கறியா
திறக்கும் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே"

என்ற பட்டினத்தடிகள் திருவாக்கின்படி புண்ணிய மின்றிப் புகழு மின்றி ஜீவகாருண்ணியம், பரோபகாரம், நல்லெண்ணம் முதலிய உத்தம குணங்களின்றிப் பிறருக் கிடையூறு செய்தும், ஹிம்சித்தும், அடாபிடி செய்தும், அந்நியாயம் செய்தும், ஆசை வாய்ப்பட்டு அலைப்புண்டும், ஒரு நிமிஷ மேனும் கவலையற்றுக் கலக்க மற்றிராமல் கழிபெருஞ் செல்வக் கள்ளாட்டயர்ந்து மதிகெட்டு மயங்கிக் கிடக்கும் மக்களாகிய நமக்குச் சக்கிரவர்த்தியின் கடிதம் நல்ல புத்தி மதியை யுண்டாக்குவ தாகுமன்றோ? இன்னும் எத்தனையோ சக்கரவர்த்திகளும் அரசர்களும் தங்கள் வாழ்நாளிற் பற்பல கஷ்ட நஷ்டங்களை யடைந்திருக்கிறார்கள். சுகத்துக்குத் தக்க துக்கமும், துக்கத்துக்குத் தக்க சுகமும் உண்டாகும். மனிதன் என்று பிறந்தானோ அன்றே அவனுடன் சுக துக்க மிரண்டும் கூடவே பிறக்கின்றன. நாம் இதை யுற்று நோக்கி யுணர்ந்து நமக்குண்டாகிற வாழ்வையும் தாழ்வையும் சமமாகவே மதிப்போம், வாழ்வும் தாழ்வும் தனிதர்கட் கியற்கை யென்பதை யுணர்வோம், அறிவில்லாத பாமரர்களின் நகைப்பையும் இகழ்வையும் பற்றி நமக்குக் கவலை வேண்டியதில்லை, நம்முடைய வினைக்குத் தக்கபடி நமது வாழ்வை நடத்துவோம், கூடிய வரையில் முயலுவோம், பாலும் சோறும் பல்லக்கு மகப்பட்டாலும் அதை யனுபவிப்போம், கூழும் உப்பும் கூலிப் பிழைப்பும் நேர்ந்தாலும் அதையும் சந்தோஷமாக ஏற்று அனுபவிப்போம். எத்தகைய வாழ்வுக்கும் உலகத்திற் கடவுள் இடம் வைத்திருக்கிறார். கோடீஸ்வரனாக இருந்து வாழவும் இடமுண்டு. கூலிக்காரனாக இருந்து வாழவும் இடமுண்டு பெரிய மனிதனுக்கும் இந்த உலகத்தில் இடமுண்டு

பிச்சைக்காரனுக்கும் இடமுண்டு. ஒரு நாளைக்கு ஆயிரமாயிரமாகச் செலவு செய்து கொண்டும் வாழலாம். அரை கால் செலவு செய்துகொண்டும் வாழலாம். அதுவுமில்லாமலும் வாழலாம். மச்சு வீட்டிலும் வசிக்கலாம். குச்சு வீட்டிலும் வசிக்கலாம். நமது மனமட்டிலும் மாசற்றிருந்தால் எல்லாம் சந்தோஷமான வாழ்வேயாகும். பாப புண்ணியத்தைத் தவிர வேறெதுவும் நம்மைப்(ஆத்மாவை) பற்றிக்கொண்டிருக்கவில்லை. உயிருக்கு உடலும், உடலுக்கு சுக சௌகரியமும் சுக சௌகரியத்துக்கு இடம் பொருள் ஏவலும், இவைகட்கு நிலைமையாக மனை வாழ்வும் இப்படிப் புளியின் பழம் போல் ஒன்றி லொன்று ஒட்டாமல் தொடர்புற்று நிற்கின்றன. உயிர் நீங்கினால் ஒன்றுமில்லை. எல்லாம் அப்படி அப்படியே நின்று விடும்.

> "அத்தமும் வாழ்வும் அகத்துமட் டேவிழி யம்பொழுக
> மெத்திய மாதரும் வீதிமட் டேவிம்மி விம்மிஇரு
> கைத்தல மேல்வைத் தழுதுமைந்த ரும்சுடு காடுமட்டே
> பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே"

என்று முற்றத் துறந்த பட்டினத்தடிகள் கூறியபடி நமக்குப் பின் வருவது பாபபுண்ணியங்க ளிரண்டுமேயாம். ஆதலின் நாம் ஆசையும் ஏக்கமு மற்றுக்கிடைத்த மட்டிற் றிருப்தி யடைந்து பிறருக்குத் துன்பமுண்டாகாமல் கூடிய மட்டில் உபகாரியாக இருந்து நல்லெண்ணத்தோடு மனச்சாக்ஷிக்கு விரோதமில்லாமல் நடந்து இந்த உலகத்தில் நமது வாழ்வை இனி நிறைவேற்றுவோம். அதுதான் மேலான மனித வாழ்வாகும்.

---

## நமக்கு நல்ல துணையெது?

---

மனித வாழ்வில் இயற்கையாக அடிக்கடி யேற்படுகிற சங்கடங்களை மாற்றிக்கொள்வதற்குப் பிரதி மனிதனுக்கும் ஒரு நல்ல துணை வேண்டியது நிரம்ப அவசியமாகும். எவ்வளவு பெரிய தனவந்தனானாலும் செல்வாக்குடையவனானாலும் கௌரவ

ஸ்தனானாலும் அரசனானாலும் சக்கிரவர்த்தியேயானாலும் தன் வாணாளிற் கவலையற்றிருக்கமுடியாது. பிள்ளைக்குறை செல்வக் குறை கல்விக்குறை பிறந்தகுறை இறந்தகுறை முதலிய பல்லாயிரங்குறைகளுள் சில குறைகளிருப்பதும் மாறுவதும் பின் சில குறைகள்வருவதும் சமுத்திர அலைபோற் சகஜமாகவேயிருக்கும். அந்தஸ்துக்குத் தக்கபடி பெரிய மனிதனுக்குப் பெரிய குறையாக வந்துசேரும். உதாரணமாக ஒரு கூலிக்காரனுக்குத் தன் வயிற்றுப் பசியை மாற்றுவதிற் கவலையுண்டாகும். அதற்கு மேற்பட்ட கவலையவனுக்கில்லை. ஆனால் ஒரு அரசனுக்கோ ஒரு பெரிய இராஜ்ஜியத்தைக் காப்பாற்றவோ கைப்பற்றவோ கவலை ஏற்படும். அது எவ்வளவு பெரிய கவலை பாருங்கள். அதற்காக எவ்வளவு சேனைகள், தந்திரிகள், பொருள், வல்லபம் வேண்டும். இப்படியே அந்தஸ்துக்குத் தக்கபடி மனித வாழ்விற் கவலையேற்படுவது இயற்கையாக இருக்கிறது. கூழுக்கு உப்பு இல்லையென் பார்க்கும் பாலுக்குச் சீனியில்லையென்பார்க்கும் கவலை யொன்றுதானன்றோ? ஆனால் தாழ்ந்த நிலைமையிலிருப்பவன் தனக்குச் சற்று மேலுள்ள ஒருவனை நினைத்து, அவன் நல்வாழ்வைப் பெற்றிருக்கிறானென்றும் தான் அந்த நிலைமையடைந்தாற் போதுமென்றும் எண்ணுகிறான். அந்த மேலுள்ளவனோ தன் வாழ்வையவமதித்துத் தனக்கு மேலுள்ள ஒருவன் வாழ்வில் ஆசை வைக்கிறான். உதாரணமாக 10000 ரூபாய்ப்பணக்காரன் 25000 ரூபாய்ப்பணக்காரனாக ஆசைப்படுகிறான். 20000, 30000 வைத்திருப்பவன் ஒரு லட்ச ரூபாய்க்கு ஆசைப்படுகிறான். இப்படியே ஒருவனையொருவன் பார்த்து "ஆசைக்களவில்லை" என்றபடி மேலே மேலே நோக்கிச் செல்லுகிறான். ஒரு மனிதனாவது தன் மட்டில் தன் வாழ்வு சிறப்புடையது என்று சமாதானமடைந்திருக்கமாட்டான் என்பது நமது துணிபு. இந்தப் பேராசையில் பாமரர், பண்டிதர், செல்வர், சாமானியர், அரசன், பிச்சைக்காரன் முதலிய எல்லா வகை மனிதரும் ஒரே தன்மையுடையவர்கள் தான். ஆகவே எவ்வளவு உயர்ந்ததாயினும் மனித வாழ்வு கவலையுடையதென்பதிலையமில்லை. இந்தப் பெரிய கவலை என்னும் கடலை நீந்துதற்கு ஒரு தெப்பம்போன்ற துணைவேண்டும்.

அந்தத்துணை யெதுவென்றுதான் நாம் நன்றாயாராய்ந்து கண்டுபிடிக்கவேண்டும். அது எதுவாக இருக்கலாம்? பொருளாக இருக்குமா? பொருளைச் செலவு செய்தால் சுகமாக வசிக்கலாம். செல்வாக்கைப் பெறலாம். பட்டங்கள் வாங்கலாம். புண்ணியங்களைச் செய்யலாம். எவ்வகையிலும் மேன்மை யடையலாம். சந்தேகமில்லை. ஆனால் பிறந்த பிள்ளை யொன்றிறந்து போனாற் பெரிய துக்கம். ஆகவே பொருள் முழுக்கவலையையும் மாற்றும் சக்தியுடையதன்று. கல்வியாக இருக்குமா? நன்றாய்க் கற்றிருந்தாற் சென்றவிடமெல்லாம் சிறப்புத்தான். அறிவு விசாலமாக இருக்கும். பார்த்தோர் கேட்டோரெல்லாம் கனப்படுத்துவார்கள். எல்லாம் நன்மையாகத்தானிருக்கும். ஆனால் கற்றவர்கள் துக்கம் வருமுன்னமே வருமென்று தங்களறிவாற் கண்டு கவலையடைய ஆரம்பித்துவிடுவார்கள். வந்தவுடன் அதை நுணுகி நுணுகி ஆராய்ந்து கவலைப்படுவார்கள். ஆகவே அவர்கள் கல்வியவர்களை இரட்டிப்புத் துன்பத்துக்காளாக்குகிறது. ஆதலினதுவுமன்று.

கௌரவமாக இருக்கலாமா? அந்தோ! அது பெரிய தலைச்சுமை. கௌரவஸ்த னொருவன் ஒரு சிறு குற்றம் செய்தாலும் அதை மலையிலிட்ட தீபம்போல் யாவருமறிந்து பரிகசிக்க வருவாரும். மேலும் கௌரவஸ்தன் எங்கு சென்றாலும் தனக்கு மரியாதை ஏற்படவேண்டி விரும்புவதால் மனிதனடையவேண்டிய பல ஆனந்தங்களை யிழக்கவேண்டியவனாகிறான், கௌரவமென்னும் தலைச் சுமையை இறக்கும் வரையில் (சரீரம் இறக்கும் வரையில்) நிரம்ப ஜாக்கிரதையோடு அதனைத் தாங்கி நிற்கவேண்டியதால் அதற்குக்கவலையை மாற்றும் சக்தியிருக்கிறதென்பது பொருந்தியதன்று. மேலும், செல்வம், கல்வி, கௌரவம் இவைகளைச் சாமானியமாக எல்லா மனிதர்களு மடைந்திருப்பதில்லை. ஆகவே இவைகளைக் கொண்டு கவலையை மாற்றலாமென்று நாம் சொல்வதும் பிரயோஜனமுடையதாகாது. நாம் கண்டுபிடிக்கிற சக்தி எல்லோருக்கும் உபயோகமானதாகவே இருக்கவேண்டும். சாமானியமான ஒரு ஏழைப்பிச்சைக்காரனுக்கும் உபயோகப்பட

க்கூடியதாக இருக்கவேண்டும். பெரிய அரசனுக்கும் உபயோக ப்படக்கூடியதாக இருக்கவேண்டும். அத்தகைய துணை யெது?

அதுதான் தைரியம். தைரியமென்றால் அதன் பெருமை அளவிடமுடியாது. மனிதவாழ்வென்னும் கவலைக்கடலை நீந்து தற்கும் கரையேறுதற்கும் இதைப்போன்ற உதவியுள்ள தெப்பம் வேறில்லை. இது அரசன் முதல் பிச்சைக்காரன் வரை யாவருக்கும் ஒரேவிதமான உதவியாயுள்ளது. அரசன் தன் பகைஞரை வென்று ஜயம் பெறுதற்கு வேறு வல்லபங்கள் எவ் வளவு மிகுந்திருந்தாலும் தைரியமொன்றில்லாவிடில் ஒருபோதும் வெற்றிபெற முடியாது. பிச்சைக்காரன் பிச்சை கிடைக்காத போது சீச்சீ இந்த ஒரு சாண்வயிற்றுக்காகவா நான் கவலைப் படு வேன்? எப்படியானுலென்ன? இந்த உபயோகமற்ற சரீரம் போய் விட்டாலென்ன? என்று தைரியமடைவானேல் அவனுக்குண்டாகிற ஆனந்தம் யாருக்கு வரும்? பசி, தானே போய்விடுமன்றோ? இப் படியே வியாபாரத்தொழில்களில் பிரபு, சாமானியன், உத்தியோ கஸ்தன் முதலிய யாவரும் தம் வாழ்விற்திருப்தி யடையவேண்டு மானுல் தைரியத்தைக் கைவிடக்கூடாது. தைரியமில்லாதவன் மனதில் துக்கம் குடியேறிவிடும். அவனுக்குக் கெம்பீரமான பேச் சும் முக வசீகரமும் இரா. அவனுக்கு எல்லா நலன்களும் பொரு ந்தியிருந்தாலும் துக்கம் வராமலிராது. மனைவிமக்களாவது சுற்றத் தாராவது தாய் தந்தையராவது சகோதர சகோதரிகளாவது, ஒருவர் இறந்தால் துக்கம் வராமல் என்ன செய்யும்? அப்போது அதற்குச் சமாதானஞ் செய்து கொள்ளத் தைரியத்தைத் தவிர வேறு துணையுண்டா? நிலையற்ற செல்வம் தன்னியற்கைப்படி சிறிதுமாறுதலடைய ஆரம்பித்தால், துக்கம் வராமலென்ன செய் யும்? அப்போது வரட்டும், போகும்போது போனால் வரும்போது வருமென்று தைரியமடைவதைப்போல் ஆறுதல் வேறென்ன?

"சாதலும் பிறத்தல் தானும் தன்வினைப் பயத்தினாகும்
ஆதலும் அழிவு மெல்லாம் அவைபொருட் கியல்பு கண்டாய்
நோதலும் பரிவு மெல்லா நுண்ணுணர் வின்மை யன்றே
பேதைநீ யெரிதும் பொல்லாய் பெய்வளைத் தோளியென்றான்"

—சீவகசிந்தாமணி.

என்ற அறிஞர் வாக்கை நாம் கடைப் பிடிக்க வேண்டும். பிள்ளையைப் பெறவேண்டுமென்று கவலைப்படுகிறோம். அதிலுண்டாகிற துன்பங்களை யாராய்ந்தால் பெறாமலிருப்பவன் நல்ல புண்ணியஞ் செய்தவனென்று தோற்றும். பெறாதவன் சாமானிய அறிவுடையோனாயிருந்தாலும் அவனுக்குப் பெறவில்லையே என்ற ஒரே கவலை. பெற்றவனுக்குப் புற்றீசல் போல் வரிசை வரிசையாகக் கவலை வந்துகொண்டேயிருக்கும். பிள்ளைக்கு நோயென்றால் தனக்கு மரணம் வந்தது போலிருக்கும். "கடந்த ஞானியும் கடப்பரோ மக்கண்மேற் காதல்" என்றபடி பிள்ளை வாஞ்சை யெல்லாவற்றிலும் பெரிது. நல்லபிள்ளை யொன்றிறந்து போனால் அந்தோ! அத்துக்கம் எல்லையற்றது. ஆனால் மரணமோ ஒவ்வொரு ஜீவர்களின் தலைகளின் மேலும் மயிராற் கட்டித் தூக்கப்பட்ட மலை போலிருக்கிறது. அது எந்த நிமிஷத்தில் அறுந்து விழுமோ அறிவதற்கில்லை. ஆனால் நிச்சயமாக ஒரு நாளைக்குத் தலையில் வந்து விழும். அதைமாற்ற யாராலும் முடியாது. அந்த முடியாத காரியத்துக்குக் கவலைப்படுவது வீணென்ற உண்மையையுணர்ந்து, போனாற் போகட்டுமென்று எதிர்த்து நிற்பதே தைரியமாகும். இந்த உணர்ச்சி எவனுக்குண்டாகிறதோ அவன் எதற்கு மஞ்சான். எல்லா இன்ப துன்பங்கட்கும் நம் மனந்தான் காரணமாகிறது. நாம் நம் மனத்தை மட்டும் தடுமாறாமல் ஒரு நிலையில் நிறுத்துவோமானால் இந்தப் பேய்க்கூத்துகளெல்லாம் நம்மை யொன்றும் செய்யா.

இந்த அருமையான தைரியமென்னும் சொல்லைச் சாமானிய மூட ஜனங்கள் வேறு வழியிலுபயோகிப்பதுமுண்டு. தைரியமென்றால் சண்டைபிடித்து மண்டையுடைத்துக் கொள்வதன்று பொய் வழக்கிட்டு ஒருவரை யொருவர் புண்படுத்துவதன்று. ஏழைகளை யடித்து இம்சிப்பதன்று. வாய்மதம் பேசி வலியாரிடத்து மாட்டிக் கொள்வதன்று. பொய்யும் புரட்டும் பொருந்தியிருப்பதன்று. தீவர்த்திக்கொள்ளையிட்டுச் சிறைப்படுவதன்று. கன்னம் வைத்துக் களவு செய்வதன்று. கையிலிருப்பதெல்லாம் வைத்துச் சூதாடுவதன்று. தனி வழி நடந்து பறிகொடுப்பதன்று. தெண்டங்

கொடுப்பதற்குச் சித்தமாக இருப்பதன்று. சீச்சீ இவை யெல்லாம் நீச்செயல்கள். இச்செயல்களை செய்கிறவர்களைத் தைரியமுடையவரென்று கனவிலும் நினைக்கொணாது. ஆனால் அத்தகையோரை அறிவு கெட்ட ஜீவப் பிணங்கள் என்று அலட்சியம் செய்வது தைரியமாகும். தைரியமென்றால் மனச்சாட்சிக்கு விரோதமின்றி எந்த விஷயத்திலும் நீதியான வழியில் நடப்பதும் வலியாரிடத்து அஞ்சாமையும் மெலியாரிடத்து இரக்கம் வைப்பதும் எந்த விஷயத்திலும் முயற்சியும் ஊக்கமும் வைத்து முன்னேறப் பார்ப்பதும் நமது அறிவுக்கும் முயற்சிக்கும் செயலுக்கும் அதீதப் பட்டுச் செல்லும் காரியங்கள் எப்படி முடிந்தாலும் ஈசன் செயலென்று சமாதானம் செய்து கொண்டு தளராதிருப்பதும் தைரியமாகும். எவ்வகையான இன்ப துன்பங்களும் மனிதனுக்குப் புதிதல்ல, இயற்கைதான். நூல்களை யாராய்வோமானால் நமக்கேற்பட்ட கஷ்டத்திலும் பெரிய கஷ்டமனுபவித்த மனிதர்களை நாமறியலாம். பிரத்தியக்ஷமாகவுமறியலாம். ஆகவே எல்லாம் வருவதும் போவதும் இயல்புதானென்று நாம் உணரவேண்டும். அது தான் தைரியம்.

வறுமை வந்த பொழுதும் மரணத்தருவாயிலும் நல்ல திட தைரிய மிருக்கவேண்டும். வறுமையுண்டான பொழுது சுற்றத்தார், சிநேகிதர், அடுத்தவர், சார்ந்தவர் யாவரும் விலகி விடுவார்கள். சகோதரர்களும், மனைவி, மக்களும் அலட்சியம் செய்வார்கள். பெற்ற தாயும் சலிப்புறுவள். அப்பொழுது ஒன்றின்மேலொன்றாகப் பல கஷ்டங்கள் வரும். நல்லதெல்லாம் [illegible]. இப்படிச் சந்தர்ப்பத்தில் நமக்கு நமது தைரியத்தைத் தவிர வேறு துணை யெதுவுமில்லை யன்றோ? ஆகவே அப்போது நாம் இரட்டிப்பான தைரியத்தை யடைந்திருக்கவேண்டும். இனி மரணத் தருவாயில் ஐயோ இந்தச் செல்வத்தையும் வீட்டையும் மனைவியையும் மக்களையும் தாய் தந்தையரையும் சகோதரர்களையும் சிநேகிதர்களையும் விட்டுச் சாகப்போகிறோமே. இன்னொரு முறை இவர்களைப் பார்க்கப்போகிறோமா! ஆ! என்ன செய்வது. ஒன்றுந் தோன்றவில்லையே! யாருக்கு எதைச் சொல்வோம்! ஒன்றும் ஞாபகத்துக்கு வரவில்லையே! இந்த முறையிற் பிழைத்துக்கொண்டு இன்றுமிர

ண்டொரு வருஷமிருந்தாலும் போதுமே! கடைசி மகனுக்குக் கல்யாணஞ் செய்ய வில்லையே! பேரனுக்குக் காது குத்தவில்லையே! என்று பலவாறாக நினைந்து மனம் மயங்கி மறு வார்த்தைகளைப் பேச ஆரம்பித்தது அளவிலாத ஆசையை மனத்தில் வைத்து உயிர் துறப்பது மனிதர்க்கியல்பாக இருக்கிறது. எவ்வளவு புத்திமானும் மரணத்தருவாயில் மதி மயங்கி விடுகிறான். தைரிய மிழந்து வார்த்தை தடுமாறி வசனிக்கிறான். கண்ணீர் சொரிய அழ ஆரம்பித்து விடுகிறான். ஆனால் ஜீவகாருண்யமிருப்பதால் இத்தகைய ஞாபகங்கள் மரணத்தருவாயில் வராமலிராதாயினும் ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக் கொள்ளவேண்டும். எதைநினைத்தாலும் எப்படி ஆசைப் பட்டாலும் ஒன்றும் பிரயோஜனமுடையதன்றென்பதை முதலில் ஆலோசித்துக்கொள்ளவேண்டும். எந்த உபாயத்தாலும் மரணத்தினின்றும் தப்ப முடியாதென்பதை நன்றாயுணரவேண்டும். மனிதன் இறந்த பிறகு எல்லாம் உள்ளபடிக்கு நடக்கிறதென்பதை யனுபவத்தாலறிந்தபடி மனத்திற்கொண்டு நடக்கு மப்படியே யென்று நிர்மானித்துக்கொள்ள வேண்டும். இன்னும் நூல்வாயிலாக நாமறிந்த பலபுத்தி மதிகளையப்போது ஞாபகத்துக்குக் கொண்டுவரவேண்டும். இறந்தவன் பிள்ளையிருந்தவனுக் கடைக்கலமென்பதை நம்பவேண்டும். இப்படிப் பல ஆலோசனைகளைச்செய்து தைரியமடைய வேண்டும். அந்த நல்ல தைரியத்தின் பயனாக அப்பொழுதே எல்லாப் பொருள்களிலுமுள்ள பற்றுக்களும் நீங்க ஆரம்பித்து விடும். எல்லாவற்றையும் மறந்து இறைவன் திருவடியொன்றே சிந்தித்திருக்கவேண்டும். மரணத்தருவாயில் மனிதனுக்கிருக்க வேண்டிய எண்ணமிது ஒன்றேயாம். "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்றபடி எப்பொழுது ஆசை நீங்கிற்றோ அப்பொழுதே மோக்ஷமடைகிறானென் றேற்படுகிறது. ஆசை நீங்குதற்குத் தைரியமே துணையாகவிருக்கிறது. ஆகவே இந்த அருமையான தைரியத்தை நம்முடைய இரத்தத்திற் கலக்கச்செய்து ஒவ்வொரு நிமிஷமும் அதை வளர்த்து ஒவ்வொரு விஷயத்திலுமுபயோகித்துப் பழகி அந்திய காலத்திலும் கையாடி அதனாற் கிடைக்கும் அருமையான பயனையடைய வேண்டியதிருப்பதால் நமக்கு நல்ல துணையெது? என்ற கேள்விக்கு தைரியமே யென்று விடையளிப்பது பொருந்திய தாகும்.

---

# மடாதிபதிகளும், பொதுஜனங்களும்.

நமது நாட்டில் இவ்வளவு காலமாக மடாதிபதிகளுக்கு ஏற்பட்ட மதிப்பும் செல்வாக்கும் இக்காலத்தவர் தேடிக்கொண்டவையல்ல. பூர்வகாலத்தில் பொதுநன்மையின் பொருட்டு திரிகரண சுத்தியாகப்பாடுபட்டு அக்காலத்திற் றூடமாளுகக் கிடந்த நமது இந்து மதத்தை ஒருவழிப்படுத்தியும் ஜனங்களைச் சன்மார்க்கத்தில் நடக்கச்செய்தும் பிறவும் செய்துவைத்த பேருபகாரிகளான மகான்களால் வந்தவைகளேயாம். இற்றைக்கு எத்தனை நூற்றாண்டுகட்கு முன்னரோ இவ்வுபகாரம்பெற்ற நமது ஜனங்கள் அந்நன்றியைமறவாமல் அவ்வாதீனங்கட்கு யார் வந்தாலும் அவர்களிடத்துள்ள குற்றங்களை நோக்காது தங்கள் குலதெய்வமாக ஏற்றுக் கொண்டாடுகிறார்கள். இந்த உண்மையை இக்காலத்து மடாதிபதிகள் அறிந்து தங்கள் முன்னோர் வழிப்படி தங்களாலியன்ற நன்மைகளைப் பொது ஜனங்கட்குச் செய்யவேண்டுமென்ற எண்ணமின்றித் தங்கள் மட்டில் இராஜபோகங்களை யனுபவிக்க விரும்புகிறார்கள். ஒவ்வொரு மடாதிபதியையும் பற்றிய பிரஸ்தாபங்களைக் கேட்கும்போது ஆத்திரமாக இருக்கிறது. அவர்கள் உண்மைத்துறவிகளல்லரென்பது யாவருமறிந்ததால் சரீரசம்பந்தமான சௌக்கியங்களை அவர்களும் நம்மைப்போலநுபவிக்கட்டும். அதை நாம் ஆக்ஷேபிக்கவில்லை. அதோடுபொதுவிஷயங்களையுங்கவனித்துவந்தாலென்ன? மடாதிபதிகள் என்று நாம் அவர்களைப் பெருமைப்படுத்துவது அவர்கள் சாப்பிடுகிற நல்ல சாப்பாட்டுக்கா? அல்லது வண்டியிலும் பல்லக்கிலும் பட்டுத்திண்டில் சாய்ந்திருப்பதற்காகவா? அல்லது அவர்கட்கு முன்வரும் எடுபிடி பகற்றீவர்த்தி முதலிய டம்பங்கட்காகவா? இல்லையே! அவர்கள் பொதுஜனங்களின் நன்மைக்குப் பாடுபடுகிறவர்களென்று தானே மதிக்கிறோம். அதில்லையானால் அவர்களைப்பற்றி நமக்கு நல்லெண்ணம் பெருகுமா? இன்னும் அவர்கள் ஞானவான்களாகித் துறவு பூண்டிருப்பது பெரிய அதிசயம். ஒரு மடாதிபதியின் ஸ்தானம் காலியாகுமானால் அந்த ஸ்தானத்தைத எத்தனையோ ஆசையற்றதுறவிகள் அபேட்சித்து நிற்கிறார்கள். தனவந்தர் வீட்டுக்குப்போக விரும்புகிற ஸ்வீகார புத்திரனுக்கும்

இவர்கட்கும் பேதமுண்டா? இது என்ன ஞானம்? என்ன துறவு? அது எப்படியாவது போகட்டும். பொது ஜனங்கட்குபயோகமான கல்விவிருத்தி, ஆசார சீர்திருத்தம், நல்லொழுக்கம், தெய்வபக்தி முதலிய விஷயங்களைக் கவனித்து அவைகளை எந்த விதமாக முன்னுக்குக் கொண்டுவரலாமோ, அந்த வழியில் முயன்று, தமிழ், வடமொழியான இருபாஷைகளையும் பிழைக்கச்செய்து, வித்துவான்களை யாதரித்து அடிக்கடி பலவிடங்கட்கும் யாத்திரைசெய்து ஆங்காங்கு சத்விஷயங்களைப் பிரசங்கித்து, இரவும் பகலும் பொது நன்மைகளைப்பற்றிச் சிந்தித்துப் பாடுபட்டு வருவார்களானால் அதனாலுண்டாகும் நன்மைகள் அளவிடமுடியுமா? மிக்க விரைவில் நமது நாடு அறிவு நிரம்பிய நாடாகிவிடும். சாதாரணமாக ஒரு பிரபு ஒரு நாள் முழுதும் பிரசங்கித்தாலும் அதைப் பெரும்பாலும் ஜனங்கள் கருதிக் கவனிக்கமாட்டார்கள். ஆனால் ஒரு மடாதிபதி சிலவார்த்தைகளைப் பேசினாலும் அதைத் தெய்வ வாக்காக ஜனங்கள் நினைக்கிறார்கள். இது தொன்று தொட்டுள்ள சுபாவமாக இருக்கிறது. இதனாற்றான் நாமும் மடாதிபதிகளைப் பற்றி அதிகமாக எழுதவேண்டியதாகிறது.

சில நாட்களுக்கு முன் நமது ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள் கப்பலேறிய பிராமணர்களை ஜாதிப்பிரஷ்டம் செய்யும்படி ஸ்ரீமுகம் பிறப்பித்ததாகப் படித்திருக்கிறோம். பூரிக்கும் சத்திரத்துச் சாப்பாட்டுக்கும் தமது நித்திய கர்மானுஷ்டானங்களை விட்டுத் திரியும் போலிப் பிராமணர்களை யேன் ஜாதிப்ரஷ்டம் செய்யக் கூடாது? பிராமணர்கள் வெளி நாடுகட்குச்சென்று ஏதாவது சம்பாத்தியம் பண்ணாமல் எக்காலமும் நித்தியதரித்திரர்களாக இருக்க வேண்டுமென்பது சுவாமிகட்குச் சம்மதம் போலும். காலத்துக் கேற்றபடி. ஆசாரங்களை மாற்றவேண்டியதன்றோ நியாயமாகும்? பிராமணர்களை வெளியே போகக்கூடாதென்று தடுத்தால் அவர்களின் கஷ்ட ஜீவனத்தை நிவர்த்திப்பவர் யாவர்? நிற்க.

இக்காலத்து மடாதிபதிகள் தங்கள் பொறுப்பை யுணராமல் தங்கள் சௌகரியத்துக்காகவே மடங்கள் ஏற்பட்டிருப்பதாக நினைந்து நித்திரை கொள்ளுகிறார்கள். இன்னும் சிலகாலமிப்படி

யிருப்பாராயின் மடாதிபதிகள் என்ற பெயரையே நாம் காதாற் கேட்கமுடியாது. எல்லாம் நமது காருண்ணியமுள்ள அரசாங்கத் தாரின் பார்வைக்குப்போய்த் திருத்தமடைந்து விடும். அப்படி யாவது பொது ஜனங்கட்கு நன்மையுண்டாகட்டும்.

---

## பெரிய மனிதரின் இலக்கணம்.

---

மெய், வாய், கண், மூக்கு, செவி யாகிய இந்திரியங்களாலும் எலும்பு, நரம்பு, தோல், சதை, இரத்தம், மூளை, முதலிய தாதுக்க ளாலும் வேற்றுமைப்படாத மனிதவர்க்கத்திற் சிலரைச் சின்ன மனிதர்க ளென்றும் சிலரைப் பெரிய மனிதர்க ளென்றும் சொ ல்லுவதின் காரணமென்ன? பெரியமனிதரென்றால் அவருக்கிரு க்கவேண்டிய விசேஷ இலக்கணங்களென்ன என்பதைச் சிறிதா ராய்வாம். யாரைப்பெரிய மனிதர்க ளென்று சொல்லுகிறோம்? 60 வயதுக்கு மேற்பட்ட கிழவர்களையும் அதிகமான திரவிய த்தையும் ஏராளமான பூமிகளையும் வைத்திருப் பவர்களையும் பெரிய உத்தியோகங்கள் வகித்திருப்பவர்களையும் கௌரவப் பட்டங்கள் பெற்றவர்களையும் இன்னும் பரம்பரை பற்றியும் சிறிது டாம் பீகமாக இருப்பவர்களையும் பெரிய மனிதர்க ளென்கிறோம். இப்படிப் பற்பல காரியங்களை முன்னிட்டுப் பெரிய மனிதர்க ளென்று கொண்டாலும் பெரியமனிதன் என்ற சொல்லுக்கு நேரான பொருள் காணப்படவில்லை, "மனதையுடையவன் மனி தன்" ஆதலின் பெரிய மனதையுடையவனே பெரிய மனிதனாகிறான். மேற்காட்டியவர்களிடம் பெரியமனம் அமைந்திருந்தாலன்றி மற்றக் காரணங்களை முன்னிட்டுப் பெரிய மனிதர் என்று சொல்வது சரியான சொல்லன்று. பெரிய மனமென்றாலென்ன? பரிசுத்தமான மனம்; கள்ளம், கபடு, பொய், பொறாமை, வஞ்சகம், பேராசை, உலோபம், முதலிய துர்க்குணங்களை விட்டமனம்; அகங்காரம், செரு க்கு, கர்வம் முதலிய தீயகுணங்களை விட்ட மனம்; ஈகை, அன்பு, தயாளம் முதலிய நற்குணங்கட் கிருப்பிடமான மனம்; நடு நிலை

மையும் உண்மையுமுள்ள மனம். இத்தகைய விலக்கணங்களமைந்த மனமே பெரிய மனமென்பது. இத்தப்பெரிய மனமுடையவனே பெரிய மனிதனாகிறான். இத்தகைய உத்தம புருஷர்களையே உலகம் விரும்புகிறது. பெருமைப்படுத்துகிறது. அநேககாலத்துக் கிருக்க வேண்டுமென்று வாழ்த்துகிறது. எதிர்பாராமலே யெல்லா நலனு மவர்கட் குண்டாகின்றன. இத்தகைய பெரிய மனமில்லாத ஒருவனுக்கு வயசு அறுபதல்ல நூற்றிருபதானாலும் எவ்வளவு பொருள் பூமிகளிருந்தாலும் எவ்வளவு பெரிய பதவி கிடைத்திருந்தாலும் 21 தலைமுறைப் பரம்பரையிற் பிறந்திருந்தாலும் எவ்வளவு டாம்பிகமாக வாழ்ந்தாலும் பிரயோஜனமில்லை. நல்லெண்ணமில்லாமலும் பிறருக்கிடையூறு செய்து கொண்டுமிருக்கிற மனிதனை உலகம் வெறுக்கிறது. அவன் கேடடைய வேண்டுமென்று பிரார்த்திக்கிறது. கெட்ட மனமுள்ள மனிதனொருவன் நீண்ட ஆயுளுக்கிருப்பதிலும் மரம் செடிகள் நீண்ட ஆயுளுக்கிருப்பது நலமென்று உலகம் நினைக்கிறது. ஈகையு மிரக்கமும் இல்லாத ஒரு உலோபியிடம் செல்வமிருப்பதிலும் நாய் கழுதைகளிடம் பால் அதிகமாகச் சுரப்பது உபகார மாகுமென்று உலகம் நினைக்கிறது. நியாயமும் நடு நிலைமையும் சாந்தமுமில்லாத ஒருவனுக்குப் பெரும் பதவி கிடைப்பதிலும் புலி, கரடிகட்கு அது கிடைப்பது நன்மையாம். ஜீவகாருண்யம் பரோபகாரமின்றி தன்மட்டில் தான் சௌகரியமாகவும் டாம்பிகமாகவும் வாழ்ந்தாற் போதுமென்று நினைக்கிற தன்னைப்பேணு மனிதர்களைப் பார்க்கிலும் இந்த உலகத்தில் உபயோகமற்ற ஜன்மங்கள் வேறில்லை. பரிசுத்தமான மனமும் பெருந்தன்மையும் விவேகமுமில்லாத ஒருவன் பரம்பரைப் பெரிய மனிதன் வீட்டிற் பிறந்திருந்தாலும் சாஸ்திரி மகன் சாஸ்திரியே தவிர உண்மையாக பெரிய மனித னன்று.

பொம்பாய் நகரத்தில் 88 வயதுள்ள தாதாபாய் நௌரோஜி இருக்கிறார். அவரை இன்னும் 100 வருஷத்துக்கிருக்கவேண்டு மென்று உலகம் விரும்புகிறது. ஏன்? அவர் உலகத்துக்கெல்லாம் படியளந்தாரா? இல்லை. உலகமெல்லாம் க்ஷேமமடைய வேண்டு மென்று உண்மையாக விரும்பினார். தன்னாற் கூடுமான வரையிற்,

பாடுபட்டார். அதனால் உலகம் கொண்டாடுகிறது. சென்னபட்டின த்தில் சமீபகாலத்தில் பச்சையப்ப முதலியாரென்ற ஒரு பெரிய தனவந்தரிருந்தார். அவருக்குப் பிள்ளைகளில்லை. அன்னியன் பெற்ற ஒரு பிள்ளையை சுவீகாரம் செய்து அவன் கையில் எல்லாப் பொருள்களையும் ஒப்பித்து விட்டு இலவுகாத்த கிளிபோலாகிற சில சாதாரண மனிதர்களைப்போலன்றி மகாபுத்திமானான முதலியார் தன்னுடைய பெரும் பொருளைக் கொண்டு பல தர்மங்களைச் செய்வதெ ன்று நிச்சயித்தார். தர்மங்களும் கடலிற்பெய்த மழை போலன்றி மிக்க உபயோகமான வைகளாகச் செய்து முடித்தார். காசி முதல் கன்னியாகுமரிவரையிலுள்ள தேவாலயங்களில் முக்கியமான கட்ட ளைகளை ஏற்படுத்தினார். அவர் கட்டளையில்லாத ஆலயங்கள் எதுவு மில்லை. சென்னபட்டினத்தில் ஒரு பெரிய (College) கலாசாலையும், ஒரு (Hospital) வைத்திய சாலையும், மற்றும் பல தர்மங்களும் செய்தார். இவை எக்காலத்தும் தடைபடாமல் நடந்தேறும்படி போதுமான மூலதனத்தைக்கவர்ன்மெண்டின் பாதுகாப்பில் வைத் தார். இந்தத் தர்மங்கள் இன்றும் மிகச்சிறப்பாகவும் விமரிசையாகவும் அவர் பெயரால் நடைபெறுகின்றன. இத்தகைய தர்மிஷ்டரன்றோ பெரிய மனிதர்? இத்தகையோரிட மிருப்பதன்றோ செல்வம் என் பது? இனி பொம்பாய் ஐக்கோர்ட் ஜட்சாக இருந்தவரும் மகாரா ஷ்டரப் பிராமணருமான காலஞ்சென்ற ஸ்ரீமாந் மகாதேவ கோவிந்த ரான்டே என்பவர் ஒருநாட் சாயுங்காலம் ஒரு தென்னந்தோப்பில் உலாவிக்கொண்டிருக்கும்போது இவரை யின்னாரென்றறியாத சாணா னொருவன் தனக்குக்கள்ளுக்குடம் தூக்கிவிடும்படி கேட்க அந்த உத் தமர் தன் பெருமைகளைக் கருதாமல் அவன் தலையில் தூக்கி விட்டா ராம். பாருங்கள் எவ்வளவு உயர்ந்த குணம்! பதவி உயர உயர குணமும் மனமும் பால்போல இருக்கவேண்டும். அப்படி யில்லாத மனிதன் பெரிய மனிதனன்று. இனிஇவரது சிஷ்யரும் **C. I. E.** முதலிய கௌரவப்பட்டங்கள் பெற்றவரும் (Rising star of the Deccan)என்று பொது ஜனங்களாற் புகழ் பெற்றவரும் சமீபத்தில் இங்கிலாண்டில் நமது மகாராஜா சக்கரவர்த்தியவர்களோடு விருந்து விருந்துண்ணும் பாக்கியம் பெற்றவரும் மகா உத்தமதேசாபிமானி

யுமான கனம் கோகலே யவர்களைப் போல் உயர்ந்த பதவியைப் பெற்றவர்கள் யாரும் இந்தியாவிலில்லை. இந்த உத்தமர், கர்வம் அகங்காரம் முதலிய தீயகுணங்களை விட்டு யாரோடும் சௌசன்னியமாகவும் சாந்தமாகவும் பேசுகிற சுபாவமுடையவர். தன்னுடைய பெருமைகளை ஒரு சிறிதும் பாராட்டுவதில்லை. தேசத்துக்கும் ஜனங்கட்கும் நன்மை யுண்டாவதிலேயே நோக்கமுடையவர் இவருக்கிவ்வளவு பெருமைகளும் திரவிய சகாயத்தி லுண்டானவைக ளன்று. இவைகளுக்கு இவருடைய புத்திநுட்பமும் நல்ல மனமுமே காரணமாகும். எவ்வளவு உயர் பதவியைப் பெற்றாலும் மனம் மயங்காமலும் கர்வங்கொள்ளாமலும் இருக்கிற இத்தகைய மனிதர்களன்றோ பெரிய மனிதர்கள்?

பரம்பரைப் பெரியகுடும்பங்களிற் பிறந்தும் தங்கள் முன்னோர்கள் அருமையாகத் தேடியபெயரை நன்மையான காரியங்கட்கு உபயோகிக்காமல் அடாதகாரியங்கட்கு உபயோகித்து பொதுஜனங்கட்கிடையூறான செயல்களைச் செய்து வீண்கலகம், வம்புகளையுண்டாக்கி ஒற்றுமையைக் கெடுத்து தங்கள் அற்ப எண்ணங்களை நிறைவேற்றிக் கொள்ளுகிறவர்கள் பெரிய மனிதர்களாவார்களா?

ஆகவே நமக்கு விவேகமிருக்குமானால் நாம் பிறப்பையாவது, ஜாதியையாவது, பரம்பரையையாவது, செல்வத்தையாவது கருதியொருவனைப் பெரிய மனிதன் என்று மதிப்பதை விட்டு தயாளம், சாந்தம், விவேகம், உண்மை, நிதானம், பரோபகாரம், ஜீவகாருண்யம் முதலிய உயர்குணங்களும் பெருந்தன்மையும் அமைந்த மனிதர்களையே பெரிய மனிதர்க ளென்று மதிக்கவேண்டும்.

---

# * விசேஷ காலங்களும், வீண் செலவும்.

(3—8—11-ல் செய்த ஒரு பிரசங்கம்).

---

நமது நாட்டார் கல்யாண முதலிய விசேஷ காலங்களில் நடந்து கொள்ளுகிற மாதிரியும், செய்கிற வீண்செலவும், படுகிற கஷ்டமும், நிரம்ப விசனிக்கத் தக்கன. விசேஷங்களை யெவ்வளவோ ஒழுங்காகவும், சீராகவும், செட்டாகவும் செய்து நஷ்டமும், கஷ்டமும் இன்றி சந்தோஷமனுபவிப்பதை விட்டு, வலிந்துசென்று, கஷ்ட நஷ்டங்களை விலைக்கு வாங்குவதென்றால் எவ்வளவு அறியாமை யென்று நாம் வருந்தவேண்டும்? இவ்வளவுக்கும் காரணம் பெண்கள் தான் என்று சொல்லக்கூடும். ஆனால் புருஷர்களாகிய நாமும் அது விஷயத்தில் தப்பிதமாக நடந்து கொள்ளுகிறோம். உள்ளபடிக்கே படிப்பற்ற பெண்கள் அறியாமை யென்னும் அந்தகாரமான இருட்டுக்குகைக்குள் வழக்கமென்னும் படுகுழியில் தலை கீழாக வீழ்ந்து கிடக்கிறார்கள். அறிவு என்னும் சூரிய வெளிச்சமொன் றிருப்பதாக அவர்களறியார்கள். தங்களிடத்தைத் தவிர வேறு உலகமிருப்பதாகவே அவர்களுக்குத் தெரியாது. ஆனால் புருஷர்களிலும் அநேகர் அக்குகைக்குழியில் வீழ்ந்து கிடக்கிறார்கள் எனினும், தலை கீழாகவன்று, தலைமேலாக இருப்பதால் குகை வாயிலாகத் தெரிகிற வெளிச்சத்தைக்கண்டு அங்கு போகலாமாவென்று யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். சிலர் மட்டும் இப்போது வெளியேறி விட்டார்கள். வெளியேறியவர்கள் வெளிச்சத்திலுலாவி சுகமான காற்று வீச சௌக்கியங்களை யனுபவித்து ஒருவர் முகத்தை யொருவர் நன்றாய்ப்பார்த்து உலக விஷயங்களை நன்கறிந்து கொண்டிருக்கிறார்களெனினும், பின்னு மந்தக் கெட்டுப்போன இருட்டுக்குகைக்குள் நுழையாமலிருக்கக் கூடவில்லை. ஏன்? மனைவிமக்களெல்லாம் அங்குதானே யிருக்கிறார்கள். ஆதலால் அக்குகைக்குட் போவதும் வருவதுமாக இருக்கிறார்கள். இங்கு கூடியிருக்கிற நாமெல்லோரும் இந்த நிலைமையையுடையவர்கள். ஆனால் நாம் கண்ட நாகரீக

---

* இது முக்கியமாக ஒரு வகுப்பாரைக் குறிப்பிட்டுப் பேசிய விஷயங்களாக இருந்தாலும் விசேஷங்கட்குப் பெருஞ்செலவு செய்கிற எல்லா ஜாதியாரும் கவனிக்கவேண்டியதேயாகும்.

மென்னும் நிபந்தை அங்கு கொண்டுபோய் அவர்கட்குக்காட்டினால் அவர்கள் திடீரென்று தங்கள் கண்களைப் பொத்திக்கொள்ளுகிறார்கள், அந்த வெளிச்சத்தில் அவர்கள் விழிப்பதில்லை. விழிக்கும்படி சொல்லுவதற்கும் நாம் முயற்சியற்றவர்களாகவிருக்கிறோம். நாம் தைரியம் சொல்லுவோமானால் அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாகப் பார்க்க விரும்பி வெளிவருவதிலும் ஆக்ஷேபமிராது. நாம் சும்மா விருப்பதால் புருஷர்கள் அரும்பாடு பட்டுத்தேடுகிற பொருளெல்லாம் பெண்கள் வெறும்பாடு பட்டு அழிக்கிறார்கள். படிப்பற்ற பெண்கள் பொருள் தேடும் அருமையை ஒரு சிறிது மறியாதவர்கள். ஏதோ, புருஷன் வீட்டைவிட்டு வெளியேறிவிட்டால், பொருள் தங்கள் வீடு வந்துவிட்டதாகக் கருதுகிறார்கள். தூரதேசங்களெல்லாம் தங்கள் புறக்கடையிலிருப்பதாகக் கருதுகிறார்கள். அந்நியதேசங்கட்குப் போய் வருகிற கஷ்டத்தை அப்பெண்கள் ஒரு சிறிது மறியார்கள். அங்குபோய்ப் பொருள்தேடப் படுங் கஷ்டத்தைச் சற்று உடனிருந்து கவனிப்பார்களாயின் அந்த அருமையான பொருளில் ஒரு துட்டுக் காசு கூட வீண்செலவுசெய்யச் சம்மதிப்பார்களா? தங்கள் சீதனப்பணங்களைச் செலவு செய்வதென்றால் எவ்வளவு செட்டுச்செய்கிறார்கள்? பொருளருமை அதைத்தேடியவர்கட்கன்றோ தெரியும்? சிலகாலத்துக்கு முன் நமது நாட்டுப்பெண்கள் தூரதேசங்களில் வெள்ளி மலைகள், பொன் மலைகள் இருப்பதாகவும், புருஷர்கள் அங்கு போய் வெட்டியெடுத்துக்கொண்டு வருகிறார்களென்றும் நினைத்தார்களாம். ஆனால் இப்போது அவ்வித நினைப்பு இல்லையாயினும், பொருள் தேடுவதிலுள்ள உண்மையான கஷ்டத்தை இன்னும் அவர்கள் நன்றாயுணரவில்லை. நாம் எவ்வளவு பாடுபட்டு இந்தப் பொருள் சம்பாதிக்கிறோமென்று பெண்கள் அறிந்தால், அதை மிகுந்த செட்டாகச் செலவு செய்ய வேண்டுமென்பதை யுணர்வார்கள். அதையவர்கள் அறியும்படி செய்யாமல், நாம் அவர்கள் மெச்சும்படி, அவர்கள் சொல்லுகிறபடியெல்லாம் செலவு செய்வதுதான் நம்முடைய தப்பிதம். மனிதர்கள் உண்பது, உடுத்துவது, இடவசதி, சுகக்காற்று முதலிய சுகாதார விஷயங்கட்கு எவ்வளவு செலவு செய்தாலும் அதைப்பற்றிக் குறைவில்லை. அது மனித வாழ்வுக்கு இன்றியமையாச் செலவே

யாகும். அதையடியோடு கைவிட்டு கல்யாண முதலிய விசேஷ காலங்களில் கண்ணை மூடிக்கொண்டு வீணுகச்செலவு செய்வது நான் விசனிக்கத் தக்கது.

## கண்காட்சிச்சாலை.

ஒரு கல்யாணத்தில் எவ்வளவு பொருள் வீண் செலவாகிறது பாருங்கள்! பெண்ணுக்குச் சீர்கொடுக்கிற ஒரு சிறு முறையை மலைபோலாக்கி ஒருவர்க்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு தேவையில்லாத வெண்கலப் பாத்திரங்களையும், வெள்ளிப்பாத்திரங்களையும், அன்னிய நாட்டு மங்கு, மரவை, ஜாடி முதலிய போலிச்சாமான்களையும், பாய்தடுக்குகளையும், பட்டுத்துணிகளையும், அளவில்லாமல் ஆயிரக்கணக்கான ரூபாயைக் கொட்டி வாங்கியும், போதாக் குறைக்கு உப்பு முதற் கற்பூரம் வரை மூடைமூடையாக வாங்கியும், கண்காட்சிச்சாலை திறந்துவைக்கிறுர்கள். பிறகு சிலதைப் பாதிவிலைக்கு விற்றும், சிலதை அந்துப்பூச்சிகட்கும், எலிகட்கும், இரையாக்கியும், சிலதைச் சுக்கு வசம்பிட்டு மேல் வீடுகளிற் புதைத்து வைத்தும் எப்படியாவது பார்த்தவர்கள் அதிகமான சாமான்கள் வைத்ததாகச் சொல்லவேண்டுமென்ற வீணுசைக்காகக் கண்ணுக்கெட்டிய வரையில், கண்டது கேட்டதுக்கெல்லாம், காசைக்கொட்டி ஒரு கல்யாணத்துக்கு ஆயிரக்கணக்கான தொகையை வீண்செலவு, உபயோகமற்ற செலவு, டம்பச்செலவுசெய்து, காசைக்கரியாக்கி விடுகிறுர்கள்.

இதைத்தவிர தட்டார் கொள்ளை வேறு, ஆடல் பாடல்களுக்குக் கொட்டுகிற அநியாயச்செலவு வேறு. பாகவதர்களும், பாடகர்களும், நாட்டியக்காரவிபசாரிகளும் நம்மவரைப் பணங்காய்க்கிற விருக்ஷங்களென்று நினைத்து ஒன்றுக்கு மூன்றுபங்கு அதிகமாகக் கேட்கிறுர்கள்.

## ஆடல் பாடல்கள்.

விசேஷ காலங்களிற் பாகவதர்களின் கதைகளும், மற்ற சங்கீதக் கச்சேரி, வாத்தியக் கச்சேரி, சதிர்க்கச்சேரி, உயர்ந்த மேளம் முதலியனவும் நடத்துதல் இன்றியமையாத கடமையென்றும்,

அவசியமென்றும் ஏற்பட்டுவிட்டது. அதில்லாவிட்டால் விசேஷ த்துக்குப் பெருமை யில்லையென்று நினைக்கப்படுகிறது. இன்னும் சில வருஷங்களில் கல்யாணச் சடங்குகளி லொன்றாகவும் ஏற்பட்டு விடக் கூடும். ஆனால் விசேஷத்துக்கு வந்த விருந்தினரையுபசரித் துச்சந்தோஷப்படுத்தவேண்டிய தவசியமேயாம், சந்தோஷப்படுத்து வதற்கு இத்தகைய ஆடல் பாடல்கள்நடத்த வேண்டியது தான். அதற்காகக் கண்டபடி பணத்தை வாரியிறைத்து அந்த வகையில் இவ்வளவு செலவாயிற்றென்று பெருமை பேசிக் கொள்வதும பாக வதர்கட்கும் மற்றவர்கட்கும் கேட்டகேட்டபடி தொகையை யதிக ப்படுத்திக்கொண்டு போவதும், அவற்றின் ரசங்களை யனுபவியா மல் வீணாகப் பணத்தைக் கொட்டுவதும் நமக்குத் திருப்தியையுண் டாக்குவதன்று.

உயர்ந்த மேளங்களை அதிகப் பொருள் கொடுத்துத் தருவிக்கி ன்றார்களே! அதை யாராவது சற்று கேட்டு ஆனந்திப்பதுண்டா? நாகபட்டினத்திலிருந்து வந்தவன், சென்னையிலிருந்து வந்தவனெ ன்று பெருமை பேசிக்கொள்வதன்றி விரும்பிக் கேட்பது மில்லை. அனுபவிப்பது மில்லை! வேறெதற்குத் தருவிப்பது? பேருக்கும், கீர் த்திக்குமாம். என்ன பேர், என்ன கீர்த்தி யென்பது நமக்கு விளங்க வில்லை. இது வீணிலும் வீணான செலவேயாகும். இதைவிட்டு சுமா ரான ஒருவனைத் தருவித்துக் கொண்டாலென்ன? சதிர்க் கச்சேரி நடத்துகிறார்களே. இந்தக் கச்சேரியைப் போல் ஆபாசமானது எதுவுமில்லை. இது அறிஞர்கள் பார்க்கத்தக்கதுமன்று. இந்த வழக்கம் ஒரு சிறிதும் விரும்பத்தக்க தல்ல. இதனால் விளைவது பெருந் தீமையே. இனி சங்கீதக்கச்சேரி வாத்தியக்கச்சேரியை நாம் கெட்டதென்று கூறவில்லை. அது கேட்கத்தக்கதேயாகும். ஆனா லதுவிஷயத்திற் பெருஞ் செலவு செய்வதை மட்டும் நாம் அனாவசி யமென்று கூறுகிறோம். இத்தகைய கச்சேரிகளெல்லாம் பெருஞ் செலவு செய்து நடத்துகிற ஏகதேசமான விசேஷங்களில் மட்டு முள்ளன. பாகவதர்களின் கதைகளோ கல்யாணம், பூநூல், சாந்தி, சவண்டி முதலிய எல்லா விசேஷங்களிலும் கட்டாயமாக நடத்தப் படுகிறது. கேட்போரிருந்தாலும், இல்லா விட்டாலும் அந்த

வகையிற் செய்கிற செலவைச் செய்தே தீருவதென்று தீர்மானித்து விட்டார்கள். பாகவதர்கள் மலிந்து கிடக்கிற இக்காலத்தில் இரண்டு கதைகட்கு 300 ரூபாமுதல் 500 ரூபாவரை கொடுக்கப்படுகிறது. அதிலும் பெண் பாகவதர்கட்கு அதிகமாகக் கொடுக்கப்படுகிறது. 300, 500 என்று நம்மவரிடம் வாங்குகிற பாகவதர்கட்கு (Town) டவுன்களில் ஒரு கதைக்கு 50, 60 கிடைப்பதில்லை. அத்தகைய பாகவதர்களும் செட்டிப்பிள்ளைகள் கடிதத்தைப் பார்த்த மாத்திரத்தில் தமது கதைக்கு அதிக கிராக்கி யிருப்பதாகவும், தொகை அதிகமாகத் தந்தால் மட்டும் வரலாமென்றும், பிரியமானால் அட்வான்சனுப்பும்படியும் தந்தி சொல்லுகிறார்கள். அதன்மேல் நம்மவரின் குணத்தைப்பற்றிக் கேட்கவேண்டுமா? தந்திமேல் தந்திகொடுத்து கேட்டதொகை, அதோடு செலவு, அதோடு டோல்கேட்டுக்காகக்கூடத் தருவதாகத் தெரிவித்து அட்வான்சு மனுப்பித் தருவிக்கிறார்கள். அப்படி யென்ன அவசியமாகிவிட்டதென்பதை மட்டும் ஒருவரும் கவனிப்பதில்லை அதில்லாவிட்டாற் பெருங் குறையாகி விடுமென்று கருதுகிறார்கள். பாகவதர்கட்குத் தொகை கூடியதற்கு நம்மவரே காரணமன்றி வேறே யாருமில்லை. பாகவதர்கள் "நான் உங்கள் மனுஷியன், உங்கள் பாகவத"ரென்று ஒவ்வொரு கதை முடிவிலும் சொல்லிக்கொள்வதெல்லாம் நம்மை ஏமாற்றுகிற சொற்களே யன்றி உண்மையல்ல.

தற்காலத்தில் பாகவதர்கள் நடத்துகிற கதைகளுட் பெரும்பாலும் நாடகம் அல்லது தெருக்கூத்துப் போலாகிவிட்டன. கதை யென்றால் சாஸ்திரயுக்தமாகவும், சங்கித முறையோடும், உயர்ந்த வார்த்தை நயங்களாலும், நவரசங்களும் ததும்பும்படியும், பக்திச் சுவை சொட்டும்படியும், கேட்போர் பரவசமடையும்படியும் மேலானவகையி லிருக்கவேண்டுமே யன்றி தில்லாலப்பாட்டும் டப்பாவும் வண்டிக்காரன் பாட்டும் பாடுவதன்று. இப்போது சிலர் வெறும் வார்த்தைகளாலும், சிலர் பீடிகை போடுவதோடும் முடித்து விடுகிறார்கள். சிலர் இவ்விதம் நடத்துவதென் றறியாமல் திண்டாடுகிறார்கள். இப்படிப் பலவாறாக நம்மை யுலுப்பிப் பணத்தையடித்துக்கொண்டு போகிறார்கள். நம்மவருட் பெரும்பாலாருக்கு எல்லாக் கதையும் ஒரு மாதிரிதான். நயம் குறை தெரியாது.

(செலவைக் குறைக்கவேண்டும்.)

இப்படியெல்லாம் அபாரமாக வீண்செலவு செய்கிறார்கள். ஆனால் கல்யாணத்துக்கு வந்த விருந்தினரை நன்குபசரித்தல் உணவு முதலியன காலாகாலங்களிற் செய்வித்தல், விசேஷத்தில் ஒருவரோடொருவர் குலாவி சந்தோஷமாகப் பொழுதுபோக்கல், அதற்கேற்ற வசதிகள் முதலியன அநேக கல்யாணங்களிலிருப்பதில்லை. சில கல்யாணங்களில் கல்யாணக்காரர் ஒருவரையும் தேடுவதில்லை. சாப்பாட்டுநேரம் சாயுங்காலம் 3, 4 மணிக்குத்தான். ஆனால் இப்போது புத்திமான்களான அநேகர் இதுவிஷயத்தில் திருத்தமடைந்திருக்கிறார்கள். மற்றவர்களும் அவர்களைப்பின்பற்றுதல் அவசியமாகும். இதைப்பின்பற்றாமல் செலவுவிஷயத்தில் மட்டும் பின்பற்றுவது எவ்வளவு மதியீனம்.

இனிக் கல்யாணத்தில் மட்டுந்தான் இப்படியோவென்றால், இல்லை: ஒவ்வொரு விசேஷமும் இப்படியே நம்முடைய பொருள்களை விழுங்குகிற முதலைகளாக விருக்கின்றது. அந்தோ! நன்மைகள் போகட்டும். தீமைகளாவது கொஞ்சமாகத் தின்னக்கூடாதா? அவைகளும் அவதியோடு அவதியாக அபாரமான பொருளை விழுங்குகின்றனவே. இப்படி ஒவ்வொன்றையும் விரிப்பது அனாவசியமாதலின், கருத்தாக நாம் கொள்ளவேண்டியதென்ன? இந்தச் செலவுகளை எப்படியாவது குறைக்கும் வழி தேடவேண்டும். அப்படியில்லாதவரையில் நம்மவர் இப்போதடைந்திருக்கும் சீரும், சிறப்பும் சில காலத்துள் மங்கிவிட எதுவாகுமென்பதிலையமில்லை. இப்போது வருவாய் குன்றி நிற்கிறது. ஆனால் செலவோ பெருகிக் கொண்டே போகிறது. இந்தச் சமயத்தில் நாம் நித்திரை செய்வோமானால் தலைக்கு மேலான வெள்ளம் வந்துவிடும். அப்போது, நாம் நமது ஜாதியின் மேன்மையைப்பற்றிப் பழங் கதையாகப் பேச நேரிடும். இதுவிஷயத்தில் இனி ஒரு நிமிஷங்கூட நாம் தாமதிப்பதற்கில்லை. இது யாருக்கு வந்த விருந்தோவென்று நினைக்காதிர்கள். நம்மவர் ஒவ்வொருவருக்கும் சொந்தக் காரியங்களில், முதன்மையானது இதுதான். இந்த வீண் செலவு நமது பசுமந்தைக்குள்ளிருக்கும்

பெரும் புலி யென்று நினைத்துக்கொள்ளுங்கள். அப்படியானால் நாம் பசுக்களைப் பெருக்குவதா? புலியைக் கொல்வதா? எது முதலிற் செய்யவேண்டிய வேலை? புலியை யன்றோ கொல்லவேண்டும்? அப்போதன்றோ நமது பசுக்கள் பெருகும்?

இந்தச் செலவைக் குறைக்காவிட்டால், நம்மவருள் பெண்களுக்குத் தொகை வாங்கும் கெட்ட வழக்க மொழியாது. இந்தக் கொடிய வழக்கம் இப்போது குடி கெடுக்கிற வழக்கமாக மாறிவிட்டது. இதனாற் கெட்ட குடிகள் கொஞ்சமன்று. பெண்களுக்குத் தொகை வாங்குவது மகா பாவம். பெண்ணுக்கு வாங்கி அந்தப் பொருளைத் தன் குடும்பச் செலவிற்கு உபயோகப்படுத்துவது எவ்வளவு இளப்பமான விஷயம். எந்தச் சாஸ்திரத்திலாவது இது ஞாயமென்று சொல்லியிருக்கிறதா? இந்த வழக்கம் நம்மவருக்குள் வந்து புகுந்துகொண்டது நம்மவரின் துரதிஷ்டமேயாம். இதைப் பார்க்கிலும் அரை வயிறுண்டு காலந்தள்ளுவது நன்மையாகுமே? இதை மாற்றத்தக்க புது முறைகளை யனுட்டிப்பதென்றால் அடே யப்பா! அது வழக்கமில்லை யென்று, செவிகளை யடைத்துக் கொள்ளுகிறார்களே! இந்த வழக்க மெந்தக் காலத்திலுண்டானதோ. இதனாலுண்டாகும் கேடுகளைப்பற்றிச் சொல்லவென்றால் சபையார் அதிக நேரம் பொறுமையோடிருக்க வேண்டும். ஆனால் இதின் தீமைகளைப்பற்றி யாவருமறிவராதலின், சுருக்கமாகப் பேசுவோம். இதனாலிரண்டு குடிகளும் கேட்டுப் போகின்றன. பெண்ணோ துக்கக் கடலில் மூழ்கித்தவிக்கிறாள். மாப்பிள்ளை மனங் கலங்கி நிற்கிறார். பார்ப்பவர்கட்கோ பரிதாபமாகவிருக்கிறது. கால கதியால் மாப்பிள்ளை, பெண்ணுக்கு ஏதாவது இடையூறுண்டானால் பிறகு உலக வாழ்வு அவர்கட்கில்லை. இந்த அநியாயமான வழக்கத்தை வைத்துக்கொண்டு நாம் முன்னேறுவதெப்படி? இதைத் தெய்வச் செயலென்று சொல்லக்கூடும் தான், நம்முடைய தப்பிதமே இதற்குக் காரணமென்றுசொல்லுவேன், ஏன்? பெண்ணுக்குப் பணம் வாங்கக் கூடாதென்றால், செல்வர் முதல சாமானியர் வரை, யாவரும் கல்யாணச் செலவு முதலியவைகளைச் சுருக்கி ஒரு அளவு கட்டிச் செட்டாகச் செய்ய

வேண்டும். அப்படிச் செய்யாமல் செல்வர்கள் நமக்கென்னவெ ன்று, பொதுநன்மையை நோக்காமல், மனம்போனபடி செய்கிறார் கள். பேதைகளாகிய சாமானியர்களும் மயிலை, வான்கோழி கண் டாடுவது போற் பின்பற்ற முயன்று, பொருள் முட்டுப்பாட்டி னால் பெண்ணுக்குத் தொகை வாங்க ஆரம்பித்தார்கள். அது வரவரப்பெருகிவிட்டது. இந்த, மளமளப்பில், சில சோம்பேறிகள், தங்கள் தேவையையும், சேர்த்துவாங்க ஆரம்பித்தார்கள். இதுதான் பெருந்தொகைக்குக் காரணம். இதை இனி யெப்படி மாற்றலாம்? இதற்குப் பொறுப்பாளிகள் செல்வர்களே யாத லின், அவர்கள், ஒரு மனதாக நின்று, செலவைக் கூடியவாறு சுருக்கி, ஒரு அளவு கட்டி, அதுபோற் செய்ய ஆரம்பித்தால், மற் றவர்கள் அதைப் பின்பற்றப் பின்னடைய மாட்டார்கள். அப் போது அதிகமாக வாங்கவும் நேராது. நேர்ந்தாலும் செலவுக்கு வேண்டியதைமட்டும் வாங்கி, அதையப்பெண்ணுக்குச் செய்ய வேண்டிய சீர் முறைகட்குபயோகித்துவிட்டால் அது குற்றமா காது. இளப்பமுமாகாது. பாவமுமாகாது. அதில் ஒரு காசு கூட தன் தேவைக் குபயோகித்தல் பெருந் தப்பிதமென்று ஆயிர முறையாக வற்புறுத்திச் சொல்லுகிறேன்.

செல்வர்களுக்குத் தான் இது அவசியமில்லையா? அவர்களுக் கும் அவசியமேயாம். ஏனெனின், செல்வம் நிலையானதல்லவே? நாளை வறியரானால் என் செய்வது? செல்வமும் தரித்திரமும் மாறி மாறி வருவனவன்றோ? ஆகவே, செல்வர்களும் இதைக் கவனிப்பது ஞாயமேயாகும். இதற்குச் சாமானியரை இப்போது குற்றஞ் சொல்ல முடியாது. அவர்களைத் திருத்துவது வெகு சுலபம். ஒருவாறு, நாமெல்லோருங் கூடி இந்தக் குற்றத்தைப் பெண்கள் பேரிற் சுமத்தப் பார்ப்போமானால் அது பொருந்தாது. ஏனெனின், அவர்களைப் பிடித்தபேய் ஒன்று. நம்மைப் பிடித்த பேய் இரண்டு. அறியாமை யென்னும்பேய் அவர்களைப் பிடித் திருக்கிறது. நம்மையோ, அறியாமை யென்னும் பேய்பிடித்தபெண் பேய்கள் பிடித்திருக்கின்றன. ஆகவே நம்மைப் பிடித்தது இரண்டா

கின்றன. ஆகலின் முதலில், நமக்கு மந்திரிக்கவேண்டும். இரண்டாவது நமது பெண்கட்கு மந்திரிக்கவேண்டும்.

இல்வாழ்வே மிகக் கஷ்டமானது. அதிலும் அறியாமை நிரம்பிய பெண்களோடு வசிப்பது மிகுந்த கஷ்டம். அதிலும் நம்மவர் வாழ்வு பெருங் கஷ்டம். நம்மவருக்குப் பேர் மாத்திரத்தாலே பெரியவராக ஆசையேயன்றி, உள்ளபடிக்கே பெருந்தன்மையாக வசிப்பதில் முயற்சியில்லை. நாம் செய்கிற சிறப்பெல்லாம் பிறர் மெச்சவேண்டுமென்ற நோக்கமேயாம். உள்ளன்பிலாதவன் பல்லைக் காட்டுதல் போல, எல்லாம் வெளி வேஷமாக வீண் டம்பத்துக்கு ஆசைப்படுகிறோம். அது இம்மையிலும் மறுமையிலும் துன்பமே தரத்தக்கது. இந்த டம்பத்தை அறிஞர்கள் மதிக்க மாட்டார்கள். ஏதோ சாமானியர்களான பாமர ஜனங்களே மதிப்பார்கள். இந்த அற்ப மதிப்புக்காக எத்துணையோ நன்மைகளைத் தரத்தக்க, அற வழிகளிற் செலவு செய்யாமல் உபயோகமற்ற வீணான வழிகளிற்செய்து, அறிஞர்பரிகசிக்க இடந்தேடிக் கொள்வது எவ்வளவு குறைவென்பதை விளக்கமாகச் சொல்ல, அவ்வளவு பேச்சாளியாக நானிருக்க வில்லையே யென்று பெரிதும் வருத்தமடைகிறேன்.

## சடங்குகளை மாற்றவேண்டும்.

இனிக் கல்யாண முதலிய விசேஷ காலங்களில் பொருள் சம்பந்தமில்லாத சில சடங்குகளும் வழக்கங்களும் நமக்குக்கஷ்டத்தைத் தருகின்றன. ஆதலின் அவற்றுள்ளும் சிலவற்றைத் திருத்திக் கொள்வது நன்மையாகும். இப்போது அநுட்டிக்கப்பட்டுவருகிற சடங்குகள் ஆதியில் என்ன நோக்கத்தோடு ஏற்பட்டனவோ, அந்த நோக்கத்தோடு நடைபெறாமல், பாக்கு மூடைகளைச் சாப்பிடுகிற நோக்கமாக மாறிவிட்டன. நம்முள் பாக்குக் கொடுப்பதும் வாங்குவதுமே பெரும்பாலும் சச்சரவுக்கும் மனஸ்தாபத்துக்கும் இடமுண்டாகிறது. பாக்குக்கொடுக்கும் வழக்கத்தையும், மரவைகள், சட்டிகள் கொடுக்கும் வழக்கத்தையும் அடியோடு விட்டுவிடவேண்டும். கல்யாணத்துக்கு வந்திருக்கிற பந்துக்கள், சிநேகிதர்

கள் எல்லோரும் ஆதாயம் தேட வந்தவர்களன்று. விசேஷத்தைச் சிறப்பிக்க வந்தவர்களேயாம். ஆதலால் கல்யாணக்காரர், சட்டியும் பாக்கும் கொடுத்து திருப்திசெய்து வைப்பதைப் பார்க்கிலும் இனிமையாகப் பேசி உபசரித்து காலாகாலத்தில் உணவிட்டு, மலர்ந்த முகத்தோடு குளிர்ந்த வார்த்தைகளைப்பேசி, அவர்களைத் திருப்தி செய்து அனுப்புவது எத்துணையோ பங்கு விசேஷமாகும். சடங்குகளிலும் சிலவற்றை மாற்றுவது நன்மை தருமென்றெண்ணுகிறேன். மாப்பிள்ளை யழைத்தல், மாப்பிள்ளை யறிதல், வேவெடுத்தல், மணவரை யிருத்தல், மஞ்சள் நீராடல் முதலிய சடங்குகள் நிரம்ப அவசியமானவைகளேயாம். இவைகளைத் தவிர மற்ற அனவசியமான சடங்குகளை நிறுத்தி, ஊர்வலம் வருதல், ஊஞ்சலில் வைத்தல் முதலியவைகளைக் கையாடலாம். மாப்பிள்ளை குதிரையேறுவதைக் காலை மாலையான குளிர்ந்த நேரத்திலாவது அல்லது ஊர்வலம் வரும்போது ஆலத்தி சுற்றுவதென்றுவது மாற்றிக்கொண்டால், மிக்க சௌக்கியமுண்டாகும். குளிர்ந்த நேரத்தில் வைத்துக்கொள்ளுவதால் மாப்பிள்ளை மாமனுக்கு சௌகரியமாக விருப்பதோடு மற்றவர்களுக்கும் உற்சாகமாகவிருக்கும். இப்படியும் பல ஊர்களில் நடக்கிறதென்பது எனக்குத் தெரியும். இதுதான் நல்ல முறை. திருப்பூட்டுதல், மந்திரமோதல் முதலியன சாஸ்திரயுக்தமானவை. அந்தகைய விஷயங்களை மட்டும் நம்மவர் கவனிப்பதில்லை. பெரும்பான்மையான கல்யாணங்களில் பார்த்தநாழிகைப்படி திருப்பூட்டுவதில்லை. மந்திரமோதல், யோக்கியர்களான பிராமணர்களைகொண்டு நடத்தாமல், அகப்பட்டவர் யாராலும் அவர்களைக்கொண்டு காரியத்தை முடித்துவிடுகிறார்கள். ஆனால், அனவசியமான காரியங்களை வெகு அக்கரையோடு விடாப்பிடியாகச் செய்கிறார்கள். சாஸ்திரயுக்தமான சடங்குகளைத் தவிர மற்றவைகளை யெல்லாம் காலத்துக்கேற்றபடி மாற்றிக்கொள்வது ஞாயவிரோதமன்று.

ஆனால் இவைகளெல்லாம் நமக்குப் பொருளை நஷ்டப்படுத்தவில்லை. வீணான கஷ்டத்தைத் தருகின்றன. கல்யாண முதலிய விசேஷங்களிற் செய்யப்படுகிற செலவுகளோ, நம்மவரை இடுப்பு முறியச்செய்கிறது, கஷ்ட நஷ்டங்களைச் சாகும் வரையிற்றருகிறது,

ஆயுள் முழுதும் அன்னிய நாட்டில் ஒரு சுகமின்றி வசிக்கச் செய்கிறது, மும்மூன்று வருஷத்தீபாந்திர சிக்ஷையை யடிக்கடி யடையச் செய்கிறது, ஞாயவிரோதமான அநேக வழிகளில் நடக்கச் செய்கிறது, இன்னு மெத்தனையோ துன்பங்களைத் தருகிறது. இவ்வளவு பாடுபட்டும் ஆயிர ரூபா ஆஸ்தியுள்ள ஒரு குடியானவனுக்கு இருக்கிற வாழ்வுகூட நமக்கு ஒரு லக்ஷ ரூபாயிருந்தாலும் வருகிறதில்லை. மனித வாழ்வைக்கெடுக்கிற பெரிய அபாயத்தை, நம்மவர் அசட்டைசெய்து கொண்டிருப்பது முடிவில் எப்படி வந்து முடியுமோ தெரியவில்லை. நம்மவர் கல்வி கற்கவும், பொது விஷயங்களைக் கவனிக்கவும் சாவகாச மில்லாமலிருப்பதற்கு இதுவே காரணம். என்னை யெனின், 10, 12 வயது முதல் மரணம் வரை ஒரு இமைப்பொழுது கூடப்பொருளை மறந்திருக்கக் கூடாமல், இடைவிடாது கவலையோடும் துக்கத்தோடும் உருப்போட்டுத் தொகை யேத்திச் சம்பாதித்து ஒரு பெண்ணுக்குச்செலவு செய்யக் காணாதே யென்று பின்னும் சம்பாதிக்க வேண்டியதாகிறது. ஆனால், இல்வாழ்வுடைய ஒவ்வொருவனும் பொருளீட்ட முயல வேண்டியதுதான். அதைத்தானு மனுபவியாமல் தரும வழியாகவும் செலவு செய்யாமல், வீணாக்குவது தான் பரிதாபம். இந்த அசம்பவத்தை நாம் இந்த நிமிஷமே கவனிக்கவேண்டும்.

நமது கல்யாணங்கட்கு 1000 அல்லது 1500 ரூபாவுக்குமேல் ஒருபோதும் செலவு செய்யக்கூடாது. இதன்மேல் கொடுக்க விரும்புகிறவர்கள் சாதாரண காலங்களில் தங்கள் பெண்களுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் கொடுக்கலாம். அதை மற்றவர் பின்பற்ற வேண்டிய அவசியமிராது. இந்தச்சமயத்தில் இன்னொரு விஷயமும் சொல்ல விரும்புகிறேன்:

## மாப்பிள்ளை ஆராய்ச்சி.

அதாவது இப்போதுள்ளபடி பெண்களுக்குத் தொகை வாங்கிக்கொண்டு செய்கிற விவாகம் ஒன்று, கொடுத்துச்செய்கிற விவாகம் ஒன்று. இவ்விரண்டும் அனுட்டானத்திலிருக்கின்றனவன்றோ? வாங்கிச் செய்கிற விவாகத்தைச் சாமானியர் விவாகமென்றும், கொடுத்துச் செய்கிற விவாகத்தைச் செல்வர் விவாகமென்றும்

வழங்குவோம். இவ்விரண்டுவகை விவாகங்கட்கும் மாப்பிள்ளை
யைப் பற்றிய ஆராய்ச்சி அவசியமே யாகுமெனினும், சாமா
னியர் விவாகத்தில் பெரும் பொருள் வாங்கவேண்டிய கஷ்ட
காலத்தால் தாங்கள் அருமையாகப் பெற்று வளர்த்த பெண்
ணைச் சற்றேனு மிரக்கமில்லாத தடியனோ, மூடனோ, மூர்க்
கனோ, குரூபியோ, அறிவிருந்த ஊரிற் குடியிருந்து மறியாத
மட்டியோ, மடையனோ, சூதாடியோ, யாராயிருந்தாலும்
தாங்கள் விரும்பிய பொருளைத் தருவானாயின் அதைப் பெற்றுக்
கொண்டு அந்தக் கிடங்கிற் றள்ளிவிடுகிறார்கள். ஒருக்கால் அப்
பெண்ணின் நல்லதிர்ஷ்டத்தால் யோக்கியனும், ஒழுங்கானவனு
மான மாப்பிள்ளையாக வாய்த்துவிடவுங்கூடும். ஆனால் அப்பெண்ணி
னிமித்தம் கையிலிருந்த பொருளையெல்லா மிழந்துவிட்டுத் தன் சம
ர்த்தைக் காட்டக்கூடாமல் தனது கூர்மையான புத்தி மழுங்கி
உபயோக மற்றவனாகி விடுகிறான். ஏன்? பொருளில்
லார்க்கு ஒன்றுமில்லை. வறுமையுண்டானால் புத்தியும் மங்கிவிடும்.
ஆதலால், சாமானியர் விவாக மாப்பிள்ளை யாராய்ச்சியைப்பற்றிப்
பேசுதற்கு எனக்குச் சம்மதமாகவில்லை. செல்வர்கள் ஏன் மாப்பிள்
ளையைப்பற்றி ஆராயாமல் நேர்ந்த நேர்ந்தபடி விவாகத்தை முடிக்க
வேண்டும்? உண்மையாக இப்போது செல்வர்கள், சம்பந்தி வீட்
டில் ஏராளமான திரவிய மிருக்கிறதா என்பதொன்றை மட்டுந்
தான் பிரதானமாகக் கவனிக்கிறார்கள். திரவியமிருந்தால் மாப்பிள்
ளையைப்பற்றி அவசியமில்லை. ஆண்பிள்ளையாக இருந்தாற்போதும்.
வயது, குணம், மனம், புத்தி ஒழுக்கம் முதலான ஒன்றையும்
கவனிப்பதில்லை. ஆனால் பொருளு மிருக்கவேண்டியது தான்,
அதோடு புத்திமானான மாப்பிள்ளையாகவும், போதுமான வயது
மிருக்கவேண்டும். புத்தியில்லாவிட்டால் பொருளை யெப்படிப்பாது
காப்பது? பொருள் நிலையற்றது. புத்திநிலையானது. பொருள்
இலேசாக இருந்து புத்தி விசேஷமாகவிருந்தால், அந்த மாப்பிள்ளை
ஆயிரமடங்கு சிலாக்கியம். நமது செல்வச் சகோதரர்கள் இதைக்
கவனியாமல் பொருள் ஒன்றையே கருதி, விவாக முடிப்பதா
லன்றோ நம்மவருட் கல்வியும் சூனியமாக ஏதுவாயிற்று? விவேகி
கட்குப் பெண் கொடுப்பதென்ற வழக்கமிருந்தால் நம்மவருட்

கல்வி யெவ்வளவு தீவிரமாகப் பரவியிருக்கும்? இனியாவது இதைக் கவனிப்பார்களாக. இதை இம்மட்டோடு நிறுத்தி மேலே எடுத்துக் கொண்ட விஷயத்தைப்பற்றிப் பேசுகிறேன்.

## செலவைக்குறைக்கும் வழி.

கல்யாணங்களில் 1000 அல்லது 1500ரூபா செலவு செய்வதோடு மற்ற புதுமை வேவு தீர்த்தம் சாப்பிடுதல் முதலிய விசேஷங்களில் திருப்தியான சாப்பாட்டைத் தவிர வேறு ஒருகாசு கூடச் செலவு செய்யக்கூடாது. புதுமைகளில் 1000ரூபா முதல் 3000ரூபா வரை செலவுசெய்து ஊராருக்குச் சீனி, பாக்கு, பழம், சட்டி முதலியன கொடுக்கிறோமே, அவை அவர்கட்கு என்ன பிரயோஜனப் படுகின்றன? கொடுக்கிறவர்கட்கு ஆயிரக்கணக்கான ரூபா வீணுகிறது, வாங்குகிறவர்கட்கு ஒரு பைசாவுக்குப் பிரயோஜனமில்லை. ஆனால் வாங்கிக்கொண்டதற்கு மேல் தங்கள் வீட்டுப்புதுமையில் கொடுக்க முயன்று, தாங்களும் நஷ்டமடைகிறார்கள். அதைத்தவிர வேறு பயனொன்றுமில்லை. இதை யுற்றுநோக்குமிடத்து "சூதாடினவன் கெட்டான், சுற்றியிருந்தவன் வாழ்ந்தா"னென்றபடி நம்மவருக்கு நஷ்டமும் பாக்கு வியாபாரி, பழவியாபாரி, சீனிவியாபாரி, பாத்திரவியாபாரிகட்கு லாபமுமுண்டாகிறது. இதைநிறுத்திவிட்டா லென்ன? இதில் யாருக்கு லாபமிருக்கிறது? பொதுவாக நமது மரபினர்க்குநஷ்ட முண்டாகிறதேயன்றி, ஒருவரிருவர்க்கன்றே? இதற்கும் முதலிற் செல்வர்கள் தான் வழிகாட்டவேண்டும்.

நம்மவர் ஒற்றுமையாக ஒருமனப்பட்டு இத்தகைய கட்டுப்பாடுகளை ஆசரிப்பாராயின் நம்மவர்க்குண்டாகிற நன்மைகள் அளவிட முடியா. நமது குலம் குபேரசம்பத்தாகப் பெருகிவிடும். இப்படிச் செய்வதில் எல்லோருக்கும் லாபமும் சௌகரியமு மிருக்கின்றன. லாபமும் சௌகரியமும் ஒரு விஷயத்திலிருக்குமானால் அதையேன் பின்பற்றக் கூடாது?

இப்படியெல்லாம் செலவைச் சுருக்குவதென்றால் முதலில் பெண்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். அது தங்கட்கு அவமானமென்று கருதுவார்கள். ஆனால் அது அவர்களின் அறியா

மையின் இயற்கையே யன்றி வேறன்று. பொதுவாகப் பெண்களின் அறியாமைக்கும் பிடிவாதத்துக்கும் உதாரணமாகச் சில சொல்லுகிறேன். கல்வியறிவில்லாத பெண்கட்குக் கோடங்கி, சாமியாடிகளிடத்தில் அதிக நம்பிக்கை யுண்டன்றோ? குருவீற்றுப்பசுவொன்று கன்றீன்ற ஐந்தாறு மாதங்களுட் பின்னும் சினையாகிவிட்டதாற் பால் கறக்க நிற்கவில்லை. இதற்காக நண்பரொருவர் தன் மனைவியோடு ஊர் ஊராகச்சென்று கோடங்கிகளிடம் குறிகேட்டும் சாமியாடிகளிடம் சமுசயங்கேட்டும் அஞ்சேகாற் பணமும், ஆறேகாற்பணமுமாக முடிந்து முடிந்து மூட்டையாக்கியும் தீராமல் கடைசியாகக் குலதெய்வத்துக்கு ஒரு படைப்பும் படைத்துப்பார்த்தார். பயனில்லை.இதற்குள் வண்டி வாடகையும் தெய்வ காணிக்கையும், மாட்டு விலைக்கு மேற்போய்விட்டது. ஐந்தாறுமாதமு மாகிவிட்டது, அதற்குமேல் உள்ளபடிக்கே மாடு சினையானதென்று தெரிந்துகொண்டார். என்ன புத்திசாலித்தனம் பாருங்கள்! இவ்வளவுக்கும் நண்பர், பயித்தியக்காரரன்று. ஆனால் மனைவிக்கு மிகவும், பயந்தவர். இந்த மாட்டு விஷயமே அப்படியானால் மற்ற விஷயத்தைப் பேசுவானேன்.

ஆதலின் இவ்விஷயங்களையெல்லாம் பகுத்தறிய முடியாத பெண்களை யெதிர்பார்த்தால் நாம் முன்னேறுவ தெப்படி? அவர்களை யெதிர்பாராமல் நாம் (புருஷர்கள்)மட்டும் ஒருமனப்பட்டு நிற்போமாயின், அவர்கள் ஒப்புக்கொள்ளாமல் என்ன செய்ய முடியும்? அவர்கள் படிப்பில்லாதவர்கள் ஆதலின் நன்மை தீமைகளைப் பகுத்தறியார்கள். ஒரு நன்மையைக் காட்டினால் பின்பற்றப் பின்னடைய மாட்டார்கள். பற்றினால் கைவிடவும் மாட்டார்கள். காட்டாத வரையில் பழையவழக்கத்தை மறக்கமாட்டார்கள். காட்ட வேண்டிய கடமை நம்மதாதலின் நமக்கு முதலில் மந்திரிக்க வேண்டுமென்று முன்னமே சொல்லியிருக்கிறேன்.

## பூரி கொடுத்தல்

இனி நன்மை தீமையான எந்த விசேஷத்திலும் பிராமணர்கட்குப் பூரி கொடுக்கிறோம். அது அதிகமானால் கால் அல்லது அரை ரூபாவுக்கு மேலில்லை. அதை நம்மிடம் பெறுவதற்கு அவர்கள்

படுகிற கஷ்டம் கொஞ்சமன்று. எத்தனை மைல் தூரமானாலும் சித்திரைமாதத்து வெய்யிலானாலும் கார்த்திகை மாதத்து மழையானாலும் ஓடோடியும் வருகிறார்கள். வந்தவுடன் எந்தவிடம் எங்கே பூரியென்று வாய்பதறக் கைபதற விசாரித்து அதற்கென்று நியமிக்கப்பட்டிருக்கிற ஒரு இடத்தில் அடைக்கப்படுகிறார்கள். அதில் ஆசாரம் அநுஷ்டானம் உணவு முதலியன இன்றி சாயுங்காலம் வரை காத்திருந்து வெளிவரும்போது நீ முந்தி நான் முந்தி யென்று ஒருவரையொருவர் தள்ளிப்பிடித்து முன்வந்து பல்லோடு வாயைப் பறக்கக் காட்டி தங்கள் சரித்திரங்களை யெல்லாம் சொல்லி அரைக்கால் ரூபா அதிகமாகக் கேட்கிறார்கள். அதுவும் கொடுக்கப்படுவதில்லை. இவ்வளவு கஷ்டப்பட்டுப் பெறுகிறதைச் சிலர் சீட்டாடியும் சிலர் இன்னும் கெட்ட விஷயத்திலும் தொலைத்துவிட்டுத் திரிகிறார்கள். சிலர் வீட்டுக்குக் கொண்டுபோய் ஜீவிக்கிறார்கள். என்ன ஜீவனம்! சேர்த்தாப்போல் ஒரு மாதத்திற்குப் பூரி யகப்படாவிட்டால் வேறு வழியில்லை. ஆகவே நித்திய தரித்திரர்தான். நமக்கோ அரை, காலாகக் கொடுத்தும் ஆயிரக்கணக்காகச் செலவாகிறது. செலவாகியும் ஒரு பிரயோஜனமுமில்லை. வாங்குகிறவர்கட்குக் கஷ்டமும் நமக்கு நஷ்டமுமாக முடிகிறது. பூரி வாங்குகிற ஏழைப் பிராமணர்கள் தங்கள் வறுமையால் நம்மைத் தொந்தரவு செய்கிறார்கள். ஆதலால் அவர்கள் குலத்துக்கேற்ப மரியாதையாக நாம் நடத்த முடியாமல் சில நேரம் கடினமாகவும் பேசுகிறோம். சாஸ்திரப்படி உயர்குலத்தாரை ஏசப் பேசுவதால் பாவமாகுமென்று கருதப்படுகிறது. இதையே நம்பியிருப்பதால் அவர்கட்கு வேறேயொரு தொழிலும் தெரியாது பால்யம் முதல் பூரிவாங்க ஆரம்பித்ததால் படிப்புமில்லை. தங்கள் ஏழைத்தன்மையைப் பற்றிப் பேசத்தெரியுமேயன்றி வேறே சாமர்த்தியமுமில்லை. யோசிக்குமிடத்து இந்தப் பூரி என்ன செய்கிறதென்றால் அவர்களின் நித்திய கர்மானுஷ்டானங்களைக் கெடுத்து பிறப்பாலன்றி வேறே உயர்வில்லாமல் நித்திய தரித்திரர்களாய் அவர்கள் அருமையான மனுஷிய சரீரத்தை வீணாக்கி முயற்சியற்றவர்களாக்கிவிடுகிறது. இன்னும் இவர்களின் நிலைமை திருவாங்கூர் சமஸ்தானத்தில் ஊட்டுப்பிறையை நம்பியிருந்த பிராமணர்களின் நிலைமையாகவும் நேரக்கூடும். அப்படியானால்

அநந்து நாமே காரணமாகிறோம். ஆதலின் என் அபிப்பிராய
மென்னவெனின் தர்மம் செய்யப்படாதென்பதன்று. இப்படிச்
செய்யப்படாதென்பதேயாம். நம்மவர் தங்கள் செல்வத்துக்குத்
தக்கபடி ஏழைகளை ஆதரிப்பது அதிக அவசியமேயாகும். ஏழை
களை ஆதரிப்பதானால் அவர்கட்குக் கல்வியை விருத்திபண்ணவேண
டும். படிப்பிருந்தால் எப்படியும் பிறர்கை பாராமல் ஜீவிப்பார்கள்.
ஆசார ஒழுக்கங்களையும் கைவிடமாட்டார்கள். நன்றாய்ப் படிக்கும்
வரை அவர்கட்கு இனமாக உணவிடவேண்டும். படித்து முடிந்த
வுடன் அவர்களறிவுக்குத்தக்கபடி ஏதாவது தொழிலகப்படும்.
அப்போது அவர்கள் நாம் செய்த நன்றியை மறவாமல் வாழ்த்து
வார்கள். நமக்கும் புண்ணியமுண்டு. இப்போது நமது பிள்ளை
கட்கு முறையாகப் படிப்புச் சொல்லிக்கொடுக்க ஒரு தமிழ்ப்படித்த
பிராமணரைத் தேடினால் அகப்படுவதருமையாகிறது. எல்லாம்
நிரக்ஷரகுக்ஷிகளாக இருக்கிறார்கள். நமது தர்மம் அவர்கள் படிப்
புக்குப் பிரயோஜனப்பட்டிருந்தாலன்றோ அவர்கள் படிப்பு நமது
பிள்ளைகட்குப் பிரயோஜனப்பட்டிருக்கும்? இல்லாமையால் இதுவு
மில்லை அதுவுமில்லை யென்று முடிந்திருக்கிறது. ஆகவே நாம் என்ன
செய்யவேண்டும்? நமது விசேஷங்களில் அதாவது ஒரு கல்யாணத்
தில் பிராமணர்கள் விஷயமாக எவ்வளவு செலவுசெய்ய விரும்
புகிறோமோ அதை யொரு தருமப் பள்ளிக்கூடத்துக்கு உபயோகப்
படுத்தி அப்பள்ளிக்கூடத்துக்கு அம்மாப்பிள்ளை பெண்ணின் நாமங்
களைக் கலந்திட்டு அதின் மூல தனத்துக்குத் தக்கபடி ஏழைப்பிள்ளை
கட்கு உணவிட்டு படிப்புச் சொல்லிக்கொடுக்கச் செய்யவேண்டும்.
இப்படியே சஷ்டியப்தபூர்த்தி, சிரார்த்தம் முதலிய விசேஷங்களி
லும் செய்யவேண்டும். சிலர் வீட்டில் முதல் சிரார்த்தத்திற்கு
20000 ரூபாவரை செலவு செய்யப்படுகிறது. அந்தோ! இந்தப்
பெருந்தொகை ஒரு பள்ளிக்கூடமாக இருந்தால் எத்தனை ஏழைகள்
படித்திருப்பார்கள். எவ்வளவு புண்ணியமுண்டாகியிருக்கும்!
ஆனால் பெருந்தொகைதான் நேரே பள்ளிக்கூடமாகிறது, சொற்பத்
தொகையானால் என்ன செய்வதென்றால் அதைப் பெருந்தொகை
யாகும்வரை சேர்த்துப் பெருக்கி வரலாம். பெருந்தொகையான
வுடன் ஆரம்பிக்கலாம். பூரி கொடுப்பதாலுண்டாகும் பிரயோஜனத்

தையும் இக்கல்வியாலாகும் பிரயோஜனத்தையும் சீர்தூக்கிப் பாருங்கள். எது விசேஷம்? விசேஷமானதைக் கையாடுவோம். நிற்க,

சிபார்சுக் கடிதம்.

நமது விசேஷகாலங்களில் சிபார்சுக் கடிதங்கட்குப் பணம் கொடுக்கிறோமே, அது கடிதத்துக்கா? கொண்டுவந்தவருக்கா? கடிதத்திற்கென்றால் அதில் புண்ணியமொன்றுமில்லையே! கொண்டுவந்தவருக்கென்றால் அதிகமாக ஞாயமில்லையே. ஆகவே இரண்டுக்குந்தானென்று சொல்வது பொருந்தக்கூடும். இதை யோசிக்குமிடத்து ஒருவர்க்கொருவர் கொடுத்து வாங்கிக்கொள்ளுகிற வட்டியில்லாத கடனேயாகும். அதைப்பார்க்கிலும் அவரவரே நேரே கொடுத்துவிடுவது நன்மையென்று தோற்றுகிறது, விசேஷ காலங்களில் ஆளைத்தெரியாமல் அநேக சிபார்சு கடிதங்களும் வருகின்றன. அவற்றுள் அசந்து மறந்து அவசியமான கடிதங்கட்குக் குறையக் கொடுத்துவிட்டால் மனஸ்தாபமுண்டாகிறது. கௌரவஸ்தர்களின் பொய்க் கையெழுத்திட்ட கடிதங்களும் வந்து ஏமாற்றி அதிகமாகவும் பெற்றுக்கொள்ளுகிறது. இப்படிப் பல சங்கடங்கள் இந்த சிபார்சுக் கடிதத்தாலுண்டாவதால் இதை நம்மவர் நிறுத்திவிடுவது நன்மையென்று தோற்றுகிறது.

சாமியார்கள்.

> “ வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
> குறியெதிர்ப்பை நீர துடைத்து”

என்ற திருவாக்கின்படி ஏழைகட்குதவுவதே தர்மம் ஆகுமேயன்றி ஏமாற்றுகிறவர்கட் குதவுவது ஒருபோதும் தர்மமாகாது. ஆசையற்றேமென்று துறவுபூண்டு, பணப்பேய் பிடித்து, டம்பத்தோடு பொருள் பிடுங்குகிற பொய் வேஷதாரிகட் கீவது வீண்செலவில்லையா? நம்மிடத்துள்ள ஆராயாத்தன்மையால், இந்தப்பொய் வேஷதாரிகள் விர்த்தியாகி வருகிறார்கள். நம்மவரை ஏமாற்றுகிற வழியை நன்றாய்க் கண்டுகொண்டார்கள். தங்கள் போலி வேஷத்துக்குக் காவித்துணியும், உழக்கு விபூதியும், 5, 6 உருத்திராக்ஷ மாலையுமின்றி வேறே கொள்முதல் கிடையாது. ஏதாவது அரை குறை

யான சில செய்யுட்களும் பாடமிருக்கும், இரண்டு, நாலு, சிஷ்யர்கள், வண்டி, பட்டுத்திண்டு, புலி அல்லது மான்தோலாசனம், சிபார்சுக்குச் சில பணக்காரர்கள், விஷயம் கோயில் கட்டுதல் அல்லது மடங் கட்டுதல் இவ்வளவு ஆர்ப்பாடத்தோடு வந்து யாசித்தால் ஆயிரக் கணக்காகக் கொடுக்கிறோம். ஒரு ஏழை தலைவாயிலில் நின்று ஒரு நாள் முழுதும் கூவினாலும் அதற்குச்செவி கொடுப்பதில்லை. இதென்ன தர்மசிந்தையோ! ஆனால் எல்லோரும் பொய் வேஷதாரிகளென்று நான் சொல்லவில்லை, ஒருவரிருவர் உத்தமராகவு மிருக்கலாம். அவர்களும் துறவு பூண்டபிறகு அநித்தியப் பொருள்களை இச்சிப்பது கூடாத விஷயம். ஆசையற்றதே துறவு.

"ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காதலிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு"

ஆதலின் எவன், பணத்திலோ, அல்லது மற்ற விஷயங்களிலோ எள்ளளவாயினும் ஆசை வைக்கிறானோ அவன் உண்மைத் துறவியன்று என்பதை நம்மவ ரறியவேண்டும். அவர்களைத் தெய்வமாக நினைத்து வழிபடுதல் அறியாமையேயாகும். நம்மைப்போல் அவனுக்கும் ஆசையிருக்குமானால் நமக்கும் அவனுக்கும் என்ன பேதம் பொய் வேஷத்தை விட்டு ஒரு மனைவியை மணந்து உத்தமனாக இருந்தால் அவனைக்கௌரவமாக மதிக்கலாம். பற்றற்ற உண்மைத் துறவிகளைத் தெய்வமாக மதிக்கலாம். மகான்களான சிவஞான சுவாமிகள், ஆதி சங்கராச்சாரியார்முதலிய உண்மைத்துறவிகள்செய்த காரியங்கட்கும், இக்காலத்துப் போலித் துறவிகள் செய்கிற காரியங்கட்கும் எவ்வளவு ஏற்றத்தாழ்வுள்ளன. ஆசைநீங்காத் துறவிகட்கும் நாடகத்தில் வருகிறஅரிச்சந்திர ராஜனுக்கும் என்ன வித்தியாசம்? இரண்டும் பொய்வேஷமேயாம். இந்த வேஷதாரிகளை நம்பி மோசம் போய்ப் பொருளை வீண்செலவு செய்யக்கூடாதென்பதே நமது அபிப்பிராயம். டம்பத்துக்கும் பணத்துக்கும் ஆசைப்படுகிறவன் ஞானியன் றென்பது சத்தியமாகும்.

## மணப் பொருத்தம்,

இனிக் கல்யாணங்களில் மணப்பொருத்தம் பார்க்கிற விஷயத்தைப்பற்றிச் சிறிது சொல்லவேண்டியதாக இருக்கிறது. ஒருவிவாகம் நடத்தவேண்டுமானால், ஏகதினம், கணம், மாகேந்திரம், ஸ்திரீதீர்க்கம், பிராணி, இராசி, ஆதிபத்யம், யோநி, இரச்சு, நாடி, வேதை, வசியம் முதலிய பொருத்தங்களைப் பார்த்து, ஒன்றுக்கொன்று பலமிருப்பதாகச் சரிக்கட்டி எப்படியாவது விவாகங்கள் முடிந்துவிடுகின்றன. சம்பந்தியும், சம்பந்தியும் சம்மதித்த பிறகு பொருத்தம் அமையவில்லை யென்று இதுவரை ஒரு கல்யாணமும் நின்றிருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே, நமது வழக்கங்களுள் இதுவும் ஒன்றாகக் கடனுக்குப் பார்க்கப்படுகிறதேயன்றி உண்மையில் அதன் பிரயோஜனங் கருதிப் பார்ப்பதில்லை யென்பது வெளியாகிறது. நமது கல்யாணங்களில் வாழ்க்கைப்படுகிற பெண்ணுக்கும், கொள்ளுகிற மாப்பிள்ளைக்கும் யாதொரு சுதந்தரமுமில்லை. சுற்றியிருப்பவர்கள் சம்மதித்தால் மாதா பிதாக்கள் சம்மதிக்கிறார்கள், மாதாபிதாக்கள் சம்மதித்தால்ஜோதிஷர் சம்மதிக்கிறார். ஜோதிஷரைப்பார்த்துச் சாஸ்திரமும் சம்மதிக்கிறது. சாஸ்திரம் சம்மதித்தால் எல்லாம் சரியாகிவிடுகிறது. ஆனால், கடைசியில் சுகதுக்கங்களையனுபவிக்கிறவர்கள் பிள்ளையும் பெண்ணுமன்றோ? சுற்றியிருப்பவரெல்லாம் லேசு லேசாய் விலகிவிடுகிறார்கள். கல்யாண வீட்டில் தாலி கட்டியவுடன், கட்டியகிழவர் போய்விடுவார். மற்றநாள் மூன்றாநாள் சிநேகர்கள் போய்விடுவார்கள். ஐந்தாநாள் ஆறாநாள் பங்காளிகள் போய்விடுவார்கள். இன்னும் 2, 3 தினங்களில் சுற்றத்தாரும் போய்விடுவார்கள். மற்றுமிரண்டு மூன்றுநாட்களில் மாப்பிள்ளையும் பெண்ணுந்தான்மிச்சம். அப்போது அவ்விருவரும் ஒருமனப்பட்டு இல்லறதர்மங்களை நடத்தவேண்டும். அதற்கு முன்சொன்ன பொருத்தங்கள் பிரயோஜனப்படுவதில்லை. அப்பொருத்தம் 8 வயதுப் பிள்ளைக்கும் 16வயதுப் பெண்ணுக்கும் தடையில்லாமற் பொருந்தும். 50 வயது மாப்பிள்ளைக்கும் 5 வயதுப் பெண்ணுக்கும் அட்டியில்லாமற் பொருந்தும். இன்னும் எப்படி யெப்படி தலைகீழாக வேண்டுமானாலும் பொருந்தும். ஆனால் வாழ்க்கைக்குப் பிரயோஜனமில்லை. இந்தப் பொருத்தம் பார்த்துச் செய்த விவாகங்களில் நூற்றுக்குப் பத்தா

வது ஸ்திரீபுருஷர்கள் ஒருமனப்பட்டு வாழுகின்றார்களா? "தவளை தண்ணீர்க்கிழுக்கக் கரட்டான் வேலிக்கிழுப்பது போல" ஒருவர் போனவழி ஒருவர் போகாமல் ஒற்றுமை கெட்டு மனித வாழ்வை அநியாயமாக இழக்கின்றார்கள்.

> "மருவிய காதல் மனையாளும் தானும்
> இருவரும் பூண்டிர்ப்பின் அல்லால்—ஒருவரால்
> இல்வாழ்க்கை யென்னும் இயல்புடைய வான்சகடம்
> செல்லாது தெற்றித்து நின்று."

என்றபடி சதிபதிகள் ஒற்றுமைப் படாத இல்வாழ்க்கை என்ன பிரயோஜன முடையது? பிள்ளையின் வயதுக்கு ஒரு வருஷமாவது பெண் சின்னவளாக இருக்கவேண்டியது நிரம்ப அவசியம்; அப்படியில்லாத குடும்பம் வேலியில்லாத பயிராகிவிடும். சதிபதிகள் ஒருவரை யொருவர் நேசித்து வாழவேண்டியது அவசியமாதலின் முதலில் அவர்களுக்கு விஷயங்களைச் சொல்லி அவர்க ளபிப்பிராயத்தையும் அனுசரித்து முடிக்கவேண்டும். இன்றேல் நாயும் பூனையும்பட்ட பாடாகிவிடும். குணப்பொருத்தம் நிரம்ப அவசியமானது. சதிபதிகளிருவரும் முன்கோபிகளாக இருந்தால் அக்குடும்பம் எப்போதும் கலகமுடைய தாகும். ஒருவராவது சாந்தகுண முடையவர்களாக இருக்கவேண்டியது முக்கியமாகக் கவனிக்கத் தக்க விஷயம். இனிச் சரீரப்பொருத்தமும் அவசியமாகிறது. பஞ்சாபிகள்போல் நீண்டு பெருத்த திடசரீரிகட்குக் குள்ளமான பெண்களை மணமுடித்தால் அப்பெண்களின் உயிர் (பிதாவைப்போற் பிள்ளை உற்பத்தி யாகுமானால்) பெரும்பாலும் முதற்பிரசவத்தோடு முடிந்துவிட நேருகிறது. விவரம் தெரியாத பாலியர்கட்கு விவாகம் செய்தல் எப்பொழுதும் கவலைக் கிடமானதேயாகும். சதிபதிகள் தக்க வயதுடையவர்களாகிக் கல்யாணம் என்பதை இன்னதென் றறிந்து குடும்ப பாரத்தை நிர்வகித்து நடத்தும் சக்தியுடையவர்க ளாகுமுன் விவாகம் முடிப்பதைப்போல் அறியாமை வேறொன்று மில்லை. ஆகவே நமது அபிப்பிராயமென்னவெனின், முன் சொல்லிய சாஸ்திரப் பொருத்தங்களோடு வயதுப்பொருத்தம், குணப் பொருத்தம், மனப்பொருத்தம், இலக்ஷணப்பொருத்தம், சரீரப்

பொருத்தம் முதலிய முக்கிய பொருத்தங்களையும் பார்த்து, பாலகர்கட்குப் பருவப் பெண்ணைச் செய்கிற ஆபாசவிவாகம், அறியாப்பிள்ளைகட்குச் செய்கிற மாப்பாவை விவாகம் முதலிய சீர்கெட்ட விவாகங்களை நிறுத்திச் சதிபதிகள் சந்தோஷவாழ்வை யடையும்படி நாகரீகமாகவும் சாஸ்திர சம்மதமாகவும் மணமுடிக்க வேண்டுமென்பதேயாம்.

## வீடுகட்டுதல்.

இனி நம்மவர் வீடு கட்டுகிற விஷயத்தைப்பற்றிச் சிறிது சொல்லவேண்டியதும் அவசிய மாகாதென் றெண்ணுகிறேன். அளவு கடந்து செலவுசெய்து தேவையில்லாத பெரிய பெரிய வீடுகளாக நம்மவர் கட்டுகிறார்களென்று பொதுவாக எங்கும் சொல்லிக்கொள்ளப்படுகிறது. உண்மையில அது கவனிக்கத்தக்கதே யாம். வீடுகள் எப்பொழுதும் அடக்கமாகவும் அழகாகவும் இருக்கவேண்டுமேயன்றி வீண் பெருமைக்குக் கண்டபடி விசாலப் படுத்துவது விவேக மன்று. பொருளை விழுங்கிய பூதங்கள் போலப் பெரிய பெரிய வீடுகளால் வீண்செலவேயன்றி நன்மையில்லை. முதலாவது, அவற்றில் ஒன்றியாகக் குடியிருப்பதற்குப் பயமாக இருக்கும். (2.) சுத்தமாக வைத்துக்கொள்ளவும் இராவில் தீபமிடவும் முடியாது. (3.) ஆட் பழக்கமில்லாமற் சில காலமிருந்தால் அவற்றில் வௌவாலடைந்து நாற்றமுண்டாகும். (4) ஒரு காலத்தில் ஓடு மாற்றவும் முடியாமல் நேரக்கூடும். இப்படிப் பல விதத்திலும் நன்மையில்லாத விஷயத்திற் பெரும் பொருள் செலவு செய்தல் வீணான நஷ்டமில்லையா? நம்மவர் கட்டுகிற வீடுகள் பெரும்பாலும் சுகாதாரத்துக்கு முற்றிலும் விரோதமாக இருக்கின்றன. எந்த வீட்டில் காற்றோட்டமும் போதுமான வெளிச்சமும் இல்லையோ அதில் வசிப்பது நோய்க்கிடமாகும். குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்டது போலச் சௌகரியத்துக் கென்று வீடுகட்டி நோய்க்காளாக லாமா? உதாரணமாக ஒரு லக்ஷரூபா செலவு செய்து கட்டப்பட்டிருக்கிற வீடொன்றைப் பற்றிச் சொல்லுகிறேன். அதில் நின்று மற்ற விஷயங்களை ஊகித்துக்கொள்ளலாம். சகோதரர்கள் நாலு பேருக்குப் பொது

வில் ஒரு லக்ஷ ரூபா செலவு செய்து ஐந்தாங்கட்டு வரை கட்டி, முதற்கட்டில் மூன்றும் பத்தி வீடு (உள்வீடு வெளிவீடு) உருப்படி 12ம், இரண்டாங் கட்டில் இரண்டாம் பத்தி வீடு (ஒற்றைவீடு) உருப்படி 12ம், மூன்றுங்கட்டில் அரை உருப்படி 12ம், மேல் வீட்டறை உருப்படி 24ம், நாலாங் கட்டில் சமையல் வாரமும், ஐந்தாங் கட்டில் மாட்டுக்கொட்டடியும் இப்படி ஒரு வீடு உண்டு. இந்த வீட்டின் முகப்புக்கதவு எப்பொழுதும் திருக்காப்பிட்டிருக்குமாம். அந்தத் தகவல் தெரியாதவர்கள் போய் ஒரு நாள் முழுதும் கூவினாலும் பதில் கிடைக்கமாட்டாது. ஏன்? முதலிரண்டு மூன்று கட்டுகளில் அணில், எலி, பூனை, வௌவால் முதலியன அன்றி மனிதவாசமில்லை. நாலைந்தாங் கட்டுகளிற் குடியிருப்பு. முதற் கட்டில் தீவர்த்திக் கொள்ளையிட்டாலும் அந்தச் சப்தம் நாலைந்தாங் கட்டுகட்குக் கேளாது. ஒருவாறு கேட்கக் கூடுமானாலும் அங்கு சகோதரர்களின் மனைவிமார் ஒருவருக்கொருவர் பிடிக்கிற ஓயாத சண்டையின் பேரிரைச்சல் ஒன்றையும் கேட்கவிடாது. என்ன பரிதாபம் பாருங்கள்! "கொடுத்தும் கொல்லை வழியா" என்றபடி ஒரு லக்ஷ ரூபா செலவு செய்தும் மாட்டுக்கொட்டடியில் வசிக்கலாமா? பொருள் தேடியது நாமா? வௌவாலும் எலியும் பூனையுமா? போனது போகட்டும். இனியாவது நாம் அருமையாகத் தேடிய பொருளை விவேகமாக உபயோகிப்போம். உள்வீடு வெளி வீடு வைத்துக் கட்டுகிறோமே, அந்த உள் வீட்டில் சித்திரைமாதத்து வெய்யிலிற் பகல் 12 மணிக்குப் புகுந்தாலும் கையில் விளக்கின்றி ஒன்றும் செய்வதற்கில்லை. அந்த உள்வீடு வைத்துக் கட்டாவிட்டாலென்ன? எந்தச் சிற்பசாஸ்திரி அப்படி அபிப்பிராயப்படுகிறார்? ஒரு குடும்பத்தில் நான்கு சகோதரர்களிருந்தால் நான்கு பேரும் ஒன்று சேர்ந்து ஒரு லக்ஷ ரூபா செலவு செய்து பெரிய வீடாக ஒரு வீடு கட்டுவதிலும் அதே செலவில் நான்கு வீடாகக் கட்டிக்கொள்வது எவ்வளவு நன்மையாகும். எந்த ஜாதியிலும் சகோதரர்கள் ஒரு வீட்டில் ஒற்றுமையாக வசிப்பது மிக அருமை. ஒற்றுமைக் கேட்டுக்கு முக்கிய காரணங்களில் இதொன்று. "கிட்டவிருந்தால் முட்டப்பகை, அகல விருந்தால்

நிகழ உறவு" என்ற பழமொழிப்படி அடுத்திருப்பதால் நட்புக் குறையும். ஒருவாறு புருஷர்கள் ஒற்றுமையாக இருந்தாலும் பெண்கள் ஒற்றுமைப்பட மாட்டார்கள். பெண்களால் புருஷர்களும் சில நேரம் மனஸ்தாபப்பட நேரும். தனித்தனி வசிப்பதால் இந்தக் கஷ்டமின்றி ஒற்றுமையாக வாழலாம். ஒருவர் வாழ்வைப்பார்த்து மற்றவர் பொறாமையும் ஆத்திரமும் கொள்ளாமல் சந்தோஷமாகப் பொழுதுபோக்கலாம். ஒரு குடும்பம் வசிப்பதற்குக் கூடினால் இருபத்தையாயிர ரூபா செலவிட்டு வீடு கட்டலாம். (அதுவே பெருந்தொகைதான்) அது பழக்கத்துக்குப்போதுமோவென்று சிலர் லயமுறின் கட்டுகிற விதமாகக் கட்டினால் அதுவே எதேஷ்டமென்போம். ஒரு லட்ச ரூபா செலவு செய்து வீடு கட்டிய ஒருவர் பத்தாயிர ரூபாவிற் கட்டிய வீட்டைக்கண்டு ஆசைப்படுகிறாரே! என்? அது அவ்வளவு விவேகமாகக் கட்டப்பட்டிருக்கிறதா லன்றோ? "இடம்பட வீடிடேல்" என்று ஔவையார் சொன்னது நம்மவர்க்கில்லை போலும்.

வீடுகட்டுவதின் நோக்கமென்ன? புகழுக்கும் புண்ணியத்துக்குமா? இல்லையே? நமது சொந்த சௌக்கியத்துக்குத் தானே? நம்மவர்கட்டுகிற வீட்டின்அமைப்பு சௌக்கியத்துக்கு முழுதும் உபயோக மானவைகளாக இல்லையே! இந்த வீடு கட்டுகிற விஷயத்தில் நம்மவருள் எவ்வளவு லோப குணமுள்ள மனிதனும் பெரும் பொருள் செலவிட முன் வருவது ஒரு ஆச்சரியம், [illegible] பரதேசிக்கும் அரைக்காசு கொடாத லோபிகளும், வீட்டு விஷயத்தில் ஓட்டுச் சல்லிபோற் பணத்தை வாரி எறிகிறார்கள் என்றால் அது ஆச்சரியமில்லையா? ஒன்றுக்கு முதவாத அவர்கள் பொருள் அப்படி வீணாகப் போகட்டும். தயாள குணமும் தர்ம சிந்தையுமுள்ள உத்தமர்களின் பொருளும் அப்படிப் போகக்கூடாதென்பது தான் நபதபிப்பிராயம். முடிவாக நாம் கூறுவது என்னவெனின், 10000 ரூபாவுக்கு மேல் 25000 ரூபாவுக்குள் அடக்கமாகவும் அழகாகவும் வீடுகள் கட்டப்பட வேண்டுமென்பதும், உள்வீடு வெளி வீடு வைத்துக் கட்டவேண்டியதும், பட்டசாலை வேண்டியதும், முற்றத்துக்காகப் பெரிய இடத்தைப் பழக்கமில்

லாமல் விருந்துவதும் அநாவசியமே யென்பதும், சகோதரர்கள்
தனித் தனி வீடு கட்டிக்கொண்டு வசிக்கவேண்டுமென்பதும், வீடு
களை எப்போதும் பெருக்கிப் பரிசுத்தமாக வைத்துக்கொள்ள
வேண்டுமென்பதும், இரவில் ஒவ்வோரிடமும் தீபமிட்டு இலட்
சுமி வசிக்கு மிடமாகச் செய்துகொள்ளவேண்டுமென்பதும், முக
ப்புக் கதவு எப்பொழுதும் திறக்கப்பட்டிருக்க வேண்டுமென்பதும்,
தேடி வருகிறவர்கள் எளிதாகச் சந்திக்கத்தக்கதாக வீட்டுக்கு
டைய ஆண்பிள்ளைகள் பெண்பிள்ளைகளின் சமையற் கட்டில்
எப்பொழுது மிராமல் பெரும்பாகமான பொழுதை முகப்பிலிரு
ந்து போக்கவேண்டு மென்பதும், வீடு மூடியும்போது முகப்பில்லா
மற் குறைப்படுத்தி முடிப்பது சிலாக்கியமில்லை யென்பதும், படுக்
கைக்குக் காற்றோட்ட மில்லாத சந்து பொந்துகளை விட்டு ஒரு
வசதியான இடமும் சுகமானதும் சுத்தமானதுமான படுக்கையும்
வேண்டியது நிரம்ப அவசியமென்பதும் பிறவுமாம். வீடு கட்டு
கிற விஷயத்திற்கூட பழைய வழக்கமனுட்டிக்க வேண்டியதில்லை.
பெரிய வீட்டாற் பெருமையொன்று மில்லை. மண்ணாலும் கல்லா
லும் கட்டுகிற வீட்டையடைவது நமது வாழ்க்கையின் நோக்க
மன்று, சுருக்கமாக வீடுகட்டிச் சுகமாக வாழ்ந்து அதில் மிஞ்சும்
பொருளை அறவழியிற் செலவிட்டு விண்ணோரும் புகழும் மோக்ஷ
வீட்டை யடைவதே நமது வாழ்க்கையின் நோக்கமாகவேண்டும்.

## இசை குடிமானம்.

இனி நம்மவர் கல்யாணத்தில் இசை குடிமானமென்னும்
சாக்ஷிப் பத்திர மெழுதுவதைப் பற்றிச் சிறிது பேசிவிட்டு என்
பேச்சையொரு முடிவுக்குக் கொண்டுவரலாமென்றெண்ணுகிறேன்.
அது விவாகம் நடந்ததற்குச் சாக்ஷிப் பத்திரமாக விருப்பதோடு நம்
மவரின் பூர்வ நிலையையும் ஒருவாறு காட்டக்கூடிய சாக்ஷிப்பத்திர
மாகவும் இருக்கிறது. அதனால் நாமறிந்துகொள்ளக்கூடிய முக்கிய
விஷயங்களிரண்டாம். (1) பூர்வத்தில் நம்மவர் மிக்க ஒற்றுமை
யோடு கல்யாண காலங்களிற் சீர் வரிசைகள் கொடுப்பதை ஒரு
அளவு கட்டி அதை மீறாமல் நடந்து வந்தார்களென்பதற்கு அவ்வி
சை குடிமானத்தின் சரத்துக்கள் ஒரே விதமாக இருப்பதும் ஒவ்

வொன்றையும் அளவுகட்டி எழுதியிருப்பதுமே சாக்ஷியாகின்றன. இக்காலத்தைப்போல் மனம் போனவாறு நடந்திருந்தால் அப்பத்திரத்தின்சரத்துவெவ்வேறுமாதிரியாக அமைந்திருக்கும்.(2)பூர்வகால முதலாகவே நம்மவர் கல்வியைப்பற்றிக்கவனிக்கவில்லை என்பதையும் அப்பத்திரம் ஒருவாறு வெளிப்படுத்துகிறது. அதின் நடையும் சொற்றொடர்களும் எழுவாய் பயனிலை முதலியனவின்றி இலக்கணத்துக்கு மாறாகவும் கிராமியச் சொற்களாலு மமைந்திருக்கின்றன. (இக்காலத்தில் இசை குடிமானமெழுதுகிற சாஸ்திரிகள் உள்ளதையும் கெடுத்து என்னென்னவோ வாய்க்கு நுழையாதபடி எழுதுகிறார்கள்.) இவ்விரண்டு குறிப்புகளையும் அப்பத்திரத்தால் நாம் நன்கறிகிறோம். இவ்விரண்டுள் முன்னதே நமக்கு நல்ல படிப்பினையாகும். பின்னதை எப்படி வேண்டுமானாலும் திருத்திவிடலாம். இக்காலத்துச் சீர் வரிசைகள் முன்னுள்ளதைப் பார்க்கிலும், எத்தனையோ மடங்கு அதிகமாக இருக்கின்றன. அப்படியிருக்க உள்ளதை உள்ளபடி எழுதாமல் பழைய ஏட்டைப்பார்த்து நகலெழுதுவது சரியாகுமா? இப்போதுள்ளபடி வெள்ளிப்பாத்திரம் ரூபா ஆயிரம், வெண்கலப் பாத்திரம் ரூபா இரண்டாயிரம், அம்மி அறுபத்தொன்று, அரிவாள்மனை நூற்றொன்று, திரிகை இருபத்தொன்று, தேங்காய்திருவி எழுபத்தொன்று, இவ்வகைப்படி செய்வோம். ஜாடி நூற்றொன்று மரவை எழுபத்தொன்று, மெத்தை ஐம்பத்தொன்று, தலையணை நூற்றொன்று இவ்வகைப்படி செய்வோம். மஞ்சள்,இஞ்சி,ஏலம், சுக்கு,உப்பு,மிளகாய், மல்லி, புளி, வெங்காயம், வெள்ளைப்பூடு, கடுகு, சீரகம், தினை, பயறு, உழுந்து முதலியன வகைக்கு வங்காளம் மூடையிரண்டு. இவ்வகைப்படி செய்வோம். இடியப்பமாக் கடகம் அஞ்சு, எலிபிடிக்கி ஆறு, எண்ணெய் டின் பத்தென்று உண்மையையன்றோ எழுதவேண்டும்? அப்பொழுதல்லவோ இது நீண்டு நடைபெறாத காரியம் ஆனதால் இதையொரு அளவு கட்ட வேண்டுமென்பது புலப்படும்? எழுதிப்பாராத கணக்கு வரவு செலவு தெரியுமா? நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே போனால் இதற்கு முடிவு தான் என்ன? நண்பர்களே! இந்த விஷயத்தில் நீங்கள் அதிகமாகக் கவலை யெடுத்துக்கொள்ளவேண்டும். இது குறைந்தாலன்றி நம்மவர்க்கு ஒரு

:

விசேஷ காலங்களும், வீண்செலவும். கடுக போதும் சுகமில்லை. நம்மவர் நிரும் சிறப்புமடைய வேண்டுமென்ற நல்லெண்ணமுடையவர்கட்கு இதிற் கவலை யேற்படாதிராது. சிலர் இதை எழுதுவதாலும் பேசுவதாலும் என்ன நடக்கப்போகி றதென்று நினைக்கிறார்கள். அப்படி நினைப்பது தப்பிதம். அத் தகையோர் இவைகளைத் திருத்துவதற்கு ஒரு உபாயம் சொன்னா லும் நல்லதாகும். அதுவு மில்லை. உபாயமென்ன, எல்லோரும் வாயை மூடிக்கொண்டிருப்பது தானா உபாயம்? இந்த ஆலோச னையை நீக்கினே போதித்துப்பாருங்கள். விதை போட்டன்றோ முளையுண்டாக வேண்டும்? முளை கன்றாகி, மரமாகி, பூத்து, பிஞ்சாகி, காயாகி, பழமாகவேண்டும். அப்போதன்றோ விதையிட்ட பயன் இன்னதென்று தெரியும்? விதை போட்டவுடன் பழம் தின் னப்பார்ப்பது சிறுபிள்ளைத்தனமன்றோ? நாட்செல்லுமே யென்று விதை போடாதிருக்கலாமா? அது போல திருத்தவேண்டிய முறை களைப்பற்றி முதலிற் பேசி வெளியிட்டு அது கொஞ்சங் கொஞ்ச மாகப் பரவி ஒவ்வொருவர் மனதிலும் பட்டுக்கவலையையுண்டாக்கிச் சிறிதுசிறிதாகமுயன்று பலர் ஒருமனப்பட்டு விஷயங்களை யாராய் ந்து அநுட்டானத்துக்குக் கொண்டுவரவேண்டும். அப்போதன்றோ இதன் பயன் தெரியும்? இது ஆழ்ந்த புத்திமான்களறிந்த விஷயமே யாம். மற்றவர்களும் இனியறிந்து கொள்வாராக. நிற்க.

நம்முள் கிழவர் தாலி கட்டுகிற வழக்கமும் சாஸ்திரத்துக்கும் யுக்திக்கும் பொருந்தியதன்று. மேலும் அரசாங்கத்தாரின் சட்டப் படி லாக்கோர்ட்டு விவகாரத்துக்கும் அதிலிடமில்லாமலில்லை. சட்டப்படி கல்யாண விஷயத்தில் பூரண சுதந்திரமும் சதிபதிகளுக் குண்டன்றோ? அப்படியிருக்க மாப்பிள்ளை, பெண்களறியாமல் விவாக த்தை மூன்றாவது மனிதரைக்கொண்டு முடிப்பது, விபரீதமான இக் காலத்தில் விவகாரத்துக்கிடமில்லை யென்று எப்படி நினைக்கலாம்? இத்தகைய ஜாதிமுறைப்படி செய்துவந்த காரியங்களெல்லாம் அநேகமாக லாக்கோர்ட்டுகட்குப் போய்விட்டன. சம்பளச்சீட்டு விஷயம், சவிகார விஷயம் முதலியன எத்தனையோ போய்விட் டன. வழக்கப்படி ஷயம் சகம் என்று எழுதப்பட்ட தஸ்தவேஜு களெல்லாம் நஷ்டத்துக்குப் பாத்தியப்படாமல் தள்ளப்பட்டன. கிழவர்தாலிகட்டியபோதும் இதைகுடியானத்திற் கண்டபடி சர்வரீதை

களும், தான் பெறவில்லையென்று ஒரு மாப்பிள்ளை ருசுப்படுத்தினுல் அவ்விவகாரம் எவ்வளவு தூரம் விரியுமென்பதைச் சட்ட ஞானமுள்ளவர்களேயறிவார்கள். ஆகவே நாம் செய்ய வேண்டியதென்ன? சீர் வரிசைகளை ஒரு அளவு செய்து அதன்படி செல்வர் சாமானியர் யாவரும் கொடுப்பதென்று கண்டிப்பான ஏற்பாடு செய்து அதன்படியே இசை குடிமானமும் எழுதி மாப்பிள்ளை பெண்களின் நோக்கமறிந்து நேரில் தாலி கட்டுகிற வழக்கத்தையும் கையாண்டு வரவேண்டுமென்பதேயாம்.

## பொதுச்சங்கம்.

என்னறிவுக்கெட்டிய விஷயங்களை இதுகாறும் கூறிவந்தேன். இனி இவைகளை நம்மவர் அனுட்டிப்பதற்கேதுவான எனது ஆலோசனையையும் சிறிது சொல்லுகிறேன். சிறிய சிறிய காரியங்கட்கும் நமது ஜாதியார் எல்லாம் ஒன்றுகூடி ஒரு முடிவுக்கு வருவதென்றுல் அது ஒரு அசாத்தியமான விஷயமாகும். ஆனுல் பெரிய விஷயங்களான சிலவற்றை மட்டும் அப்படி வைத்துக் கொள்ளலாம். சிறியவும் நூதனமுமான விஷயங்களைத் தனித் தனி ஒவ்வொரு ஊராரும் கூடித் தங்களூரில் இன்னின்ன விசேஷங்கட்கு இன்னபடி செய்கிறது, இன்ன அளவுக்கு மேற்படச் செய்வதில்லையென்று கட்டுப்பாடு செய்துகொண்டு நடந்தால் அது பலமான அஸ்திவாரமாகும். அதில் நின்று பெரிய விஷயங்களைக் காலத்துக்கேற்றபடி திருத்தப்பாடு செய்வதற்கு நம்மவருள் ஒரு தனிமையான பொதுச்சங்கமேற்படவேண்டும். அதை எங்கே ஏற்படுத்தலாம், எப்படி நடத்துவது என்பது முதலில் ஆலோசிக்கத்தக்கது.

தற்காலம் நம்மவரின் குடும்பங்கள் சற்றேறக்குறைய 15000 இருக்கும். இவற்றுட் பெரும்பாலும் இராமநாதபுரம் ஜில்லாவிலும், சிறுபாகம் புதுக்கோட்டை ஸ்டேட்டிலுமிருக்கின்றன. நம்மவர் வசிக்கிற எல்லா ஊர்கட்கும் பொதுவாகவும், சமீபமாகவும், மையமாகவும் குன்றக்குடி என்னும் சுப்பிரமணியர் ஸ்தலமிருக்கிறது. இக்குன்றக்குடியில் நமது ஜாதியாரெல்லோருக்கும் பொதுவாக ஒரு சங்கமும் ஒரு காலேஜும் ஏற்படவேண்டும்.

அச்சங்கத்துக்கு நூறு குடும்பங்கட்கு இரண்டு மெம்பர்களாகச் சற்றேறக்குறைய 300 மெம்பர்களேற்படவேண்டும். இந்த மெம்பர்களை ஒவ்வோரூரிலும் அந்தந்த ஊர் நகரத்தார்கள் கூடித் தெரிந்தெடுக்கவேண்டும். அந்த மெம்பர்கள் ஒவ்வொரு முறையும் கூட்டத்துக்கு வந்து அங்கு வந்திருப்பவர்களிலொருவரை அவ்வப்போது தலைவராக நியமித்துக்கொண்டு அவர் தலைமையின் கீழ் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைப் பகிரங்கமாகத் தெரிவிக்க வேண்டும். அதை எல்லா மெம்பர்களின் ஆலோசனைக்கும் விட்டு மெஜாரிட்டியாக ஏற்படுகிற அபிப்பிராயத்தைத் தீர்மானிக்க வேண்டும். தீர்மானங்களை உடனே அச்சிட்டு எல்லோரு மறியும்படிக்கும் அறுட்டிக்கும்படிக்கும் செய்ய வேண்டும். ஒரு வருஷத்தில் இரண்டு முறை இச்சங்கம் கூடவேண்டும். மெம்பர்கள் தெரிந்தெடுக்கும் விஷயத்திலாவது பிரசிடெண்ட் ஏற்படுத்தும் விஷயத்திலாவது தங்கள் அபிப்பிராயம் நிறைவேறவில்லை யென்றாவது மற்றெந்த விஷயங்களை முன்னிட்டாவது பொறாமை கொண்டு வீண் வம்புவாதஞ் செய்கிற வழக்கத்தைப் பொது நன்மையின் பொருட்டு அடியோடு விட்டுவிடவேண்டும். இனி நமது பிள்ளைகள் உயர்தரக் கல்வி பெறுதற் பொருட்டு, நம்மவர்க்குப் பொதுவில் ஒரு (College) கலாசாலையும், (Boarding House) மாணவர் விடுதிவீடும் ஏற்படவேண்டும். அதனால் பிள்ளைகள் தங்கள் சொந்தச்செலவிற் போதுமான காலத்துக்கிருந்து படித்து மேன்மையடைய ஏதுவாகும். இப்படி ஆரம்பித்து நடத்துவதற்குக் குன்றக்குடியில் ஒரு தனிமையான கட்டிடமும் ஒரு அச்சியந்திரசாலையும் பட்டம் பெற்ற மானேஜரும், உபாத்தியாயர்களும், சிற்பந்திகளும் வேண்டும். மீட்டிங்குக்கு வருகிற மெம்பர்கட்குச் சங்கச் செலவிலிருந்தே உணவு முதலியன சப்ளை செய்யவேண்டும். இவற்றின் செலவுகட்கு குடும்பம் ஒன்றுக்கு ரூபா 10. வரி வைத்து வாங்கவேண்டும். அப்படி வாங்கினுற் சற்றேறக்குறைய 150000 ரூபாதாகும். அதைத் தவிர மெம்பர்கள் வருஷமொன்றுக்கு ரூபா 10. அல்லது 5. செலுத்தி வரவேண்டும். புதிதாக விவாகமானல் ஒவ்வொரு விவாகத்திலும் ரூபா 10. வசூலித்துவரவேண்டும். இச்சங்க வாயிலாக ஒரு பத்திரிகை நடத்தி அதிற் சங்கத்தாரின் தீர்மானங்க

ளையும், ஆசாரம், ஒழுக்கம், தொழில், வியாபாரம், கல்வி முதலிய விஷயங்களையும் மாதந்தோறும் வெளிவரச்செய்து அப்பத்திரிகையைக் குறைந்த சந்தாவுக்கு நம்மவருள் ஒவ்வொரு குடும்பத்தாரும் வாங்கும்படி செய்யவேண்டும். இப்படிச் செய்தால் யாதொரு குறையும் முட்டுமின்றி நமது சங்கமும் பிறவும் நீண்ட ஆயுளோடு வாழ்ந்துவரும்.

* இனி அப்பெரிய சங்கத்திற் கவனிக்கப்பட வேண்டிய விஷயங்களாவன:—உயர்தரக் கல்வி, பெண்கல்வி, ஆசாரசீர்திருத்தம், கைத்தொழில், வியாபாரம் முதலிய பெரிய விஷயங்களேயாம்.

மற்ற சாதாரண விஷயங்களைப் பற்றி அந்தந்த ஊரிலும் நகரத்தார்கள் கூடிக் கல்யாணச் சீர்முறை, புதுமை முதலிய மற்ற விசேஷ காலச்செலவு, துக்க வீட்டிற் செய்யவேண்டிய செலவு, பொருள் சம்பந்தமில்லாத கஷ்டமான பழக்க வழக்கங்கள் இன்னும் மற்ற விஷயங்களையும் சீர்திருத்தி அட்டவணையெழுதிக் கட்டிக்கொண்டு செட்டாகவும் சிறப்பாகவும் வாழவேண்டும். இதை முன்னரே விரிவாகக் கூறிவிட்டமையால் மற்றொரு முறை கூறுவது மிகை யென்று விடுகிறேன். நிற்க.

## ஆலோசனையும், முடிவுரையும்.

இந்தத் தீர்மானங்கட்குள் அகப்படாததும் எல்லாவற்றுள்ளும் பெரியதுமான ஒரு விஷயம் மட்டும் தனித்து நிற்கின்றது. அது நீங்காதவரையில் நம்மவருட் சாமானிய ஜனங்கள் கஷ்டத்தினின்று மீளப்போவதில்லை. அதாவது பெண்கட்குப் பெருந்தொகை வாங்குகிற விஷயமேயாம். வாங்குகிறவர்களை வேண்டாமென்றால், அவர்கள் தங்கட்குத் தேவையிருக்கிறதே அதற்கென் செய்வதென்பார்கள். கொடுக்கிறவர்களை வேண்டாமென்றால் கல்யாணம் முடியவேண்டுமே அதற்கென் செய்வதென்பார்கள். ஆதலின் இரண்டு பேருக்கும் முட்டுப்பாடில்லாமலும், விஷயம் முடிவு பெறக் கூடியதாகவும் ஆலோசனை சொல்வதே

* இதை விளக்கமாக நாட்டுக்கோட்டையாரும், பொதுச்சங்கமும் என்ற வியாசத்திற் காணலாம்.

பொருத்த மாகுமன்றி வாயில் வந்ததைச் சொல்வது சரியாகாது. அப்படிப்பட்ட ஆலோசனை யொன்றை இப்போது திட்டமாகவும் திடமாகவும் சொல்வதற்கு நான் அசக்தனாக இருக்கிறேன். ஆதலால் அறிஞர்களாகிய நீங்களே சொல்லக் கூடுமானால் பேருபகாரமாக இருக்கும். ஆனால் அந்த யோசனை மேற் சொன்னபடி தற்காலத்துக் கேற்ற நாகரீகமாகவும் எல்லோருக்கும் சந்தோஷத்தைத் தரத்தக்கதாகவும் சாமானியமான குடும்பங்கட்கும் பரிதாபமான முகங்கட்கும் இரக்கங் காட்டியதாகவும், பாரபக்ஷமற்றதாகவும், முக்கியமாகப் பொருட்செலவை மட்டுப்படுத்தக்கூடியதாகவும் இருக்கவேண்டும். ஆழ்ந்து சிந்தித்தால் அப்படி யொரு உபாயம் அகப்படாமற்போகா தென்பது மட்டும் நிச்சயமான நம்பிக்கை.

கனவான்களே! திருவருளைச் சிந்தித்து இம்மட்டோடு என் பேச்சை நிறுத்துகிறேன்.

---

## நாட்டுக் கோட்டையாருட் கைதியானவர்கள்.

---

நம்முள்ளிருக்கிற புராதன வழக்கங்களுள், கைதியானவர்களை அதாவது விலங்கிடப்பட்டவர்களை ஜாதிப்பிரஷ்டம் செய்கிற தென்ற வழக்கமும் அநுட்டானத்திலிருக்கிறது. இந்த ஏற்பாடு சற்றேறக் குறைய கி. பி. ஐந்தாவது நூற்றாண்டில் பாண்டிய ராசர்களின் அரசாக்ஷிகாலத்தி லேற்பட்ட தென்று தோற்றுகிறது. அக்காலத்து அரசாக்ஷி இக்காலத்தைப்போல் நாகரீகமும், பேதமற்ற சட்டதிட்டங்களு முடையனவன்று. எல்லாவகையிலும் ஜாதிபேதம், மதபேதங்களைப் பாராட்டி. நீதிசெலுத்தப்பட்டது. நம்மவருள் ஒருவன் குற்றஞ் செய்துவிட்டால் அவனுக்குத் தண்டனை விதிக்கும்படி, அரசன் நமது சமுகத்தாருக்கு, அதிகாரம் தருவாராம். சமுகத்தார் பொதுக்கூட்டங் கூடி விசாரித்து அவனை ஜாதிப்பிரஷ்டம் செய்துவிடுவார்களாம். ஜாதிப்பிரஷ்டத்தைப்பார்க்கிலும் பெரிய தண்டனை வேறொன்றுமில்லை. அதைத் தவிர அரசதண்டனை வேறு அக்குற்றத்துக்கில்லை. தற்காலத்

தில், அரசாங்கத்தாரின் சட்டதிட்டங்கள் அப்படியிடந் தரத்தக்கதன்று. எந்தக்குற்றத்தையும் அவர்களே நேரில் விசாரித்து நீதி செலுத்துகிறார்கள். ஆகவே, ஜாதிப்பிரஷ்டஞ் செய்கிறவழக்கம் தற்காலத்துக்கு அவசியமானதாக வில்லை. மேலும், தண்டனை யென்றால், அது குற்றத்துக்குத் தக்கபடி யிருக்கவேண்டும் கோழிபிடித்தவனுக்கும் ஒருமாதிரி, கொலை செய்தவனுக்கும் ஒரு மாதிரியான தண்டனை அநீதியானதன்றோ? ஒரு நாட் கைதியானவனுக்கும் ஜாதிப்பிரஷ்டம், இருபது வருஷம் கைதியானவனுக்கும் ஜாதிப்பிரஷ்டமென்றால் அது ஞாயமான ஏற்பாடாகுமா? ஜாதிப்பிரஷ்டமென்று லென்ன லேசானகாரியமா? மனிதனை உயிரோடு வதைசெய்வதை யொக்குமன்றோ? மக்களைவிட்டு, மனைவியை விட்டு, மண்ணைவிட்டு, மனையைவிட்டு, தாகத்துக்குத் தண்ணீரருந்தவும் யோககியமற்று, கொள்ளிவைக்கவும் பிள்ளை உதவாமல்? உயிரிருக்கும்வரை உபயோகமற்றவனாகச் செய்கிற பெரியஆக்கினை யன்றோ? இந்த ஆக்கினையைப் பேதமில்லாமல் சிறு குற்றங்கட்கும் செய்தால் அது எவ்வகையிலும் பொருத்தமுள்ளதாமா? சிலநேரம் அறியாமற் செய்கிற சிறு குற்றங்கட்கும் அரசதண்டனை நேரக்கூடும். அப்போது அவைகளை நிதானித்துச் செய்வதற்கு இந்த வழக்கம் இடங்கொடுக்காது. பெருங்குற்றஞ் செய்தவர்கட்கும் குற்றத்துக்குத்தக்கபடி ராஜாங்கத்தார் தண்டித்துப் புத்திசொல்லிவிடுகிறார்கள். பிறகு ஜாதிப்பிரஷ்ட மெதற்கு? ஒரு குற்றத்துக்கு இரண்டு தண்டனையிடுவது ஞாயமா? அப்படியாவது குற்றத்துக்குத்தக்கபடி இன்ன குற்றத்துக்கு இவ்வளவு வருஷம் ஜாதிப்பிரஷ்டமென்று ஒரு அளவு ஏற்பட்டிருக்கிறதா? அப்படியுமில்லையே! இராஜ தண்டனைக்கு அளவிருக்கிறதே! இத்தகைய கொடியவழக்கத்தைச் சுலபமாக அநுட்டிப்பது எந்த ஜாதியிலாவதுண்டா? நம்மினும் உயர்குலத்தாரான பிராமணர்களில் இதற்குப்பிராயச்சித்த மேற்பட்டிருக்கிறதே. நமக்குள் ஏனிருக்கக் கூடாது? நமது காருண்ணியமுள்ள பிரிட்டிஷ் இராசாங்கத்தில் நம்மவர் விஷயத்தில் ஒரு இரக்கங் காட்டப்படுகிறது. அதில்லாதிருந்தால் நம்மவர் அநேகர் ஜாதிப்பிரஷ்டமாகியிருப்பார்களென்

பதிலேயமில்லே. அதாவது ஒரு குற்றம் சாட்டிப் பிடித்தவுடன் விலங்கிடாமல், நீதிபதிகளிடங் கொண்டுபோய் குற்றத்தை உறுதிப்படுத்திய பிறகு விலங்கிடுவதென்று வழக்கத்திலிருப்பதேயாம். இது நம்மவருடைய அதிர்ஷ்டமேயாகும். ஆனால் நமது பிரிட்டிஷ் ஆளுகைக்குட்பட்ட தேசங்களைத்தவிர (French) பிரன்சு (Dutch) டச்சு முதலிய ஆளுகைக்குட்பட்ட தேசங்களிலும் சென்று நம்மவர் வியாபாரம் செய்கிறார்கள். அத்தேசங்களில் சாதாரண விஷயங்கட்கெல்லாம் பிடித்தவுடன் கையில் விலங்கிட்டுத்தான் ஸ்டேஷனுக்குக் கொண்டுபோவார்கள். உதாரணமாக ஒருவனறியாமல் வீதிப் போக்கில் மலஜலங்களிததாலும் விலங்கிடப்படுவான். இரண்டொரு ரூபா, அபராதம் விதிக்கக்கூடிய கேசுகளிலும் இரண்டொருநாள் கடினகாவல் சொல்லிவிடுவார்கள். இந்த உண்மையை, செய்கோன், சுமத்திரா, முதலிய தேசங்கட்குப் போய்வந்தவர்களைக் கேட்டால் தெரியும். இப்படி அன்னிய ராஜாங்கத்தாரால் விலங்கிடப்பட்டாலும் ஜாதிப்பிரஷ்டம் செய்யவேண்டியது ஒருமாதிரிதான். இந்தவழக்கம் நம்முள்ளிருப்பதால், நம்மவருக்குண்டாகிற அனுவசியமான கஷ்ட நஷ்டங்கட் களவில்லே. நம்மைக் கண்டவுடன் அநேகருக்கு உற்சாகமும் அதிகாரமும் தானே வந்துவிடுகின்றன. காட்டுகிற பூச்சிகட்கெல்லாம் நாம் அஞ்சவேண்டியதாகிறது. நாம் ஞாயமாக நடந்து கொண்டாலும் நமக்குப் பயித்தியகாரப்பட்டம் வருகிறது. சிறுமையை யுண்டுபண்ணுவதற்கும் இதுவேகாரணம். இப்படிப் பலவழியிலும், நமது சமூகத்துக்கு இடையூறு செய்துகொண்டிருக்கிற இந்தவழக்கத்தை மாற்றவேண்டியது எவ்வளவு அவசியமாகும் என்பதை நீங்களே ஆலோசித்துப்பாருங்கள். எந்தக் குற்றத்துக்கும் மன்னிப்புவேண்டும். நமது திருவிளையாடற் புராணத்தில், தாயைப்புணர்ந்து தந்தையைக் கொன்ற மாபாதகனுக்கும மன்னிப்புக் கிடைத்திருக்கிறதே! அதைப்பார்க்கிலும் எவ்வளவோ சிறியகுற்றங்கட்கு, இராஜதண்டனேயே போதுமென்று நாம் மன்னித்தாலென்ன? இல்லேயென்றால் ஏதாவது பரிகாரமேற்படுத்திப் பிராயச்சித்தம் செய்தாவது சேர்த்துக் கொள்ளலாமே? ஒருபரிகாரமுமின்றி இந்தவழக்க மனுட்டிக்கப்

படுவது எப்படியும் ஞாயமாகாது. இந்தவழக்கத்தை மாற்றுவதால் ஜாதிக்கட்டுக்கெடுமென்று நம்முட் சிலர் சொல்லுகிறார்கள். அதுசரியில்லை. நம்மைத்தவிர எந்தஜாதியிலும் இந்தவழக்கமில்லையென்பது யாவருமறிந்தவிஷயம். அதனால் மற்றஜாதிக் கட்டுகளெல்லாம் கெட்டுப்போயிருக்கிறதா? அல்லது மற்றவர்கள் யோக்கியர்களாக இருக்கவில்லையா? இதனால் ஒருகுறையுமேற்படாது. நன்மையேயுண்டாகும். ஆதலின் நம்மவர் இவ்வழக்கத்தை மாற்ற முயலவேண்டும். எப்படிமாற்றுவதென்றால், சுலபமாக ஒருவழி சொல்லுகிறோம். அதைமட்டும் கையாடினாற்போதும். அதாவது ஜயிலிலிருந்து திரும்புகிறவர்களை வைத்துப் பந்திபோஜனம் செய்வதிலும் அவர்கள் வீட்டுவிசேஷங்கள் நடப்பதில் அவர் சம்பந்தப் படுவதைத்தடுக்காமலும் அந்தந்த வூரிலும் நகரத்தார் முயன்றால் போதும். இதை வேற்றுமையின்றி யாவரும் கவனிக்கவேண்டும். நமது குலம் க்ஷேமமடையவேண்டும்.

---

## நாட்டுக் கோட்டையாரும், மூன்றுவருஷக்கணக்கும்.

---

நமது நாட்டுக்கோட்டையாருள் வியாபாரத்தின்பொருட்டு தூரதேசஞ் செல்லுகிறவர்கள் மூன்று வருஷ மிருந்து வரவேண்டுமென்ற வழக்கம் இப்பொழுது அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இப்படி மூன்று வருஷம் அங்கேயே இருந்து வரவு செலவு செய்து முடிக்கப்படுகிற வியாபாரம் "ஒருகணக்கு" என்று வழங்கப்படும். இவ்வழக்கம் நம்மவர் பொருளீட்ட அன்னியநாடு செல்ல ஆரம்பித்த காலத்திலேற்பட்டது. அக்காலம் பாய்க்கப்பலேறி மாதக்கணக்காக யாத்திரைசெய்து தன்னை வெறுத்து நிச்சயமில்லாமற் பொருளீட்டச்சென்ற காலம். அத்தகைய யாத்திரை அடிக்கடிசெய்தல் சாத்தியமன்றாதலின், ஒரேபிடியாக மூன்று வருஷமிருந்து பொருளீட்டும் வழக்கம் ஏற்பட்டிருக்கலாம். இப்போது அத்தகைய கஷ்டங்கள் ஒன்றுமின்றிக் குறித்த காலத்திற் போய்வரக் கூடியதாக நீராவிக்கப்பல்கள் ஏற்பட்டுவிட்டன. அப்படியிருக்கும்போது அந்த வழக்கத்தை மாற்றி மனைவி மக்களை அடிக்கடி பார்த்துச் சந்தோ

ஸிக்கத்தக்க வசதிகளைச் செய்துகொள்ளாமல் பழைய வழக்கத்தையே அனுஷ்டிப்பதால் எத்தனைக் கேடுகள் உண்டாகின்றன வென்பதைச் சற்று ஆராய்வோம்:

முற்காலத்தில் அன்னியநாட்டிற்குப் பொருளீட்டச் சென்றவர்கள் தம்மை வெறுத்துச் செல்லவேண்டியிருந்ததால் வயதில் முதிர்ந்தவர்களாகவே பெரும்பாலும் சென்றனர். இப்போது பர்மா, மலையா நாடுகளிற் பார்த்தால் நூற்றுக்கு ஒருவர்கூடப் பெரிய வயதுடையவரின்றி எங்கு பார்த்தாலும் இளம் பருவமுடைய காளையர்களின் கூட்டமாகவே யிருக்கின்றது. இவ்விளைஞர்கள் மனைவிமாருடனிருக்கும்போதே எட்டினவரை விலைமாதர்களையும் விரும்புவதானால் தனித்து எப்படி நல்லொழுக்கத்தோடிருப்பார்கள்? நமது ஜாதியாசாரப்படி பெண்கள் கப்பலேறக்கூடாது. ஆதலின் தனித்துச்செல்கிற இச்சிறுவர்கள் எவ்வளவு யோக்கியர்களானாலும் மூன்றுவருஷமும் தன்னொழுக்கத்தை ஒழுங்காகக் காப்பாற்றித் திரும்புவதுபெரும்பாலும்வட்டுக்சுரைக்காயாகவே முடிகிறது. இவ் விஷயத்தில் ஒரு சிறு குறைகண்டாலும் அதை மலைபோலாக்கித் தூற்றுகிற சுவாபம் நம்மவரிடத்தில் நிரம்பவுண்டு. அதனால் யோக்கியர்களாய்ச் சற்று காட்டி மறைத்ததுபோல் நடந்து கொள்கிற சிலரும் மனந்துணிந்து அதிகமாகக் கேடடைகிறார்கள். நோய், ஆபத்து, பொருட்செலவு, வீண்வம்பு, அவமானம் முதலிய பல துன்பங்களுண்டா கிறதற்குக் காரணமிதுவேயன்றி வேறல்ல.

"ஒத்தேறும் உருவமிலாப் பிரமமொன்று மேயொழிய உருவ முள்ளார்
எத்தேவ ராயினுமோர் பூங்கணையாற் றம்போத மெல்லா நீங்கி
மத்தேறி யுடைதயிர்போல் மனஞ்சுழன்று தடுமாறி மடவா ராசைப்
பித்தேறி யிதமுரைத்தப் பேதையர்க்குப் பேதையராய்ப் பின்செல் வாரால்."

(பிரபோதச் சந்ரோதயம்.)

என்றமையால் எத்துணைத் துன்பங்களுண்டானாலும் இந்த மாயவலை யிற்பட்டுழலா மாந்தர் யாவர்? அதனினும் இளம்பிராயத்தில் மனைவியரைப் பிரிந்திருக்கும் குமாரர்களைப் பற்றிப் பேசவேண்டுமா? உலகவின்பத்தைத் துறந்துநிற்கும் மனவலியுடைய ஞானிகளா

வியாபாரஞ்செய்யப் போகிறார்கள்? மனைவி மக்களின்பொருட்டுத் தானே போகிறார்கள்? அப்போது அவர்கள் நிராசையுடையோரா யிருத்தல் சாத்தியமில்லையே? பின்னால் தனக்குண்டாகிற நன்மை கருதி ஒருவாறு நல்லொழுக்கத்தோடிருப்பினும் எவ்வளவு நாளைக் குத்தான் மனமடங்கும்?. இந்தவிஷயத்தில் மூன்றுவருஷம் தன் னைக் காத்துக்கொள்வது உலகப்பற்றுள்ள ஒருவனுக்கு அசாத்தி யமான காரியமென்றே விவேகிகள் ஒப்புக் கொள்வார்கள். தற்காலத் தில் அன்னிய நாடுசென்றுவருகிற இளைஞர்கள் பெரும்பாலும் நோயுற்றவர்களாகவே திரும்பிவருவது இதற்குச் சாக்ஷியாகும். இத னால் சந்தான விருத்தி குறைவதோடு நோயுற்று அற்ப ஆயுளாகப் போகிற குழந்தைகள் உண்டாகவும் ஏதுவாகிறது. இது முக்கிய மாகக் கவனிக்கவேண்டிய விஷயம்.

இது இப்படியாக இவர்களைப் பிரிந்திருக்கும் மனைவிமார்களைப் பற்றி நினைக்கும்போது மிகப்பரிதாபமாகஇருக்கிறது. அவர்கள் தங் கள் யௌவனகாலமெல்லாம் வீணாக சதா வாடின முகத்தோடு தூரதே சஞ்சென்ற தங்கணவர்கள் பல ஆபத்துக்களி னின்றும் மீண்டுதம்மி டம் எப்போது வருவார்களோ! என்ற ஏக்கத்தோடு வழிபார்த்து நிற் கிறார்கள். ஏதாவது ஒரு தந்தி வந்துவிட்டால் என்ன ஆபத்தோ என்னஅபாயமோ வென்று வயிற்றைப் பிசைந்துகொண்டு படிப்போ ரின் வாய்பார்த்து நிற்கிறார்கள். (இது தொத்துநோய்களாலுண்டான பயம்.) இவர்கள தங்கள் வயதுக்கேற்ப உண்டுடுத்து விழாக்கொண் டாடி மக்களைப்பெற்று தங்கணவர்களோடு சந்தோஷமாய் பொழுது போக்கி வாணாளை அறவழியிற் செலுத்தாது கண்ணிருந்தும் கபோ திகள் போலாவது யாருக்குத் தான் வருத்தமுண்டாக்காது? இன்னு மிவர்கள் படியாத பெண்களாதலின் இம்மட்டோடு சகித்துக்காலந் தள்ளுகிறார்கள். படித்திருப்பாராயின் கைநிறைந்த பொன்னைப் பார்க்கிலும் கண்ணிறைந்த கணவர்களைப் பெரிதாக மதித்திருப்பார் கள்.

விரித்துப் பேசுவதில் என்ன பயன்? சுருங்கக் கூறுமிடத்து இவ்வழக்கம் பல சங்கடங்களைத் தந்து கொண்டிருக்கின்றது. இளை ஞர்களான ஸ்திரீகள் புருஷர்கட்குக் கஷ்டத்தையும் துன்பத்தையும்

தந்துகொண்டிருக்கிறது. ஆதலின் இதை நிவர்த்திக்கவேண்டியது அவசியமாகிறது. ஆனால் முழுதும் மாற்ற முடியாதாகலின் சிறிது சிறிது குறைத்துக்கொள்ள முயலவேண்டும். அதற்கு "மூன்றுவருஷம்" ஒரு கணக்கு என்றிருப்பதை ஒன்றரைவருஷம் அல்லது இரண்டுவருஷம் ஒரு கணக்கு என்று மாற்றிக் கொள்வது தக்க உபாயமாகும். இதனால் முதலாளிகளுக்காவது ஏஜெண்டு (காரியஸ்தர்) களுக்காவது நஷ்டமில்லை. ஏஜெண்டுகள் தான் தங்கள் நன்மையைக் கருதி முதலில் முயலவேண்டும். முதலாளிகள் பரோபகாரமாக இதை ஒப்புக்கொள்ளவேண்டும். அப்போது இக் கஷ்டங்கள் நீங்கிவிடுமென்பதில் ஐயமில்லை. நாம் சும்மாவிருந்தால் நமது வழக்கமும் சும்மாதானிருக்கும்.

---

## வட்டித் தொழில்.

---

தற்காலத்தில் நமது நாட்டுக்கோட்டையார் பிரதானமாகச் செய்துவருகிற வட்டித் தொழிலைப்பற்றி மற்றஜாதியார்கள் பலமாகக் குறை கூறுகிறார்கள். வட்டித்தொழில் பாவமான தொழில் என்றும், அது தேச நன்மைக் குற்றதல்லவென்றும், அநியாய வட்டி வாங்கப்படுகிறதென்றும், இதைப்பார்க்கிலும் கைத்தொழில் அல்லது வியாபாரம்செய்வது நன்மை யென்றும் சொல்லிக்கொள்ளப்படுகிறது. கைத்தொழில் வியாபாரம் செய்வது நன்மைதானென்பதை நாம் மறுக்கவில்லை யென்றாலும், நாட்டுக்கோட்டையார் வட்டித்தொழில் செய்வதைப்பற்றிக் குறை கூறுவதை நாம் பலமாக ஆக்ஷேபிக்கிறோம். ஒரு ஜாதியார் தங்கள் குலதொழிலாகச் செய்து பழகிப் பலனடைந்த ஒரு வழியை விட்டு மாறி வேறு வழியைக் கைப்பற்றுவது சுலபமான காரியமன்று. தனக்குப் பழக்கமில்லாத ஒரு தொழிலை ஒருவன் திடீரென்று ஆரம்பித்தால் அவன் முதலில் நஷ்டமடையக்கூடும். பிறகு அத்தொழிலை விடாமற் செய்து அனுபவம்பெற்று லாபமடையவேண்டும். தேச நன்மையைக் கருதி முதலில் நஷ்டமடைந்தாலும், அதைப் பொருட்படுத்தாமல் விடாமுயற்சியோடு செய்து ஒரு தொழிலை நிலை நிறுத்

துகிற மனிதர்கள் நம் தென்னிந்தியாவில் இன்னும் அதிகமாகப் பிறக்கவில்லை. அப்படியிருக்க நாட்டுக்கோட்டையாரை மட்டும் குறை கூறுவது ஞாயமாகுமா? எத்தனையோ வக்கீல்மார் லட்சக் கணக்கான பொருளை வட்டிக்குப் போட்டு வைத்துவிட்டுப் பின்னும் பெரும் பெரும் உத்தியோகங்களை விரும்பிக் கொண்டிருக்கிறார்களே! அவர்கள் ஏன் தேச நன்மையின் பொருட்டு அப்பொருளைக் கைத்தொழில் அல்லது வியாபாரங்களிற் போடக்கூடாது? உத்தியோகத்தைவிட்டு ஏன் அவைகளை விருத்தி செய்யக்கூடாது? அவர்களோ படிப்பாளிகள், மேனாட்டு பூத பௌதிக சாஸ்திரங்களைக் கற்றவர்கள், சட்டதிட்டங்களை யறிந்தவர்கள், புத்திமான்கள், தேச நிலைமையையும் நன்மை யின்னதென்பதையு மறிந்தவர்கள். அவர்கள் ஒன்றும் செய்யாமற் பணத்தை வட்டிக்குப் போட்டு வைத்திருப்பதைப்பற்றி ஏன் குறைகூறக் கூடாது? மற்றொரு வகுப்பாரான ஜமீன்தார்கள் ஏன் கைத்தொழிற் சாலைகளை விருத்தி செய்யக்கூடாது? அவர்கள் வீணான ஆடம்பரங்களிற் செலவு செய்வதும், கடன் வாங்குவதும், ஜமீனை யிழப்பதுமாக இருக்கிறார்களே! அவர்கள் லாபமும் நன்மையுமுண்டாகிற இந்தக் காரியத்தில் ஏன் தலையிடக்கூடாது? இதையெல்லாம் குறை கூறாமல் குலத்தொழிலை விடாமற் செய்துகொண்டிருக்கிற நாட்டுக்கோட்டையாரைப்பற்றிக் குறை கூறுவது வீண் பொறாமையும், அறியாமையுமாகுமன்றோ?

இனி வட்டித் தொழில் பாவமான தொழிலாகுமோ வெனின், அப்படியொருபோதும் சொல்லமுடியாது. அப்படிச் சொல்லுகிறவர்கள் பெரும்பாலார் மகமதியர்களேயாம். அவர்கள் தங்கள் மத நூல்களப்படிச் சொல்லுகின்றன வென்கிறார்கள். அவர்கள் மத நூல் சொல்வதைப்பற்றி நமக்கென்ன? நமது மதநூல்க ளப்படிக் கூறவில்லையே. "வட்டியின் மிதப்பக்கூறி வாங்கியும்" என்றமையால் வஞ்சித்து கணக்குக்கு அதிகமாக வாங்கக்கூடாதென் றேற்படுகிறதேயன்றித் தொழில் செய்யப்படாதென்று ஏற்படவில்லை. வஞ்சித்தல், பொய்சொல்லல், ஏமாற்றுதல் முதலியன எந்தத் தொழிலிலிருந்தாலும் அது பாவமேயாம். வட்டித் தொழிலு

க்கு மட்டுந்தான் பாவமென்பதில்லை. பாவமான தொழிலென்றால் நாகரீகமான அரசாட்சி நடக்கிற இந்தக்காலத்தில் அதற்குச் சட்டமேற்படுத்தியிருப்பார்கள். ஆகவே பாவத் தொழிலென்பது அங்கீகரிக்கத் தக்கதன்று.

இரண்டாவது: தேசநன்மைக்குற்ற தொழிலல்லவென்றால், அதுவும் அவ்வளவு சரியில்லை. நமது தேசத்துப் பொருள் ஐரோப்பா முதலிய அன்னிய நாடுகட்குப் போய்க்கொண்டிருக்கிற இக்காலத்தில் அன்னிய தேசங்களிலிருந்து பொருளை இந்தியாவுக்குக் கொண்டுவருகிறவர்கள் நாட்டுக்கோட்டையாரேயாம். தூர தேசங்களான பர்மா, மலேயா, சிலோன் முதலிய தேசங்களிற் சென்று அத்தேச பாஷைகளைக் கற்று அரும்பாடுபட்டுப் பொருளீட்டி அதை நமது தேசத்திற் செலவு செய்கிறார்கள். கோயில் கட்டியும் குளம் வெட்டியும், சத்திரங் கட்டியும், அன்னமிட்டும், திருவிழா நடத்தியும், பூரி கொடுத்தும், யாசகங் கொடுத்தும், வீடு கட்டியும், விசேஷங்களிற் பெருஞ் செலவு செய்தும் தேடிய பொருளைச் செலவிடுகிறார்கள். இதைப் பெறுகிறவர்கள் நமது தேசத்து ஏழைகளென்பதை மறுக்க முடியுமா? இப்படி எந்த ஜாதியார் தர்மச் செலவு செய்கிறார்கள்? நாட்டுக்கோட்டையாரின் ஒரு குடும்பத்தைப்பற்றி எத்தனையோ பிராமணக் குடும்பங்களும், ஏழைகளும் பிழைக்கிறார்கள். இதைப்பார்க்கிலும் தேசத்துக்குச் செய்ய வேண்டிய நன்மையென்ன? ஆனால் புதிய முறைகளைத் தழுவி இன்னும் உபயோகமான தர்மங்களாகிற கல்வி, வைத்தியம், சுகாதாரம் முதலிய வழிகளிற் செய்யலாம். அதை இப்போது கவனித்துவருகிறார்கள். ஆகவே வட்டித்தொழிலால் தேசத்திற்கு நன்மையில்லை யென்பதும் தப்பிதமேயாகும்.

மூன்றாவது: அநியாயவட்டி வாங்குகிறார்களென்கிறார்கள். சொற்பமாகத் தொழில் செய்கிறவர்கள் சிறிது கூடின வட்டிக்குக் கொடுத்து வாங்கக்கூடும். ஆனால் வட்டி கூடக்கூட இனம் இழக்கமாகத் தானிருக்கும். அப்படி நம்பித் தைரியமாகக் கொடுத்து உதவுகிறபோது சிறிது அதிகமாகப் பெறுவது நியாய விரோதமன்று. அந்தச் சாமானிய இனம் நஷ்டமடைந்தால் அது கடன் கொடுத்த

வனுக்கு நஷ்டமேயாம். அவனும் லாபம் பெற்று, கொடுத்தவனும் சிறிது அதிக லாபம் பெற்றால் அதை அந்நியாயமென்று சொல்வது தப்பிதமன்றோ? பெரிய வியாபாரிகளும், பொருளிருப்பவர்களும், அதிக வட்டிக்கு வாங்கமாட்டார்கள். சில்லறை வியாபாரஞ் செய்து அதிக லாபம் பெறுகிறவர்கள் தான் அதிக வட்டிக்கு வாங்குவார்கள். அவர்கள் தாங்கள் நஷ்டமடைய அப்படிச் செய்வதில்லை யாதலின் அதில் அந்நியாய மிருக்கவில்லை.

நாட்டுக்கோட்டையாருட் சிலர் கைத்தொழிலும் செய்கிறார்கள். வியாபாரமும் செய்கிறார்கள். ஆனால் அதிகமில்லை. அந்த வகையில் அனுபவம் பெற்று லாபம் பெறக்கூடுமென்ற வழியைக் கண்டுகொண்ட பிறகு சிறிது சிறிதாக விருத்திபண்ணுவார்களென்பதில் ஐயமில்லை. திடீரென்று தைரியமாக ஒரு தொழிலை ஆரம்பிக்கிற சக்தி படிப்பாளிகட்கும் பெரும் வருவாயுள்ளவர்கட்குமேயுள்ளது. ஆதலின் நமது தேசத்தில் கைத்தொழிலும், வியாபாரமும் விருத்தியடையவில்லையே யென்றால், அதற்குப் பொறுப்பாளிகள் வக்கீல்மாரும் ஜமீன்தாருகளுமே யன்றி நாட்டுக்கோட்டையாரன்று என்பதை குறை கூறுகிறவர்க ளறியவேண்டும். இனி நமது சகோதரர்களை நோக்கிச் சில வார்த்தைகள் சொல்லிவிட்டு இவ்வியாசத்தை முடித்து விடுவோம்.

நாம் செய்து வருகிற வட்டித் தொழில் பாவமான தொழிலுமன்று, தேசத்துக்கு நன்மையல்லாத தொழிலுமன்று, அந்நியாயமான தொழிலுமன்று. ஆனால் இதினும் அதிக லாபமும் தேசத்துக்கு நன்மையும், நம் நாட்டுக் கைத்தொழில் அல்லது வியாபாரத்திற் கிடைக்கக் கூடுமாதலால் அதில் சிறிது சிறிதாக நாம் கவனஞ் செலுத்தவேண்டியதும், அனுபவம் பெறவேண்டியதும் அவசியமேயாம். அதை நன்றாகக் கைப்பற்றும் வரையில் இயற்கையான வட்டித் தொழிலை விட்டுவிடக் கூடாது. அப்படிச் செய்வது வயிற்றுப்பிள்ளையை நம்பி மடு மேய்க்கிற பிள்ளையைக் கொன்ற கதையைப்போலாகும். நிற்க. எந்தத் தொழிலும் கிரமந் தப்பாமற் செய்யலாம். பொய், புரட்டு, மோசம் செய்யாமல் தொழிற்செய்ய முடியாதென்று சிலர் சொல்வது தப்பிதமேயாம். உண்மையும்,

நாணயமும் எப்போதும் நம்மைவிட்டு நீங்கக்கூடாது. உள்ளபடிக்கே ஏழையானவர்களிடத்து நாம் இரக்கங்காட்ட வேண்டும். அத்தகைய ஒருவனை ஹிம்சிக்கக் கூடாது. ஆனால் ஒருவன் மோசம்பண்ண வழிபார்த்தால் அவனை விடக்கூடாது. இப்படியே நம்முடைய தொழில் விஷயத்தில் நாம் ஜாக்கிரதையாக விருந்து மனச்சாக்ஷிக்கு விரோதமில்லாமல் நடந்து ஞாயமான லாபத்தைப் பெறவேண்டும். கொண்டுவிலை ஸ்தலங்களில் வட்டி முதலியன நிதானப்படுத்துவதற்கும், இன்னும் பல சௌகரியத்தின் பொருட்டும் ஆங்காங்கு ஒவ்வொரு சங்க மிருக்கவேண்டும்.

---

## நாட்டுக்கோட்டையாரும், தலைமயிர் வளர்த்தலும்.

---

நம்மவர்யாவரும் தலையில் சிகை வைத்துக்கொள்ள வேண்டுமென்பது என்னுடைய விருப்பம்.

தலையிற் சிகையிருப்பதாலும், இல்லாததாலும் ஒன்றும் லாபநஷ்ட மில்லையே? அது எப்பொழுதும்போ விருந்தாலென்ன வென்று சிலர் சொல்லக்கூடும். ஆனால், அதிற் பொருள்சம்பந்தமான லாபநஷ்ட மொன்றுமில்லை யென்றாலும், சரீரசௌகரியத்தைப்பற்றியும், அழகைப்பற்றியும், லாபநஷ்ட மேற்படாமலில்லை. மனிதனுக்கு சரீர சௌகரியம் பெரும்பாலும் நரம்புகளைப்பற்றியதாகவேயிருக்கிறது. நரம்புகள் தளர்ச்சி யடைவதாலும், கொதிப்படைவதாலும், இரத்தம் சரியாக ஓடாமல், பலவீனமும் நோய்களுமுண்டாகின்றன. நோய்களுள் நரம்பைப்பற்றிய நோய்களே பலமானநோய்களாகும். நரம்புகளின் மூலஸ்தானம் தலையில் இருக்கிறது. மூளையென்பதும், ஒருவகை நரம்பேயாகும். மூளையிருப்பது தலையிலென்பதும், அறிவுக்கு மூளையே காரணமென்பதும் யாவருமறிந்தவிஷயம். வெய்யிலாலும், மழையாலும் உண்டாகிற கெடுதல்கள் சீக்கிரத்தில் தலையிற் சாராமற் காப்பதற்குத் தலையில் மயிரிருப்பது நல்ல உபகாரமாகும். குழந்தைகள் பிறக்கும்போதே தலைமயிரோடு பிறப்பது இதற்குச் சான்றாம். இத

ஞல் கடவுள் சம்மதமும் தலையில் மயிரிருப்பது அவசியமென்பதை வற்புறுத்துகின்றது. இனி அழகு குறைவதைப்பற்றி நான் அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. அதுயாவரும் ஒப்புக்கொள்ளத்தக்கது. அழகை யார் வெறுக்கிறார்களோ, அவர்களே தலைமயிரை யெடுத்துவிடுகிறார்கள். அழகைவிரும்புகிறவர்கள், எண்ணெயிட்டுச் சீவி மிகப் பளபளப்பாகவும் அழகாகவும் வளர்த்துவைத்துக்கொள்ளுகிறார்கள். உதாரணமாக மங்கில்ய ஸ்திரீகளையும், விதவைகளையும், உலகப்பற்றற்ற துறவிகளையும், நமதுகல்யாண மாப்பிள்ளைகளையும், மகர நோம்புப் பிள்ளைகளையும் காணலாம். மகர நோம்புப் பிள்ளைகட்கு தலைமயிரை யெடுத்துவிட்டு விலைமயிரை வைப்பது அழகுக்குத் தானே? இதனுல், தலைமயிரிருப்பதால் அழகுண்டென்பது சொல்லாமலே அமைகின்றது. ஆதலின் குடும்பிகளாகிய நாம் அழகைவெறுக்கிறோம், அழகுவேண்டிய தவசியமில்லையென்று சொல்லமாட்டோம். சொன்னாலும் அது உண்மையான சொல்லாகாது. அழகுக்குத் தலைமயிரவசிய மென்பதையும் மறுக்கமுடியாது. ஆகவே சரீர சௌகரியத்துக்கும், அழகுக்கும் தலைமயிருக்கவேண்டியது முக்கியமாகிறது.

தலையில் சிகை வைத்துக்கொள்ளாமைக்கு நமது சரித்திரம் சொல்வதாகக் கூறும் காரணம் சரியானதென்று தோன்றவில்லை நம்மைப்போல தீக்ஷைபெற்றுக்கொள்ளுகிற பிராமணர், வேளாளர் முதலியோர் சிகை வைத்துக் கொள்ளும்போது, நம்மவர் மட்டும் ஏன் வைத்துக்கொள்ளக் கூடாது? ஆனல் வழக்கத்தை யெப்படி மாற்றுவது என்றஞ்சுகிறோம். ஞாயமான விஷயங்களில் மாற்றினுலென்ன? நமது ஆடையாபரணங்களெல்லாம் முன்னிருந்தபடியிருக்கின்றனவா? இல்லையே. அவைகளைக் காலத்துக்கேற்றபடி அழகானவைகளாக மாற்றிவருகிறோமே! செயற்கையழகையே நாம் பெருக்கிக்கொண்டிருக்கும்போது இயற்கையழகைக் குறைக்கலாமா? நன்றாயோஜித்துப் பாருங்கள்! நமது ஆகம சாஸ்திரப்படி சிகை வைத்துக்கொள்வது அவசியமாகிறது. நமது முன்னோர்கள் முடி வைத்திருந்ததாகவே கேள்விப்படுகிறோம். இப்போதும் சுவாமியாடிகள் முடி வைத்திருக்கிறார்கள். சுருதி, யுக்தி,

அனுபவம் மூன்றுக்கும் இவ்விஷயம் நிரம்பப் பொருத்தமாகிறது. எவ்வழியாகவோ இவ்வழக்கம் மெல்லவந்து நம்முட் புகுந்து நிலைத்துக்கொண்டது. எம் நண்பரொருவர் "தலை மயிரில்லாவிடிற் சரீரத்துக்குப் பலமுண்டாகுமோ?" வென்று சந்தேகப்பட்டார். அவருடன் ஒரு பெரிய 'டாக்ட'ரிடம் போய் அதைப்பற்றி நெடுநேரம் பேசியதில் அவர் தலைமயிர் இல்லாவிடிற் பல தீமைகளுண்டாகின்றன வென்று தக்க காரணங்களோடு சொன்னார். நம்முட் கற்றவர்கள், சிகை வைத்துக்கொள்ளலா மென்பதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆனால் தாங்கள் நடந்துகாட்ட அஞ்சுகிறார்கள். படித்தவர்கள் பயந்தால் மற்றவர்களைப்பற்றிப் பேசவேண்டுமா? இவ்வழக்கம் நம்முள் இல்லாமையால் மேனாட்டு முறையை யனுசரித்துத் தற்காலத்தில் நம்முட் சிலர் தலைமயிர் வைத்துக்கொள்கிறார்கள். இவ்விஷயத்தை இப்போதே கவனித்துச் சிகைவைத்துக்கொள்கிற ஏற்பாட்டை யனுட்டிக்கா விடில், சிறிது காலத்துள் மேனாட்டு முறையே நம்முள் வழக்கமாகி நிலைத்துவிடும். அப்போது அது சாஸ்திர விரோதமென்று வாதாட நேரும். ஆகவே அறிஞர்கள் இதை முதலில் ஆலோசித்துத் தக்கபடி நடந்து காட்டுவார்களாக.

---

## நீலகிரி, கொடைக்கானல், குற்றாலம்.

---

சென்னை ராஜதானியில் இம்மூன்றிடங்களும் வேனிற்காலத்தில் சுகத்திற்காக வசிப்பதற்கு மிக்க ஆரோக்கியமான இடங்களாகும். இம்மூன்றுள் நீலகிரியையும் குற்றாலத்தையும் நான் பார்த்திருக்கிறேன். நீலகிரி யென்பது சென்னை ராஜதானியிலுள்ள 24 ஜில்லாக்களில் ஒரு ஜில்லாவாகும். இந்த ஜில்லா முழுதும் மலைப்பிரதேசமேயாம். இதில் முக்கியமான பட்டணங்களிரண்டு. ஒன்று உதகமண்டலம் என்பது, மற்றொன்று கூனூர் என்பது. உதகமண்டல மென்பது பிரதான பட்டணம். இது சமுத்திர மட்டத்திலிருந்து 7300 அடி உயரமுள்ள ஒரு மலையின் சிகரமாகும்; கோடைகாலத்தில் நிரம்ப குளிர்ச்சியாகவும் வசிப்பதற்கு

ஆரோக்கியமாகவு மிருக்கும், ஏப்பிரல்மாதமுதல் ஆறுமாதம் வரையில்சென்னைக் கவர்ன்மெண்டு உதகமண்டலத்திற்றானிருக்கும், இம்மலையில் காப்பிக்கொட்டை, தேயிலை, சின்கோனா, இங்கிலாந்து தேசத்துப் பழ வர்க்கங்கள், உருளைக்கிழங்கு, முட்டைக்கோஸ் முதலிய காய்கறிகள், கோதுமை முதலியன விளைபொருள்களாம். இம்மலைப் பிரதேசத்தின் பூர்வ ஜனங்கள் படுகர், தோதவர், கொத்தர், இருளர், குறும்பர் முதலிய ஜாதிகளாகும். இவர்கள் பேசுவது பெரும்பாலும் தமிழ்ப் பாஷைதான், கன்னடமுமுண்டு. இம் மலையில் சுதேச அரசர்கள் எல்லோருக்கும் விடுதிகளுண்டு, வேனிற்கால ஆரம்பத்தில் அரசர்களும் உயர் பதவி உத்தியோகஸ்தர்களும் பிரபுக்களும் சென்னைக் கவர்ன்மெண்டும் இங்கு வந்து விடுவார்கள். அப்போது அம்மலை ஒரு காட்சியாக இருக்குமென்று நாம் சொல்ல வேண்டியதில்லை. அதின் தோற்றங்கள் ஐரோப்பிய நாடு போல் மாறிவிடும், உதகமண்டலம் வரையிலும் ரயிலிற்போகலாம், ரோட்டுமார்க்கமுமுண்டு, திருச்சிராப்பள்ளியிலிருந்து உதகமண்டலத்தின் ரயில்வே ஸ்டேஷன் 195 மயிலிருக்கிறது. மேட்டுப்பாளைய மென்பது இம்மலையின் அடிவாரம், இதிலிருந்து 29 மயில் ரயில் மலைமிலேறுகிறது, மலையிற் போகும்போது ரயிலிலிருந்து பூமியைப் பார்த்தால் மிகப்பயங்கரமாக இருக்கும், பூமி கண்ணுக்குத் தோற்றாது, ஏதோ பச்சையாகவும் அதிற் கோடிட்டது போல் வண்டிப் பாதைகளும் அளவிடக்கூடாத அழகான பள்ளத்தாக்குகளும் காணப்படும். மேலே பார்த்தால் இன்னும் அதிகமான மலைகளிருக்கும், ரயில் அதிக மெதுவாக ஏறிச்செல்லும், 29 மயிலேறுவதற்கு ஐந்தேகால் மணி நேரம்பிடிக்கிறது. இது மற்ற இருப்புப்பாதைகளைப் போலன்றி மூன்று தண்டவாளங்களிட்ட பாதையாக விருக்கிறது, வழிகளிற் பெரிய பெரிய ஆறுகளும் குகைகளுமிருக்கின்றன, அவைகளைத் தாண்டும்போது மிக அச்சமாகத்தானிருக்கும். ஆனால் அபாயமொன்று மில்லை.

இனி இம்மலையில் வசிப்பதைப்பற்றி நாம் பேசுமிடத்து நிரம்ப சந்தோஷமாக இருக்கிறது. காற்றுகளின் இனிமையான தொனியும் பக்ஷிஜாதிகளின் அருமையான கானமும் எங்கு பார்த்தா

லும் குளிர்ச்சியான தோற்றமும் சௌக்கியமான காற்றும் நம்மை ஆனந்தமடையச் செய்யும். ஆனால் இந்தப் பூமியின் விசேஷம் நிரம்பக் குளிர்ச்சியாக இருப்பதால் ஐரோப்பியர்கட்கே பொருந்தியதாகும். சுதேசிகட்கு அதிகக் குளிராக இருக்குமென்றாலும் சில காலம் வசித்து விட்டால் பிறகு ஒத்துப்போகும். இங்கு ஐரோப்பியர்கள் சந்தோஷமாக வசிப்பார்கள். இந்தச் சௌக்கியங்களெல்லாம் மேற்குறிப்பிட்ட ஆறுமாதங்கட்கேயாம். மற்ற ஆறுமாதங்களிலும் பனி அதிகமாக இருக்கும். தாங்கமுடியாது. அந்தக் காலத்தில் ஐரோப்பியர்களு மங்கு வசிப்பதில்லை. உதகமண்டலத்திலிருந்து 1300 அடி குறைந்த மலையிற்றான் கூனூர் என்ற பட்டணமிருக்கிறது. அதுவும் மேற்சொல்லிய எல்லா வளங்களும் நிரம்பப் பெற்ற இடமே. உதகமண்டலத்தைப் பார்க்கிலும் கூனூர் சுதேசிகட்குச் சௌக்கியமான இடமாகும். கூனூரையடுத்து வெல்லிங்க்டன் என்பது ஒரு இடம். அதில் ராணுவங்க ளிருக்கின்றன. அதையடுத்து அரவங்காடு என்பது ஒரு இடம். அங்கு வெடிமருந்துகள் செய்யப்படுகின்றன. கூனூரில் நாய்கடி வைத்தியசாலை யொன்றிருக்கிறது. அதில் எப்பேர்ப்பட்ட பைத்தியம் பிடித்த நாய் கடித்தாலும், சிகிச்சை செய்யப்படுமாம். நாய்க் கடிக்கு அதைத்தவிர உயர்ந்த வைத்தியசாலை இந்தியாவுள் எங்கு மில்லையாம். உதகமண்டலத்திலும் கூனூரிலும் கவர்ன்மெண்டுப் பூந்தோட்டங்கள் இருக்கின்றன. அவற்றி னழகையும் நீரோடைகளையும் புஷ்பங்களின் வகைகளையும் வர்ணங்களையும் அதிசயத்தையும் ஆனந்தமான தோற்றங்களையும் ஆதிசேஷனே வர்ணிக்க வேண்டும். மனிதன் சந்தோஷமடைய வேண்டுமென்றால் இத்தகைய தோற்றங்களையும் காக்ஷிகளையும் கண்டன்றோ சந்தோஷமடைய வேண்டும்? இந்த அழகான மலைச்சிகரத்தில் இருந்து வசிப்பதற்குக்கூடாவிட்டாலும் ஒரு முறையாவது போய்ப்பார்த்து வரவேண்டியது அவசியமாகும்.

இனிக் கொடைக் கானலைப் பற்றிப் பேசுமிடத்து அதைப் பற்றி நான் அதிகமாகச் சொல்வதற்கில்லை. ஏனெனின்? அதை நான் நேரிற்பார்க்கவில்லை. இது மதுரை ஜில்லாவிலுள்ள பழநி

மலையின் சிகரமாகும். சமூத்திர மட்டத்திலிருந்து 7000-அடி உயரமுள்ளது. கேள்விப்பட்டமட்டில் இதுவும் வேனிற்கால வாசத்துக்கு மிக ஆரோக்கியமான இடமென்றே யறிகிறேன்.

மூன்றாவதாகத் திருக்குற்றாலத்தைப் பற்றிப் பேசுவோம். இது தெற்கே பொதிகை மலையின் அடிவாரம். திருநெல்வேலி ஜில்லாவில் தென்காசித் தாலுகாவிலுள்ளது. தென்காசி வரையில் ரயில்மார்க்கமுண்டு. மதுரையிலிருந்து தென்காசி ரயில்வேஷ்டேஷன் 144 மயிலிருக்கிறது. தென்காசி யிலிருந்து மூன்றரை மயில் வண்டியிற் போகவேண்டும். இங்கு (திருக்குற்றாலத்தில்) சமயாச்சாரிய சுவாமிகளின் பாடல் பெற்றதும், அகஸ்திய பகவானால் சிவலிங்கமானதும் பிரபலமானதுமான சிவஸ்தலமிருக்கிறது. அதை யடுத்து மலையிலிருந்து ஆகாய கங்கையாய் அருவிவந்து வீழ்கிறது. அந்தத்திவ்யமான ஜலத்தின் பரிசுத்தமும் திறமும் குணமும் யாவரும் போற்றத்தக்கன. அந்த அருவியானது மலையிலிருந்து பாந்து சடசடவென்ற தொனியோடு விரிந்து தாராளமாக விழுவதை நோக்குமிடத்து மனிதர்கள் அதில் ஸ்நானம் செய்து பரிசுத்த மடைய வேண்டுமென்றே கடவுள் அனுப்பிய கங்கையென்று தெரிகிறது. அந்த அருவியிற் சேர்ந்தாப் போல் 45 தினம் ஸ்நானம் செய்துவந்தால் பெரிய குஷ்டரோகமும் சௌக்கியத்துக்கு வருமாம். இத்தகைய பெருமையுடைய "நீர்வீழ்ச்சியே" அந்த ஸ்தலத்துக்கு விசேஷ கௌரவத்தைத் தந்து கொண்டிருக்கிறது. இனி இந்த ஸ்தலத்தின் பூமியின்குணம் நமதுசுதேசிகட்கு மிகப்பொருத்தமுடையது. நீலகிரியைப்போல் அதிகக் குளிர்ச்சியின்றி நமது தேசத்தார் எவ்வளவு தாங்க முடியுமோ அவ்வளவுக்கு அளவாகவே யிருக்கிறது. வைகாசி, ஆனி, ஆடி யாகிய மூன்று மாதங்களில் வசிப்பதற்கு மிக்க ஆரோக்கியமாகவிருக்கும். பிரதி தினமும் மாறாமல் சாரல் (சிறுதூற்றல்) வீழ்ந்து கொண்டேயிருக்கும். அந்தச்சாரலும் அதனாலுண்டாகும் குளிர்ந்தகாற்றும் சரீரத்துக்கு மிகு சௌக்கியத்தை யுண்டுபண்ணும். விருக்ஷங்களும், செடிகளும், புற்பூடுகளும், பூமியும் குளிர்ந்த பச்சைவர்ணமுடைய வைகளாய்த்

தோற்றும். தென்னைமரங்கள் செழித்தோங்கியிருக்கின்றன. வயல்வேளாண்மையுமுண்டு. மலையிற் சில விலைபொருள்களுண்டு. அங்கு பளிங்கர்களென்ற ஒரு காட்டு ஜாதியார் வசிக்கிறார்களாம். மிருகங்கள் அதிகமாகப் புழங்குகின்றன. மலைமேலேறிச் சிறிதுதூரம் வரையிற் செல்லலாம். ஆனால் அருவியுண்டாகிற இடத்தைக் காணமுடியாது. குற்றாலத்தில் கடைத்தெரு, ஷாப்புகள் கிடையா. எல்லாச் சாமான்களும் தென்காசியிலிருந்தே வரவேண்டும். சாரற் காலந் தவிர மற்றக் காலத்தில் இங்கே யாருமிருக்கமாட்டார்கள். வெய்யிலடிக்கும்போது மிகக் கடுமையாக இருக்குமாம். இங்கு திருவாங்கூர் மகாராஜா அவர்கட்கும் எட்டயபுரம், சிங்கம்பட்டி முதலிய ஜமீன்தார்கட்கும் இன்னும் பலருக்கும் விடுதிகளிருக்கின்றன. சற்றேறக்குறைய 150 விடுதிகளிருக்கலாம். இதைத்தவிர வேறு வீடுகளில்லை. காலை 7-மணி முதல் சாயுங்காலம் வரையில் ஜனங்கள் கும்பல் கும்பலாக வந்து அருவியில் நீராடிச் செல்லுகிறார்கள். ஸ்நானம்செய்யுமிடத்தில் ஆச்சிரமங்களும் மண்டபங்களும் கட்டப்பட்டிருக்கின்றன. ஜனங்களைப் பாதுகாக்கும் பொருட்டும் ஸ்திரீ புருஷர்களைப் பிரித்து ஸ்நானம் செய்யும்படி பார்த்துக்கொள்ளவும் போலீஸார் காவலிருக்கிறார்கள். திருட்டு முதலியன இல்லை. இதிலிருந்து தெற்கிலும் மேற்கிலும் திருவாங்கூர் இராஜ்யமாகும். அது மலை நாடாதலின் மிக்க வளம் நிறைந்த காட்சியாக இருக்கும். தென்காசியிலிருந்து கொல்லத்துக்குப் போகிற ரயில் மார்க்கத்தில் இயந்திரங்களின் உதவியால் மலையைக் குடைந்து பாதை போட்டிருக்கிறார்கள். ஏறக்குறைய ஒரு மயில் தூரமுடைய ஒரு நீண்ட குகை இருக்கிறது. அது பார்க்கத் தக்கதேயாம். இந்தக் குற்றாலத்தில் வசிப்பது சாதாரணமாகச் சொந்த ஊரில் வசிப்பதைப் பார்க்கிலும் விசேஷ செலவுடையதன்று. ஆகவே மேற்குறித்த மூன்று மாதங்களுட் கூடுமான நாட்களில் அங்குவசித்துத் திருக்குற்றால நாதரைத் தரிசிப்பது வைதீக லௌகிகங்களாகிய இரண்டுவகை நன்மைகட்கும் மிகப்பொருந்தியதாகும்.

---

# சேர்க்கையறிவு.

மனிதர்கட்கு இயற்கையாலும், சேர்க்கையாலும் அறிவுண்டா கிறது. இயற்கையறிவைப்பற்றி முன்னொரு இடத்திற் சொன் னோம். இப்பொழுது சேர்க்கையறிவை விசாரிப்போம்.

சேர்க்கை யறிவானது பெரும்பாலும் கல்வியையும், ஜாதியை யும், மதத்தையும் பற்றியதாக இருக்கும். கல்வியாலுண்டாகிற அறிவு எந்தப் பாஷையைக் கற்றாரோ அந்தப்பாஷையை யனுசரி த்ததாக இருக்கிறது. ஒவ்வொருஜாதிக்கும் ஒவ்வொரு பாஷைக்கும் பொதுவான சில குணங்கள் வேறுபடுகின்றன. நிலத்தியல்பாகவே நீரின் நிறமும் குணமும் மாறுவதுபோல அறிவின் றன்மையே மன த்திற்கும் குணத்திற்குமுண்டாகிறது. இதைச் சற்று விளக்கமாக ஆராய்வோம்.

ஆங்கிலபாஷை கற்றவனுக்கும் தமிழ்ப்பாஷை கற்றவனுக்கும் மனப்போக்குப் பெரும்பாலும் வித்தியாசப்படுகிறது. தமிழ் கற்ற வனுக்கும் வடமொழி கற்றவனுக்கும் மனப்போக்கு சிறிது வித்தி யாசப்படுகிறது. வேளாண்மை செய்கிற ஜாதியாருக்கும், வாணிகம் செய்கிற ஜாதியாருக்கும், அரசர்கட்கும், பிராமணர்கட்கும் தனித் தனி மனப்போக்குகள் வித்தியாசப்படுகின்றன. ஜீவதயை, நட்பு, சாந்தம் முதலிய இயற்கைக் குணங்கள் மாறுவதில்லையென்றாலும் சேர்க்கையாலுண்டாகிற அநேக குணங்கள் மாறுதலடைகின்றன வென்பதிலையமில்லை.

ஆங்கிலம் கற்றவருட் பெரும்பாலார்க்குக் கடுமையான வைதீ கமும், ஜாதி மதவித்தியாசங்களை அளவுகடந்து பாராட்டுவதும் பழங்கதைகளும், அனாவசியமான பேச்சுக்களும், அனாவசியமான வழக்கங்களும், வளவளப்பும் பிடிக்காது. எதுவும் கண்ணாடி போல் தெளிவாக இருக்கவேண்டுமென்று விரும்புவார்கள். இம்மையின் ங்களைப் பெரிதும் விரும்புவார்கள். முயற்சியையும், சுறுசுறுப்பை யும் மிகப் பாராட்டுவார்கள். ஆனால் தெய்வ நம்பிக்கையும், நல்

ஆசாரங்களும் சிற்சிலரிடத்துத் தான் காணலாமென்றும், மதுமாமி
சங்களை யுண்பதும் நாஸ்திக வாதம் பேசுவதும் ஆங்கிலம் கற்பதா
லுண்டாகிற வழக்கமென்றும் பலர் பேசிக்கொள்ளும்படி சிலர்நடந்து
கொள்ளுகிறார்கள். அது அவர்களின் குற்றமேயன்றி பாஷையின்
குற்றமல்ல. எல்லோரும் மது மாமிசங்களை யுண்ணவேண்டுமென்
றும், தெய்வமில்லை யென்றும், ஆசார அநுட்டானங்களை விட்டு
விடும்படியும் ஆங்கிலபாஷை போதிக்கவில்லை. இதெல்லாம் சேர்க்
கைதோஷத்தாலுண்டாகிற கெட்ட வழக்கங்கள். தேச சஞ்சாரம்
செய்து அறிவுபெற விரும்புகிற ஒருவன் ஒவ்வொரு தேசத்திலு
முள்ள அதிசயமும், உபயோகமுமான பொருள்களைப் பாராது மல
ஜலங்களிக்கிற இடங்களையும், குப்பை கொட்டுகிற இடங்களையும்
பார்த்து வந்தால் அது அவனுடைய குற்றமா, தேசத்தின்
குற்றமா? இதுபோலவே பாஷைகற்கிறவர்கள் பாஷையிலுள்ள நன்
மைகளை யடையாமல் தீமைகளை யடைந்தால் அது அவர்களின் குற்
றமே யாகும். ஒவ்வொரு பொருள்களிலும் நன்மையும் தீமையும்
கலந்திருப்பது யாவருமறிந்தவிஷயம். ஆகவே ஆங்கிலம் கற்ப
தால் காலத்துக்கேற்ற உபயோகமான நல்ல அறிவுண்டாகி மனித
னைச் சிறப்படையச் செய்கிற தென்பதி லையமில்லை. ஆங்கில
பாஷையாலுண்டாகிற அறிவானது தற்கால உலகத்துக்கு மிகவும்
பொருந்தியிருக்கிறது.

இனித்தமிழ்ப் பாஷை கற்றவர்களின் அறிவைப்பற்றி நாமாராயு
மிடத்து அது பெரும்பாலும் மறுமைப் பயனை நோக்கியதாகவே
இருக்கிறது. மறுமைப் பயனுக்குற்ற நூல்களையும், புராதன ஆசா
ரங்களையும், கதைகளையும் பெரிதும் போற்றுவார்கள். எல்லாம்
வினையின்படி நடக்கிற தென்பதை உள்ளபடிக் குணர்ந்திருப்பார்
கள். பாவ புண்ணியங்களைப் பற்றி நன்றாயாராய்ந்திருப்பதால்
கெட்ட காரியங்களைச் செய்ய அஞ்சுவார்கள். மனிதர்கள் தம் வா
ணாள் முழுதும் சரியாக நடந்து கொள்வது அசாத்தியமாதலின் பல
சமயங்களில் தவறிவிடுவது இயற்கையே யாகும். அப்படித்தவறிய
விடத்து அதை வெளியிடாமற் பலவகையிலும் மறைக்க முய
ன்று அக்குறை தம்மை விட்டகலும்படி பிராயாசைப் படுவது

அவர்களின் விருப்பமாகும். இத்தகைய உயர் குணங்களேற்படு கின்றன வெனினும் அதிலும் சில பதர்கள் இல்லாம லில்லை. சொல் வதெல்லாம் பொய், பேசுவதெல்லாம் வம்பு, நடப்பதெல்லாம் கெட்ட வழி, முகஸ்துதி பேசி ஏமாற்றுவதிலும், ஒரு தொழிலும் செய் யாமல் ஜீவிப்பதிலும் அதிக விருப்பம். இப்படிச் சிலபதர்கள் கல ந்திருப்பதால் மேலான அறிஞர்களின் பெயருக்கும் சில சமயங்க ளிற் குறையேற்படுகிறது. தமிழ்ப் பாஷையானது நல்ல இரக்க சுபாவத்தையும், ஜீவகாருண்ணியத்தையும், தெய்வ நம்பிக்கையை யும், பக்தியையும் உண்டுபண்ணு மென்பதிலையமில்லை. இது இம் மையின்பங்களில் வெறுப்பும் மறுமை யின்பங்களில் விருப்பும் உண்டாக்குகிற ஞானபாஷை யாதலின் இதையுள்ளபடிக்குக் கற் றோர்களின் மனப்போக்கும் அப்படியே யிருக்குமென்பது சொல்ல வேண்டியதில்லை.

இனி வடமொழியையும் அதைக் கற்றோரையும் பற்றி ஆராய் வோம். வடமொழி ஒரு உயர்ந்த பாஷை, உலகத்தில் வழங்குகிற அநேகம் பாஷைகட்கு அது தாய்ப் பாஷையாக இருக்கிறது. ஒரு குறையுமின்றி எல்லா அங்கங்களையும் அப்பாஷை பெற்றிருக் கிறது. கடல்போல எல்லை யில்லாத நூல்கள் அப்பாஷையி லமைந் திருக்கின்றன. அப்பாஷையைப் படிக்காதவர்கட்கும் அதன் உரு க்கமான சுலோகங்கள் ஆனந்தத்தை யுண்டாக்குகின்றன. இப் படிப் பலவகையிலும் மிகச்சிறந்திருக்கிற அப்பாஷை அந்தப்புர த்துப் பெண்கள் போலப் பேச்சுவழக்கத்தில் இல்லாதிருப்பது பெரி தும் விசனிக்கத்தக்கது. பேச்சுவழக்கத்தில் இல்லாமைக்குக் காரணம் அப்பாஷைக்குச் சொந்தக்காரரென்னப்படுகிற ஆரியர்களின் கபட எண்ணமே யென்று தோற்றுகிறது. வடமொழி கற்றபண்டிதர் கள் நமது நாட்டில் மிகச்சொற்பம். ஆனால் அப்பாஷையை அநே கர் பாடசாலைகளில் கிளிப்பிள்ளைப் பாடமாகக் கற்று வருகிறார்கள். அந்தக் குருட்டுப்பாடத்தால் ஒரு பயனுமில்லை. பாஷை கற்பதெ ன்றால் சொல்லுக்குப் பொருளும் பொருளுக்குச் சொல்லும் தெரிந் திருக்கவேண்டும். அப்படியறியாதவர்கள் படித்தவர்களன்று. அன்னத்தை முன்றாற் கொட்டி முசந்து பார்த்தாற் பசிதீர்ந்து

விடுமா? இனி வடமொழியை வழக்கமாகப் படிப்பவர்கள் பிரா மணர்கள். அவர்களுள் அநேகர் வடமொழி தங்கட்குச் சொந்தப் பாஷையென்றும் அதிலுள்ள சுருதி, ஸ்மிருதிகளைப் பிறர் படிக்கக் கூடாதென்றும் பிரமாதமாக வாதிக்கின்றனர். பாஷை யொருவரு க்குச் சொந்த மென்பதும் அதைப் பிறர் படியாதிருக்க வேண்டு மென்று வாதிப்பதும் எக்காலத்தும் எவரும் அங்கீகரிக்கத் தக்க தன்று. அதிலும் நாகரீகமான இக்காலத்தில் அந்த வாதம் பரிகசி த்தற் கிடமாகுமென்பது நாம் கூறவேண்டியதில்லை. வடமொழி யிலுள்ள அனேகநூல்களையும், வேதங்களையும் மேனாட்டு வித்துவான் கள் தங்கள் தங்கள் பாஷையில் மொழிபெயர்த்திருக்கிறார்கள். அதை யுணராத சில அறிவிலிகள் நமது நாட்டில் வீண்வாதஞ் செய்து இடிபடுகிறார்கள். ஆனால் இப்படி வீண்வாதம்செய்கிறவர்கள் அனேகமாக அப்பாஷையின் அறிவைப் பெறாதவர்களே யாதலின் அவர்களை விட்டுப் பெற்றவர்களைப் பற்றிப் பேசுவோம். அவர்கள் சிறந்த புத்திமான்களாகவும், வைதிக முறைகளை நன்கறிந்தவர் களாகவும் ஒழுக்கம், ஆசாரங்களை மதிப்பவர்களாகவும், மரியாதை தெரிந்தவர்களாகவும், பக்திமான்களாகவும், மறுமை இன்பங்களில் நோக்கமுள்ளவராகவும் காணப்படுகிறார்கள். அவர்கள் மனப்போ க்கும் தமிழ் கற்றோரின்மனப் போக்கைச் சற்றேறக்குறைய ஒற்று மையுடையதாகவே தெரிகிறது.

இனி இதைப்போலவே தொழில் அல்லது ஜாதிகளிலும் அததற் குத் தக்கபடி மனம், குணம் அமைந்திருக்கக் காண்கிறோம். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோற்றைப் பதம் பார்ப்பதுபோல் ஒரு ஜாதியின் இயற்கைச் சுபாவத்தை அந்த ஜாதியைச் சார்ந்த ஒரு மனிதனிடம் காண்கிறோம். அதைப்போலவே மிருகம், பக்ஷி முதலிய மற்ற ஜீவவர்க்கங்களினிடமும் காண்கிறோம். ஒரு புலியின் சுபாவத்தை எல்லாப் புலிகளிடமும் காண்கிறோம். ஒரு காக்கை யின் சுபாவத்தை எல்லாக் காக்கைகளிடமும் காண்கிறோம். ஆகவே ஒரு ஜாதி அல்லது ஒரு தொழிலால் பொதுவான குணங் கள் ஒன்று படுகின்றன வென்று நாம் நிச்சயிக்கலாம்.

வேளாண்மை செய்கிற ஜாதியார் கால்நடைகளிடத்து அன் புடையவர்களாகவும், அவைகளைப் போஷிப்பதிற் கவனமுடையோ

ராகவும், நாடு செழிக்க நல்லமழை பெய்யவேண்டுமென்று தங்கள் குல தெய்வங்களை ஆராதிப்பவர்களாகவும், கடினமான வேலைகள் செய்யும் வலியுடையோராகவும், எந்த ஆகாரத்தையும் எந்த நேரத்திலும் உண்ணுமியல்புடையோராகவும், பயபக்தியுள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். வாணிகம் செய்கிற ஜாதியார் சாமர்த்தியமுள்ளவர்களாகவும், தந்திரிகளாகவும், செட்டுச் செய்கிறவர்களாகவும், பொறுமையும் நிதானமும் உடையவர்களாகவும், டாம்பீகமற்றவர்களாகவும், எந்தவகையிலும் தங்கட்கு ஆதாயம் கிடைப்பதிலேயே நோக்கமுடையவராகவும், நாணயத்தைப் பெரிதும் மதிப்பவர்களாகவும் இருக்கிறார்கள். அரசர்கள் கெம்பீரமான தோற்றமுடையோராகவும், குடிகளின் க்ஷேமத்தைக் கோருகிறவர்களாகவும், தைரியமும், ரோஷமும், வீரமும் உள்ளவர்களாகவும், இரக்கமுள்ளவர்களாகவும் இருக்கிறார்கள்.

பிராமணர்கள் இக்காலத்திலும், அக்காலத்திலும், எக்காலத்திலும், வேலை செய்யாமல் சுசஜீவனம் செய்வதிலேயே நோக்கமுடையவர்கள். உலகத்திலேற்படுகிற நன்மை தீமைகட்கெல்லாம் தாங்களே காரணமென்றும், மற்றெல்லா ஜாதியாரும் தங்கட்குக் கீழ்ப்படிய வேண்டுமென்று கடவுள் வாயிலாக நூல்கள் வந்திருக்கின்றன வென்றும், தங்களுக்குப் பொருள் தருவதால் எத்தகைய பாவதோஷங்களும் நிவர்த்தியாகிவிடுமென்றும்,உலகத்திற் பிரத்தியக்ஷதெய்வமாக இருந்து மனிதர்களைப் பரிசுத்தப்படுத்துவது தாங்கள்தானென்றும், நன்மை தீமையான விசேஷங்கள் யார் வீட்டில் வந்தாலும் அதில் தங்கட்குப் பாத்தியமுண்டென்றும் இன்னுமிவைபோன்ற அநேக விஷயங்களில் ஜனங்கட்கு நம்பிக்கை பிறக்கச் செய்து உள்ளபடிக்கு இதன் மூலமாகவே அநேகர் ஜீவித்து வருகிறார்கள். இந்த விஷயங்கள் எந்தமட்டில் உண்மையென்று நமக்கு விளங்கவில்லை. ஆனால் தற்காலத்தில் ஆங்கிலபாஷை கற்றவர்களும் தமிழ் வடமொழி நன்கு கற்ற சில பண்டிதர்களும் இந்த ஜீவனத்தை வெறுத்து உதறிவிட்டு தொழில் செய்து ஜீவிப்பதே உயர்வென்பதையுணர்ந்து உத்தியோகம், நியாயவாதம், உபாத்திமை, வியாபாரம் முதலிய வழிகளில் க்ஷேமமாக ஜீவிக்கிறார்கள். இதை நோக்குமிடத்து ஆரியில்

தங்கள் சாஜீவனத்துக்கு இதையொரு வழியாகக் கண்டுபிடித்தார்க ளென்று தோற்றுகிறது. அது எப்படியாயினுமாகுக. பொதுவாக பிராமணர்கள் இயற்கை யறிவுள்ளவர்களாகவும், சுறுசுறுப்புள்ள வர்களாகவும், விஷயங்களை விரைவிலறிந்துகொள்ளும் சாமர்த்திய மும், புத்தி நுட்பமுமுள்ளவர்களாகவும், கல்வியினத்தில் விருப் புள்ளவர்களாகவும் இருக்கிறார்கள்.

இப்படியே ஒவ்வொரு ஜாதி ஒவ்வொரு தொழில்கட்கும் பொதுவான சில குணங்கள் ஒன்றுபட்டிருக்கின்றன. மதங்களா லும் ஜனங்கள் ஒருவகை ஒற்றுணர்ச்சியை யுடையவர்களாக இருக் கின்றார்கள். ஒருவனைப் பார்த்தவுடனே இவன் இன்ன ஜாதி இன்ன மதம் உடையவனாக இருக்கலாமென்று ஊகித்துக்கொள்ள இட முண்டாகிறது. இதனால் பாஷையாலும், ஜாதியாலும், மதத்தாலும் மனிதர்கள் வெவ்வேறு குறைகுணங்களையும் நடையுடைபாவனை களையும் பெற்றவர்களாக இருக்கிறார்களென்று வெளியாகிறது.

ஆதலின் இயற்கை அறிவைச் சிறப்பிப்பது சேர்க்கை யறிவே யாகிறது. சேர்க்கை யறிவிலும் கல்வியைப்பற்றிய அறிவே மிகவலி யுடையதாகும். ஆதலின் எந்தப் பாஷையிலும் பிறப்புச்சேற்ற மதம் ஆசாரங்களைக் கலந்து கல்லூரிகளிற் பிள்ளைகட்குப் போதிப்பதே விசேஷமாகும்.

---

## உண்மை நூல்கள்.

நமது தேசத்தில் மதநூல்கள் நீதிநூல்களைத் தவிர தேசத் தைப்பற்றிய பூர்வசரித்திரங்களை நாம் அறிவதற்கு நமது சொந் தப்பாஷையில் எந்த உண்மை நூலும் காணப்படவில்லை. ஆங்கில பாஷையில் எழுதப்பட்டிருக்கிற நூல்களாலும் மற்ற அன்னிய பாஷை நூல்களாலும் நாம் ஒருவாறு பூர்வசரிதைகளையறிய வே ண்டியதாகவிருக்கிறது. அதை யெழுதியவர்கள் அன்னியநாட்டா ரும் பிரயாணிகளுமாக இருப்பதால் அந்த விஷயங்கள் எந்த மட்டில் உண்மையாக இருக்குமென்று நாம் நிதானிக்கக்கூடவில்லை.

அத்தகைய நூல்களிற் கூறப்படுகிற சரித்திரங்களும் பெரும்பாலும் பெரிய பெரியபட்டினங்களைப் பற்றியதாக வேயிருக்கிறதன்றி, அனேக முக்கியஇடங்களைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. மதுரை, சிதம்பரம், திருவண்ணாமலை, திருவாரூர், ஸ்ரீகாசி முதலிய பெரிய ஸ்தலங்களைப்பற்றிய உண்மையான சரித்திரங்களைச் சரியாக நாம் அறியக்கூடவில்லை. அத்தலங்களில் அரசபரம்பரையைப் பற்றியும் அவர்கள் செய்த காரியங்களையும், இப்போதிருக்கிற திருப்பணிகள் யாரால் செய்யப்பெற்றது எப்பொழுது செய்யப்பெற்றது அதற்குமுன், எப்படியிருந்தது, அதையேன் புதுப்பிக்க நேர்ந்தது, நித்திய நைமித்தியங்கள் தடைப்படாமல் நடந்துவந்திருக்கின்றனவா, மற்றும் என்னென்ன விசேஷங்கள் நேர்ந்தன என்பதையும் தொடர்ந்து படிக்க நமக்கு ஆவலுண்டெனினும், அத்தகைய நூல்களில்லை யென்னும்போது வருத்தமாக இருக்கிறது. இனி நாம் வசிக்கிற ஊர்களைப்பற்றிய சரித்திரம் நமக்கு ஒன்றுமே தெரியவில்லை. 40. 50. வருஷங்கட்குமுன் நடந்த விஷயங்களைப்பற்றி நாம் ஊன்றி விசாரித்தால் சில கிழவர்கள் மட்டும் கொஞ்சம் கொஞ்சம் சொல்லுகிறார்கள். அதை நன்றாக விளக்கிச் சொல்லவும் அவர்கட்கு ஞாபகசக்தி யிருப்பதில்லை. ஆகவே அதைப்பற்றி ஒன்றும் நாம் நன்றாகத் தெரிந்துகொள்ளக்கூடவில்லை. அனேக ஊர்களில் ஆலயங்கள் இடிந்தும், கோட்டைகள் இடிந்தும், பெரிய பெரிய கற்களும் செங்கல்களும் கற்சிலைகளும் காணப்படுகின்றன. அந்த இடங்களைச் சோதிக்கும்போது ஆழமான அஸ்திவாரங்களும் கல்வரிகளும் காணப்படுகின்றன. ஆனால் அதைப்பற்றிய சரித்திரம் ஒன்றும் தெரியவில்லை. வயோதிகர்களைக் கேட்டால் அவர்கள் எங்கள் பாட்டன் காலத்திலும் இப்படியேதான் இருந்தது என்றுசொல்லுகிறார்கள். தாதுவருஷத்திற் பெரியஞ்சம் நேர்ந்ததென்றும் நெல் ஒரு ரூபாவுக்கு ஆறுபடி விற்றதென்றும் அனேக ஆடுமாடுகளும் மனிதர்களும் மாண்டுபோனார்களென்றும் பலர் கூறுகின்றனர். இது அதிக காலமல்ல. சமீபத்தில் நேர்ந்ததேயாம். இந்த சம்பவத்தைப் பற்றிக்கூட நமது வித்துவான்கள் ஒரு சிறுபுத்தகம் எழுதிவைக்கவில்லை. சிலகாலம் சென்றால் இதுவும் பாட்டன்

காலத்திற் பேசிய பேச்சாகிவிடும். அப்படி ஒருநூல் எழுதியிருந்தால் ரூபாவுக்கு ஆறுபடி நெல்லும் ஒரு வைக்கோல் கட்டு இரண்டு ரூபாவுக்கும் விற்கிற இந்த வருஷத்துக்கும் தாதுவருஷத்துக்கும் என்ன வித்தியாச மென்பதைக் காணலாம். இப்படியே ஒவ்வொரு விஷயங்களும் சரித்திர பூர்வமாக நாம் அறியக்கூடாமல் இருக்கிறது. முன்னே போனவன் பள்ளத்தில் வீழ்ந்தாற் பின்னே போகிறவன் உஜாராகப் போகிறான். அதுபோல் இன்னகாரணத்தால் அல்லது இன்ன குற்றத்தால் இன்னசம்பவம் நேர்ந்ததென்பதை யறிந்தால், அதைவிட்டு வேறுவழியிற் செல்ல ஏதுவாம். பொதுஜனங்கட்குத் தங்கள் தேசத்தின் பூர்வநிலைகளையும் மாறுதல்களையும் சம்பவங்களையும் அறிவதில் விருப்பமும் நன்மையும் உண்டாகு மென்பதிலையமில்லை.

ஸ்தலங்களைப் பற்றித் தலபுராணங்களிலும், இதிகாசங்களிலும் கூறப்பட்டிருக்கிறதே யெனின்? அந்த நூல்களிற் கூறப்படுகிற விஷயங்களுட் பெரும்பாலும் முந்தின யுகங்களில் நடந்ததாகவின் யுக்தி அனுபவங்கட்குப் பொருந்தாமலும் அதோடு வர்ணனையும், கற்பனையும் அதிகமாகக் கலந்தமைந்து இருக்கின்றன.

சில தலபுராணங்களைப் பார்க்கும்போது இக்காலத்தில் எழுதுகிற நாவல் கட்கும் அவைகட்கும் வித்தியாசமில்லை யென்று காண்கிறது. ஏன்? இதுவும் கற்பனைக்கதை, அதுவும் கற்பனைக்கதை, இதுவும் மனக்கிளர்ச்சியையுண்டாக்குவது, அதுவும் மனக்கிளர்ச்சியை யுண்டுபண்ணுவது, இதிலும் சிலநன்மைகளுண்டு, அதிலும் சிலநன்மைகளுண்டு. ஆனால் ஒருவிஷயத்தில் மட்டும் இதற்கும் அதற்கும் பேதமுளது, அதாவது இது வசனரூபமான நாவல், அது செய்யுள் ரூபமான நாவல். இதைத் தவிர வேறு வித்தியாச மெதுவுமில்லை யென்பது என்னுடைய அபிப்பிராயம். ஒரு தலபுராணத்தில் அருணனது கால்களற்றதற்குக் காரணம் கூறப்பட்டிருக்கிறது. அதாவது அத்தலத்தின் தென்னைமரங்கள் சூரியமண்டலம் வரை ஓங்கிவளர்ந்திருந்தாகவும், சூரியனுடைய தேர் ஒருநாள் அம்மரங்களில் மோதிவிட்டதாகவும் அதனால் சாரதியாகிய அருணன் தவறி வீழ்ந்து, காலொடிந்து விட்டதாகவும் கூறப்படுகிறது. (ஒடிந்த காலுக்கு மட்டைவைத்துக் கட்டிச் சரிப்படுத்தா

மல், மொழிவளை வெட்டியெடுத்து இங்கிலீஷ் வைத்தியம் செய்யப்பட்டிருக்கும்போதும்) இதை யாராவது நம்புவார்களா? இவ்வளவு பெரிய பொய் சொல்வதிலென்ன பயன்? பொய் சொன்னாலும் கொஞ்சம் பொருந்தும்படி சொல்லலாகாதா? இன்னும் சில தலபுராணங்களில், உப்பைத் தொட்டுக்கொண்டு உரல் உலக்கைகளை விழுங்கிவிட்டதாகக் கூறப்படுகிறது. இப்படிப் பொருத்தமில்லாத பொய்களை மனம்போனபடி சொல்வதாற் குற்றமில்லையென்று இலக்கணிகள், சூத்திரம் காட்டுகின்றனர், சொல்லலாமென்றாலும் வசனரூபமான கற்பனைக் கதைகட்கு நாவல்கள் என்று உண்மைப் பெயர் வைத்திருப்பதுபோல், இவைகட்கும் கற்பனையான தலபுராணம் என்று பெயர் வைத்துவிட்டால், இது உண்மைநூல், இது கற்பனைநூல் என்று பொது ஜனங்கள் நன்குணர்வார்கள். மயங்காமல் அப்படி யுணர்ந்து கொள்வதால் உண்மை நூல்கட்கு மதிப்பு அதிகப்படுமே அப்படிச் செய்யாமல் பொய்யும் மெய்யும் கலப்பதால் மெய்யும் பொய்யாகிவிடுகிறது. போனது போகட்டும் இனிமேலாவது நமது வித்துவான்கள் உண்மை நூல்கள் எழுதுகிற வழக்கத்தையும் கையாட வேண்டும். உண்மை நூல்களை உண்மை நூல்களென்றும், கற்பனை நூல்களைக் கற்பனைநூல்களென்றும் அதனதன் பெயர்களாலோ அல்லது முகவுரைகளிலோ உள்ளபடிக்கு விளக்கிவிடவேண்டும். மதநூல்களையும், நீதி நூல்களையும், வசனரூபமாக எழுதவேண்டும். கற்பனை நூல்கள் உலகநடையைப் பெரும்பாலும் அனுசரித்ததாகவும் சாமானியர்களும் படித்துணரும்படியும் விளக்கமாகவும் எழுதவேண்டும். நல்ல அறிவுள்ளவர்கள் தங்கள் தங்கள் அநுபவத்திற் காண்கிற பலித வாழ்வின் பற்பல மாறுதல்களையும், பூமியிலும் வானத்திலும் உண்டாகிற பல அற்புதங்களையும் அவற்றாலுண்டாகும் நன்மை தீமைகளையும் காலதேச வர்த்தமானங்களையும் புதிய புதிய சம்பவங்களையும் அவ்வப்போது குறிப்பிட்டு வைத்திருந்து முடிவில் ஒரு அநுபவநூல் எழுதி வெளியிடவேண்டும். இப்படி உண்மை நூல்கள் எழுதுகிற வழக்கமும் கையாடப்படுமானால் வருங்காலப் பின்சந்ததியாருக்குப் பெரிதும் அநுகூலமாகவிருக்கும் எழுதியவர்கட்கும் பெரும்புகழுண்டாகும்.

---

# நாட்டுக் கோட்டையாரென்னும் பெயர் வரலாறு.

---

பூர் கொன்றை வேலங்குடிச் சிவாலயத்திலுள்ள கல்வெட்டிலிருந்தெழுதப் பெற்ற புத்தகப்படி நமது வணிகமக்கட்கு நாட்டுக் கோட்டையாரெனப் பெயர் வந்த காரணத்தை மட்டும் இங்கு எழுதுகிறோம்.

ஆதியில் நாக நாட்டிற் சாந்திபுரி யென்னும் கிராமத்தில் இரத்தின வியாபாரம் செய்துகொண்டு சிவாகம புராண சித்தாந்த சைவ தீக்ஷாசம் பன்னர்களாய் வாழும் நாளில், அந்நாட்டு அரசன் செய்த கொடுமையால் கலியுக வருஷம் 204-ல் காஞ்சிபுரத்துக்கு வந்து சேர்ந்து அங்கு அரசனுடைய ஆதரவைப் பெற்று, சுமார் 2,100 வருஷம் நல்வாழ்வுற்றிருந்து பின்பு, அந்நகரத்து அரசனாகிய பிரதாப ராஜனால் இடுக்கணுற்று அவ்வூரைவிட்டுக் கலியுக வருஷம் 2312-ல் சோழ தேசத்துக்கு வந்துசேர்ந்து அப்போது அங்கு அரசனாகவிருந்த மநுநீதி சோழராசனால் மிக மரியாதை பெற்று, அரசவம்சத்துக்கு முடி சூட்டுகிறவர்களாகவும் அமைந்து அரசனால் சிங்கக்கொடி பெற்று காவிரிப்பூம் பட்டினத்தில் குடியேறி அளவற்ற கௌரவத்தோடு வாழும் நாளில் கலியுக வருஷம் 3775ல் அங்கு அரசனாகவிருந்த பூவந்திசோழன் தங்கள் குலப்பெண்ணை துராக்கிருதமாய்ப் பிடித்துச் சிறைவைத்ததினால் அப்போது பள்ளிக் கூடத்திற் படித்த ஆயிரத்தைந்நூற்றிரண்டு (1502) ஆண் பிள்ளைகளை மட்டும் விட்டுவிட்டு மற்ற யாவரும் பிராணஹானி செய்து கொண்டார்கள். பிறகு அரசன் ஆணையால் தரும சாஸ்திரப்படி வேளாளர் பெண்களை மணந்து கொள்வதாகவும் பிறகு வேளாளருக்குப் பெண் கொடுப்பதில்லை யென்றும், நிச்சயம் பண்ணிக் கொண்டு அப்பிள்ளைகள் வேளாளப் பெண்களை விவாகம் செய்து அப்பொழுது மூன்று வகுப்பாகப் பிரிக்கப்பட்டார்கள். அதாவது உபயகுல பூபால வைசியர்களென்றும், இரத்தின மகுட பூபால வைசியர்களென்றும், சந்திர கங்காகுல வைசியர்களென்றும் மூன்று வகையானார்கள். பிறகு மதுரைக் கரசனான சுந்தர பாண்டி

யன் சோழராசனிடம் நற்குடிகள் வேண்டுமென்று கேட்க, சோழ ராசன் இவ்வைசியர்களிற் சிலரை யங்கு போய் வசிக்கும்படி சொல்ல அவர்கள் பிரிந்திருக்க முடியாதென்றமையால் எல்லோரையும் பாண்டிய நாட்டில் போயிருக்கும்படியும் தான் செய்த மரியாதைகள் யாவும் பாண்டியராஜனும் செய்வாரென்றும் சொல்லி யனுப்ப, அப்படியே கலியுக வருஷம் 3808-ல் பாண்டி நாடு வந்து சேர்ந்தார்கள். அப்பாண்டிய ராசன் அங்ஙனமே சகல மரியாதையுந் தந்து கடலுக்கு மேற்கு, வைகைக்கு வடக்கு, பிரான்மலைக்குக் கிழக்கு, வெள்ளாற்றிற்குத் தெற்கு, இங்கான் கெல்லைக் குட்பட்ட வேளாளர் பூமியில் வசிக்கும்படியும் (இப்போதும் இங்கான் கெல்லைக் கப்புறம் குடி யேறுவதில்லை.) மூன்று வகுப்பாருக்கும் மூன்று ஊர்களும், மூன்று சிவஸ்தலங்களும் தந்து கௌரவமாகவே நடத்திவந்தார். அவற்றுள் அரியூரில் வசித்தவர்கள் அரியூராரென்றும், சுந்தர பட்டணத்தில் வசித்தவர்கள் சுந்தரத்தா ரென்றும், இளையாற்றக் குடியில் வசித்த சந்திர கங்காகுல வைசியர்கள் இளையாற்றக் குடியாரென்றும் மூன்று வெவ்வேறு பெயரால் அழைக்கப்பட்டனர். இந்த இளையாற்றக்குடியானது பாண்டி நாட்டுக்குக் கோட்டை போல் நடுமண்டலமாதலால் நமக்கு நாட்டுக்கோட்டையாரென்னும் காரணப் பெயர் வந்தது.

---

## நாட்டுக்கோட்டை யாரின் அபிவிருத்தி.

---

நம்மவர் கடந்த பத்து வருஷங்கட்குள் அடைந்திருக்கிற அபிவிருத்தியைப் பற்றிச் சொல்வதற்கு நமக்கு மிகுந்த சந்தோஷமாக இருக்கிறது.

கல்வியிலும் செல்வத்திலும் திறமையாலும், சீர்த்தியாலும், பெரிதும் அபிவிருத்தி யடைந்திருக்கின்றோம். தர்மிஷ்டர்களென்று உலகமெல்லாம் புகழப்பெற்றிருக்கின்றோம். அனேக நூற்றாண்டுகளாக நமக்கு மறந்து போய்விட்ட பழைய நன்மைகளெல்லாம் மீண்டும் நமக்கு வந்து கொண்டிருக்கின்றன. பழைய காலத்திலில்லாத அநேகநன்மைகளும் இப்போது நமக்குண்டாகின்றன.

தற்காலத்தில் தமிழ்ப்பாஷை கற்றவர்களும் தமிழபிமானிகளும் ஆங்கில பாஷைகற்றவர்களும் நம்முள் அனேகரிருக்கிறார்கள். தமிழ் ஆங்கிலத்தைப்பிள்ளைகட்குக் கட்டாயம் படிப்பிக்க வேண்டு மென்று ஒவ்வொருவரும் விரும்புகிறார்கள். பெண்களைப் படிப்பிக்க முன்வந்திருக்கிறார்கள். கல்வியின் பயனைப்பற்றி அனேகர் நன்கறிந் திருக்கிறார்கள். கலாசாலையும் சபைகளும் வாசகசாலையும், ஏராள மாகப் பெருகி வருகின்றன. படித்தவர் கட்கும், விவேகி கட்கும் மதிப்பு அதிகப் பட்டு வருகின்றன. பழக்க வழக்கங்களின் குறை குற்றங்களை யறிந்தவர்களும்ஆசார சீர் திருத்தக்காரர்களும் பெருகி வருகின்றனர். உபயோகமான தர்மங்களையும் உண்மையான புகழையும் புண்ணியத்தையும் அநேகர் விரும்பு கின்றார்கள். இதெல்லாம் நற்காலத்தின் அறிகுறிகளே யாமன்றோ?

இன்னும் அரசாங்கத்தாரால் நன்கு மதிக்கப்பட்டிருக்கிறோம், நாணயத்தாலும் யோக்கியத்தாலும் எப்பொழுதுமே மதிக்கப் பட் டிருந்தோமாயினும் இப்போது விவேகிகளென்றும் மதிக்கப்பட்டிரு க்கின்றோம். நம்முள் அநேகர் முனிசிபல் சேர்மனாகவும் யூனியன் சேர்மனாகவும் தாலூக் டிஸ்டிரிக்ட் போர்டுகளில் மெம்பர்களாகவும் இன்னுமனேககௌரவ உத்தியோகங்களும்பெற்றுமிகத்திறமையாக நடத்தி வருகிறார்கள். இன்னும் லெஜிஸ்லேட்டிவ்கௌன்சில் மெம் பர்ஸ்தானத்தையும் திவான்பகதூர், ராவ்பகதூர் என்ற கௌரவப் பட்டங்களையும் ஒரு ஜமீனை நிர்வகித்து நடத்தும் சக்தியும், திறமை யும் நமது குலமணிகள் பெற்றிருப்பது நமக்கு அதிகப் பெரு மையை யுண்டாக்குவதன்றோ?

இன்னும் பாரிஸ்,வேனிஸ்,இட்டாலி,இங்கிலாண்டு, அமெரிக்கா முதலிய மேல் தேசங்கட்குச் சென்று நாகரீகங்களை நன்கறிந்தவர் களும், வியாபாரம் கைத்தொழில் முறைகளை நன்கறிந்தவர்களும், மேல்நாட்டாரைப் போலவே வியாபாரஞ் செய்யும் திறமை பெற்ற வர்களும், நம்முள்ளிருப்பது நமக்குப் பெரிய சந்தோஷமன்றோ? மேற் காட்டியபெருமைக ளொவ்வொன்றும் சிறப்பாக ஒவ்வொரு வருக்கேற்பட்டிருக்கின்றனவெனினும் நாட்டுக்கோட்டையாரென்ற சொல்லால் நமது ஜாதிக்கே பெருமை யென்பதில்லையமில்லை.

சமீபத்தில் பர்மா தேசத்தின் தலைநகரான இரங்கூனில் வியாபார சங்கமொன் றேற்படுத்தியிருப்பதாகவும், அதை நன்கு நடத்துவதற்குத் தக்கார் சிலர் முன்வந்திருப்பதாகவும் அறிந்து சந்தோஷிக்கிறோம். இதைப் பின் பற்றி மற்ற வியாபார ஸ்தலங்களிலும் சங்கங்களேற்பட்டு நமது தொழிலுக் குற்ற நன்மைகளைக் கவனிக்க வேண்டும். பினங்கு, சிங்கப்பூர், கொழும்பு, செய்கோன் முதலிய தலைநகரங்களிலும் இத்தகைய சங்கங்க ளேற்படவேண்டும்.

கல்வி விஷயத்தில் இன்னும் அதிகமான ஊக்கமும் விருப்பமு மேற்பட வேண்டும். ஆசாரங்களைக் காலத்துக் கேற்றபடி மாற்றுவதில் ஒவ்வொருவருக்கும் அக்கரை யேற்படவேண்டும். படித்தவர்களும் பணக்காரர்களும் பொது நன்மைகட்கு உண்மையோடு உழைக்கவேண்டும். அவர்கள் சமானிய குடும்பங்களின் நிலைமையைப் பற்றி நன்கு யாராயவேண்டும். அந்த நிலையில் தாங்கள் இருப்பதாக நினைந்து யோஜிக்கவேண்டும். அப்போது தான் திருத்தங்களின் அவசியம் விளங்கும்.

இப்படியே ஒவ்வொரு நாளும் புதிய புதிய நன்மைகளைப் பெற்று நமது ஜாதியார் அபிவிருத்தியடைந்து சிறப்புற்று வாழும்படி எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவாராக.

---

மல்குக வேத வேள்வி வளங்குக சுரந்து வானம்
பல்குக வழங்க ளெங்கும் பரவுக அறங்கள் இன்பம்
நல்குக உயிர்கட் கெல்லாம் நான்மறைச் சைவ மோங்கிப்
புல்குக உலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க.

முற்றிற்று.

